ஸ்வரம் கானத்துக்கு உறுதியான இயல்பைக் கொடுப்பதால் (மாஸ பாட்டு, யாரபதி=தரிக்கிறது, உறுதியாயிருக்கச் செய்கிறது) 'மாமயாம' என்று பெயரிட்டார்கள். அதற்கு 2 சுருதி. அது அனுதாத்தம். அதை G என்று குறிப்பிடுவோம்.

6. பின்பு G-க்கு 2/3 அதாவது 64/81×2/3=128/243 ஒரு ஸ்வரஸ்தானம். அந்த ஸ்வரம் மேல் ஷட்ஜத்துக்கு நெருங்கிக் கீழாக அமர்ந்திருப்பதால் (நிஷத் கீழாக அமர்தல் to sit or settle down) அதற்கு நிஷாதமென்று பெயரிட்டார்கள். அதற்கும் 2 சுருதி. அது அநுதாத்தம். அதை M என்று குறிப்பிடுவோம் இவ்விதமாக பின்னத்தொகை (fractions)களின் வரிசைப்படி

(1) S ஷட்ஜம் 1 = சுருதி 4
(2) R ரிஷபம் 8/9= ,, 3
(3) G காந்தாரம் 64/81= ,, 2
(4) M மத்தியமம் 3/4= ,, 4
(5) P பஞ்சமம் 2/3= ,, 4
(6) D தைவதம் 16/27= ,, 3
(7) N நிஷாதம் 128/243=,, 2

இந்த 7 ஸ்வரங்களின் மொத்தத்தில் 22 சுருதிகளும் அடங்கி விட்டபடியால் கானத்தில் (ஸப்த) ஏழு ஸ்வரங்களுக்குமேல் கிடையாது.

இந்த ஸ்வரஸ்தானங்களை நிர்ணயிக்கையில் மேற்கண்ட (fractions) பின்னத்தொகைகளில் சில (complex) தலை சுற்றுவனவாக இருக்கின்றனவென்று நினைத்து அவைகளுக்குப் பதிலாக எளிய பின்னத்தொகைகளைக் கற்பித்து முறையே $\frac{1}{1}$, $\frac{8}{9}$, $\frac{4}{5}$, $\frac{3}{4}$, $\frac{2}{3}$, $\frac{3}{5}$, $\frac{8}{15}$ என்று மேற்தேசத்தாரின் மற்றொரு கொள்கையினர் கைக்கொண்டிருக்கிறார்கள். இதினால் ஸ்வரங்களுக்குச் சுருதிபேதம் ஏற்பட்டு ஆதி ஸ்வரமாகிய (fundamental note) ஷட்ஜத்துக்கும் அவைகளுக்கும் (proportion) தாரதம்மியம் வேறுபடுவதால் சரியான ஸ்வரங்கள் ஸ்புரிக்கவில்லை. அவைகளினலமைந்த ஹார்மோனியம் முதலிய வைகளுடைய நாதங்கள் இனிமையாயில்லாதிருப்பதற்கு அதுதான் காரணம். ஆகவே Indian Scale, சராசரி Scale, (Western) Ordinary Scale என மூன்றுமுறைகள் சொல்லப்பட்டன.

(இன்னும்வரும்) பி. எஸ். சுப்பிரமணிய அய்யர்.

# தென்னை, பனை மரத்து வண்டுகள்.

இரண்டுதினுசு வண்டுகள் தென்னமரங்களையும் மற்றப் *பனைவர்க்கங்களையும் பீடித்து அச் செடிகளுக்கு மிக நஷ்டத்தை உண்டாக்குகின்றன. அவைகளில் ஒன்று, தமிழில் "தேன்னைவண்டு" என்றும், மலையாளத்தில் "சேள்ளு" என்றும் சொல்லப்படுகின்றது. அது தலையில் ஒரு கொம்பையுடைய கறுப்புவர்ணமுள்ள ஒருபெரிய வண்டு. இது குருத்து ஓலைகளையும் மரத்தின் மண்டையிலுள்ள மட்டைகளையும் துளைத்து நாசமாக்கும். இவ்வண்டுகள் இளந் தென்னமரங்களைத் துளைத்து ஜாஸ்தி நாசமாக்குவதைப் போல் முற்றினமரங்களைக் கெடுப்பதில்லை. இவைகள் செத்துப்போன அடிமரங்களிலாவது அல்லது எருக்குழிகளிலாவது முட்டைகளிடும். அவைகளிலிருந்து புழுக்கள் வெளிவந்து, அழுகும் வஸ்துக்களைத் தின்று பெரிதாகின்றன. இப்புழுக்கள் நாளாவட்டத்தில் மேற்சொன்ன வண்டுகளாக உருமாறுகின்றன.

வேறொருவித வண்டு தமிழில் "சேவ்வண்டு" என்று சொல்லப்படும். இது முன்சொன்ன கறுப்புவண்டைவிடச் சிறிதானது. இதைஅதனுடைய நீண்ட வளைவுள்ள மூக்கால் கண்டறிந்துகொள்ளலாம். இது பனைகளின் உச்சிகளில் சாதாரணமாய்த் தென்னை வண்டாலாவது அல்லது பனைமரம் ஏறுகிறவர்களாலாவது செய்த வடுப்பட்ட இடங்களில் முட்டைகள் வைக்கும். இதிலிருந்து வெளிப்படும் புழுக்கள் உச்சிமரத்தைத் துளைத்துச் செடிகளைக் கொன்றுவிடும்; இப்புழுக்கள் நார் இழைகளைக்கொண்டு ஒரு கூடுகட்டி அதில் ஸ்தம்பித்திருந்து சுமார் இரண்டுவாரங்களில் உருமாறி வண்டுகளாகின்றன.

## இவைகளின் கேடுதிகளை மாற்றக்கூடிய பிரயத்தினங்கள்:

1. தென்னைவண்டு, தான் ஜாஸ்தி கெடுதி செடிகளுக்குச் செய்யாவிட்டாலும், செவ்வண்டினல் உண்டாகும் நஷ்டத்துக்குக் காரணபூதமாயிருக்கிறது. இந்தத் தென்னை வண்டை அனேகஇடங்களில் தற்காலம் மரங்களிலிருந்து எடுப்பதைப் போல் வெகு சுலபமாய் ஒரு வண்டு எடுக்கும் இருப்புமுள் ஊசிகொண்டு எடுத்து விடலாம்.

2. இவ்வண்டுகளை அப்புறப்படுத்திய பின் அவைகள் துளைத்திருக்கும் துளைகளைத் தாரினல்தடவி மண்கொண்டு மூடிவிடுவதுடன், பனையேறிகள் மரங்களில் செய்திருக்கும் வடுக்களிலும் மேற்சொன்ன தாரைத் தடவ

* தென்னை, பனை, கமுகு, ஈச்சை முதலியன பனைவர்க்கத்தைச் சேர்ந்த மரங்களாகும்.

வேண்டும். இப்படிச் செய்யாவிட்டால் சேவ்வண்டுகள் மரங்களிலிருக்கும் காயங்களில் முட்டைகளைவைத்து நாசமாக்கிவிடும். இவ்வண்டுகள் முட்டை வைத்தபின் மரங்களைச் சுலபமாய்க் காப்பாற்ற இயலாது.

3. பொடிமணலும் உப்பும் சமபாகம் கலந்து ஒரு வருஷத்திற்கு இரண்டுதடவை மரங்களின் உச்சியில் மட்டைகளுக் கிடையே கொஞ்சம் போடலாம். இதனால் தென்னைவண்டைத் துரத்திவிட ஏதுவுண்டு.

4. செவ்வண்டினால் பீடிக்கப்பட்ட மரங்கள் திரும்பவும் பிழைக்கமாட்டா. ஆகையால் அவைகளைத் தாமஸமின்றி வெட்டிவிடவேண்டும். இந்தப் புழுக்களோடு இந்த மரத்தின் உச்சியையும் அழித்திடவேண்டும். இல்லாவிட்டால் இதிலிருக்கும் புழுக்கள் பின்னால் வண்டுகளாக மாறிப் புது மரங்களை நாசமாக்கும்.

5. ஒருதோப்பில் செத்துப்போன மரங்களை அப்போதைக்கப்போது வெட்டிக் கீறியுடைத்துக்காயப்போடவேண்டும். அப்படிக்கில்லாமல் அவைகளை அழுகவிடவே கூடாது. ஏனென்றால் அழுகும் பதார்த்தங்களிலும் இடங்களிலும் தென்னைவண்டு பல்கிப் பெருகும். தோட்டத்துக்குள் எந்த விதமான வஸ்துவும் அழுகிக் குவிய இடங்கொடுக்கக் கூடாது.

6. சில இடங்களில் தென்னமரத்துச் செவ்வண்டின் புழுக்கள் அடி மரத்திலிருந்து உள்ளேசென்று மரத்தைக் கெடுக்கிறதென்ற அபிப்பிராயம் இருக்கிறது. ஆகையால் மேல்தரையிலிருந்து சிலஅடிகளுக்குமேல்மரத்தைத் துளைப்பது வழக்கமாயிருக்கிறது. இவ்வித அபிப்பிராயம் தப்பானது. மேற்சொன்னபிரகாரம் மரங்களைத் துளைப்பது அதிகநஷ்டத்தை யுண்டுபண்ண ஏதுவாகும். ஆகையால் அப்படிச் செய்யவே கூடாது.

மேற்சொன்ன இரண்டுவண்டுகளின்நாசமும் ஒன்றைஒன்று பொருத்ததாயிருக்கிறது: தென்னைவண்டு, நன்றாயிருக்கும் உச்சிமரங்களில் துளைகளையுண்டாக்கிச் செவ்வண்டு அதில்வந்துசேர இடத்தை யுண்டாக்குகிறது. செவ்வண்டுகளினால் செத்துப்போன மரங்கள் தென்னைவண்டுகள் பல்கிப்பெருக நல்ல வாசஸ்தானமாகிறது. ஆகையால் மேற்சொன்னபடி முன்ஜாக்கிரதையோடு கவனம்செலுத்தாவிட்டால், இவ்வண்டுகளால் பீடித்த தென்னந்தோப்பில் மரங்கள் நாளாவட்டத்தில் ஒன்றுக்குப்பின் ஒன்றாய் நாசமாவதைத் தடுக்கமுடியாது.

ஸி. ஏ. பார்பர்,
சர்க்கார் ஸ்தாவர சாஸ்திரி.

## சமாசாரம்.

---

மதுரை இராமநாதபுரம் ஜில்லாக்களில் உள்ள பிரஹ்மஞாந கிளைச்சங்கங்களின் மஹாசபை:—சென்ற ஜூலை௴ 22, 23-ம் தேதிகளில்இராமநாதபுரத்தில் சங்கரவிலாஸம் என்ற முகவை ஊரணிக்கு அடுத்த பங்களாவில் கூடியது. சபையைச்சேர்ந்த மெம்பர்கள் 20 பெயர்கள் கூடினார்கள். சபையைச் சேராதவர்கள் 100 பெயர்களுக்குமேல் இரண்டு தினமும் வந்திருந்தார்கள். பிரஹ்ம ஸ்ரீ ப. நாராயண அய்யர் அவர்கள் அக்கிராசநம் வகித்தார்கள். இராமநாதபுரம் ராஜா மகா-ள-ள-ஸ்ரீ ராஜ ராஜேசுவர ஸேதுபதி அவர்களும், ஸப்டிவிஷன் ஜமீந்தாரும், மதுரைத் தமிழ்ச்சங்கம் ஸ்தாபகரும் அக்கிராஸநாதிபதியுமான மகா-ள-ள-ஸ்ரீ பாண்டித்துரைசாமித்தேவரவர்களும் வித்துவான் மகா-ள-ள ஸ்ரீ ராகவய்யங்காரவர்களும் வந்திருந்தார்கள். எல்லாரும் ஷை சபையை ஆதரித்தார்கள். அடியிற்கண்டபடி உபந்நியாஸங்கள் நடந்தன. இராமநாதபுரம் கிளைச்சபையாரும், முக்கியமாய் அதன் காரியதரிசியான மகா-ள-ள ஸ்ரீ காளஹஸ்தி அய்யரவர்களும்விருந்தோம்பல் என்ற தர்மத்தை நன்றாய் நடத்தினார்கள். எல்லாம் சுபகரமாக நடந்தது. முதல்நாள் நடந்த உபந்நியாசங்களின் விவரம்:- முதன்மையில் சிறுவர்கள் மூவர் தேவார ஸ்தோத்திரம் பாடினார்கள். இராமநாதபுரம் ராஜவம்சத்தைச் சேர்ந்த மகா-ள-ள-ஸ்ரீ வேலுசாமித்தேவரவர்கள்,சபையாரின் நல்வரவைப் பற்றி அழகாய் உபசரணை செய்தார்கள். பிரஹ்மஞானம்என்பதைப்பற்றியும், நம் தேசத்திற்கு பிரஹ்மஞாந சபையினாலுண்டான பிரயோஜநத்தைப் பற்றியும், விஸ்தாரமாய் அக்கிராஸநாதிபதி உபந்நியாஸம்செய்தார்கள். பெரிபகுளம் மகா-ள-ள-ஸ்ரீ சுந்தரராஜ அய்யரவர்கள் பிரஹ்மஞாந சபையைப் பற்றி உபந்நியாஸம் செய்ததில், நம்மவர்கள்ஊக்கமும் விடாமுயற்சியும் கைப்பற்றி நடக்கவேண்டியதென்று வற்புறுத்தி உரைத்தார்கள். இராமநாதபுரம் பண்டிட் எம். ராகவ அய்யங்காரவர்கள் ஸ்ரீ சடகோபஆழ்வாரைப் பற்றி வெகு ஆராய்ச்சியுடனே விஸ்தாரமாய் உபந்நியாஸம் செய்தார்கள். ஸ்ரீமாந். பாண்டித்துரைசாமித் தேவரவர்கள் "சைவ சமயத்தின் உயர்வைப்"பற்றி உபந்நியாஸம் செய்ததில் எல்லாச் சமயங்களும் சைவ ஸித்தாந்தத்தில் அடங்கும் என்றும், அதன் உபதேசங்களும் அநுஷ்டானங்களும் ஸோபாநக்கிரமமாக (ஏணியின் முறையாக) அறிவின்மிக்கார் முதற்கொண்டு அறிவில் ஏழைகள் ஈறாக யாவருக்கும் பிரயோஜநமாகும்படியாக பல துறைகளாக நடைபெறுகின்றனவென்றும் விஸ்தாரமாய்ச் சொன்னார்கள். மகா-ள-ள-ஸ்ரீ A. ரங்கசாமி அய்யரவர்கள் பிரஹ்மஞாந சபையால் நம்தேசத்திற்கு உண்டாயிருக்கும் இலாபத்தைப்பற்றியும் இனி உண்டாகக்கூடும் இலாபத்தைப்பற்றியும் உபந்நியஸித்தார்கள்.

எனங்குடி ஸ்ரீமாந் இராமச்சந்திர நாயக்கர் அவர்கள் மந்திரோச்சாரணம் சரியாய்ப் பயன்படும் முறையைப்பற்றி விஸ்தாரமாய் உபந்நியஸித்தார்கள். அன்றிரவு ஸ்தூலசூக்ஷ்ம சரீரங்களைப்பற்றியும் கிரகங்களின் கதியைப்பற்றியும், சூரிய மண்டலத்தைப்பற்றியும் நிழல்படங்கள் மூலியமாய் மதுரை, ப. நாராயண அய்யரவர்களும், கும்பகோணம் டாக்டர் ஆர். ஸி. கிருஷ்ணசாமி அய்யரவர்களும் உபந்நியாசம் செய்தார்கள்.

இரண்டாம் நாள் நடந்த உபந்நியாசங்களின் கிரமம்:—

சன்மார்க்கத்தைப்பற்றி ப. நாராயண அய்யரவர்கள்செய்த உபந்நியாஸத்தில்,வேதாந்தம், சைவசித்தாந்தங்களின் ஒற்றுமைகளைப்பற்றி தானென வேதாந்தம் தானேனென்னும் ஸித்தாந்தம் என்ற திருமூலரின் வாக்கியத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு விஸ்தாரமாக உபந்நியாஸம் செய்தார்கள் டாக்டர் ஆர். ஸி கிருஷ்ணசாமிஅய்யரவர்கள் மனுஷ்ய சரீரத்தின் உற்பத்தியின் அர்ப்புதத்தைப்பற்றித் தெளிவாய் யாருக்கும்புலப்படும்படியாய் உபந்நியஸித்தார்கள். பெரியதளம் சுந்தரராஜ அய்யரவர்கள் புநர்ஜந்மத்தைப் பற்றி, விரிவானஉபந்நியாஸம் செய்தார்கள். இராமநாதபுரம் சமஸ்தான வித்துவான் பண்டிட், ஆர். இராகவய்யங்கார்அவர்கள் புருஷப்பிரயத்தனமும் ஈசுவராநுக்கிரஹமும் என்பதைப்பற்றித் திருவாய் மொழிமுதலான கிரந்தங்களினின்று பலபாசுரங்களை மேற்கோளாகக்காட்டி உபந்நியாஸம் செய்தார்கள். ஸமாப்தியாக அக்கிராஸநாதிபதி செய்த உபந்நியாஸத்தில் தபஸ், ஸ்வாத்தியாயம், பிரவசநம், ஈசுவரப் பிரணிதாநம் என்று 4 விதமாக ஒவ்வொரு அறிவுள்ளவன் வாழ் நாள் நடைபெறவேண்டிய உத்தரவாதத்தைப்பற்றி வற்புறுத்திச்சொன்னார்கள். எல்லா உபந்நியாஸங்களும் தமிழ்ப் பாஷையிலேயே நடைபெற்றன.

அடுத்த சபையானது அக்டோபர் அல்லது நவம்பர்மீ௴த்தில் பரம்பக்குடியில் நடத்தப்பெறும்.

---

திருவண்ணாமலையில் பிரஹ்மஞாநக் கிளைச்சபைகளின் கூட்டம்:— சென்ற ஜூலை௴ 22, 23ம் தேதிகளில் கூடலூர் ஜில்லாவிலுள்ள பிரஹ்மஞாநக் கிளைச்சபைகளின் கூட்டம் ஸ்ரீமாந். Brooks என்பார் அக்கிராஸநத்தின் கீழ் நடைபெற்றது.

பத்திராதிபர்.



---

யாழ்ப்பாணம் ஸ்ரீமாந். இராமநாதன் அவர்கள் ஆத்மாவை அறியும் பழக்கமுறையைப்பற்றியும் அதின் பயிற்சியைப்பற்றியும் இந்தியா தேசத்திலும் மேல்நாட்டிலும் நடைபெறும் அநுஷ்டான முறைகளைப்பற்றியும், விரிவான ஒரு உபந்நியாஸம் மதுரை பிரஹ்மஞாந மந்திரத்தில் சென்றமீ௴ 28உ வெள்ளிக்கிழமை சாயங்காலம் ஒன்றரைமணிகாலம் ஆங்கிலத்தில் செய்தார்கள். உபந்நியாஸத்தின் சில முக்கிய அம்சங்கள் இதில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

விவிலிய நூலில் முக்கியமாகப் புதிய ஏற்பாட்டினின்று அநேக ஞாந விஷயங்களை, நம் தேசத்தில் அநுஷ்டிக்கப்படுகிற கோட்பாடுகளுக்கு ஒற்றுமையுள்ளனவாக எடுத்துக்காட்டினர். பராநந்தா என்ற பெயரை வகித்துக் கொண்டு St. Mathew's, St. John's என்ற இயேசு கிறிஸ்து நாதரின் திவ்வியசரித்திரங்களுக்கு உயர்ந்த பாஷ்யம் செய்தவர் இவரே. அவர் உபந்நியஸித்த விஷயங்கள் முக்கியமாய் அப்புத்தகங்களினின்றே எடுத்து வியவஹரிக்கப்பட்டன. ஈசுவரன் அறிவுமயன், அன்பே அவரது ஸ்வரூபம் என்பதைத் தெளிவாய் விளக்கினர். "Christ" என்றால் 'ஆத்மா' என்பது பொருள். "Christ" என்னும் தத்துவம் பெறுதல் என்றால் ஆத்மாவின் மலர்ச்சியாம், மெய்யுணர்வு பெறுதலாம். கிறீஸ்து ஈசுவரனின் ஒரே புத்திரன் என்று சொல்லுதல் பிழையாம். அவ்விதம் மெய்யுணர்வு பெற்றவர்கள் பலராம். "Resurrection" என்ற மொழியை மேல்நாட்டார் விபரீத அர்த்தம் பண்ணுகின்றார்கள். அது நம் தேசத்தில் ஞாநம் பெற்று துவிஜனாதல் என்பதேயாம். ஆத்மப்பயிற்சிமுறை இதுவாம். யாவருக்கும், சுயநலம் பாராட்டியே கர்மம் செய்வது, இயல்பாம். அதைச் சிறுகச் சிறுக மாற்றி உற்றார், ஊரார் முதலிய அயலாரிடம் அன்புவைத்து அவர்கட்கும் உபயோகமாகக் கர்மம் செய்தல் இரண்டாம் படியாம். பின்னர் ஸர்வ பூதங்களிடமும் ஜீவகாருண்ணியம் பாராட்டி, இவ்வன்பையே அகண்டாகார விர்த்தியாக அமையும்படி செய்தல், இதுவே மூன்றும் படியாம். இதுவே பேரன்பாகும்.

மதுரை ஸ்ரீ மீநாக்ஷி வித்தியாசாலையின் 6-வது வருஷத்திய விசேஷ உத்ஸவம் சென்றமீ௴ 29உ ஸ்ரீமாந். இராமநாதன் அவர்களது அக்கிராஸநத்தின் கீழ் நடைபெற்றது. அவருடைய பத்நியார் (ஒரு ஆங்கில ஸ்திரீ) குழந்தைகளுக்குப் பரிசுகளை விநியோகித்தனர். ஸ்ரீமாந். இராமநாதன் என்பார் பெண்கல்வியின் அவசியத்தைப்பற்றியும், நம் தேசத்திற்கு அது இன்றியமையாத ஸாதநம் என்றும், கீழ்த்தரமான

படிப்போமெட்டும் நிறுத்தல் அவ்வளவு பயனில்லை என்றும் உயர்தரப்படிப்பைக் கற்பிக்கும் கலாசாலைகளைப் பல இடங்களில் ஸ்தாபிக்கவேண்டுமென்றும், அப்போதுதான் மாது சிரோமணிகள் ஏற்படுவார்களென்றும், ஒரு இரதம் நேர்மையாகப் போகவேண்டுமென்றால் அதிற் பூட்டிய இரண்டு குதிரைகளும் ஒரே தன்மையனவாக இருக்கவேண்டுவது போலவும், ஒரு விஷயத்தைப் பார்க்கவேண்டுமானால் கண்களிரண்டும் நோக்கவேண்டுவது போலவும், ஒரு குடும்பம் அல்லது ஒரு தேசம் நடைபெற வேண்டுமானால் ஒரு பகுதியரான ஆண்பாலர் மாத்திரம் கல்விப்பயிற்சி பெறுதலும் மற்றப்பகுதியரான பெண்பாலர் அப்பயிற்சி பெறாதலும், வண்டி குடம் கவிழ்தல்போல குடும்பமும் தேசமும் கவிழ்ந்து சீர்கேட்டை அடையுமென்றும் விஸ்தாரமாக உபந்நியாஸம் செய்தார்கள். ஷெயார் யாழ்ப்பாணத்தில் 200 பெண்கள் பள்ளிக்கூடத்திலேயேதங்கி வசித்துக் கல்வியைக் கசடறக் கற்கும்பொருட்டு ஏராளமான திரவியம் செலவழித்து, சாஸ்திரமுறைப்படி ஒரு அரிய கல்லூரி ஏற்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். அதற்கு ஏற்ற கட்டிடம் நடைபெற்றுக்கொண்டுவருகிறது. ஆறுமாதத்திற்குள் கல்விகற்பித்தல் அதில் ஆரம்பிக்கப்படும் என்று அவர்கள் சொன்னார்கள். ஸ்ரீ மீநாக்ஷிவித்தியாசாலை என்ற பெண்பாடசாலை மதுரை பிரஹ்மஞான சபையாரால் 6 வருஷத்திற்கு முந்தி ஏற்படுத்தப்பெற்றது. விசாலமான இடத்தில் அழகான சட்டிடத்தில் அமைக்கப்பெற்றிருக்கிறது. இதில் இப்போது 265 குழந்தைகள் படிக்கின்றார்கள். நீதிநூல்கள், ஸநாதநதர்ம சமயமுறையின் நூல்களும், சங்கீதமும், சித்திரமெழுதலும், குடும்பத்திற்கு வேண்டிய கணக்கு வாய்ப்பாடுகளும் பின்னும் சில உபயோகமானவையும் சற்பிக்கப்படுகின்றன. எழு வகுப்புகள் 10 உபாத்தியாயரால் நடத்தப்பெறுகின்றன. நால்வர் ஸ்திரீகள். 6 பெயர்கள் ஆண்பாலர்கள். வருவாய்:-குழந்தைகளின்பள்ளிக்கூடச்சம்பளம் ரூ 228-0-0. சர்க்கார் உதவி மிகவும்சொற்பம் ரூ 533-0-0. தர்மசிந்தனை யுள்ளவர்களால் நன்கொடை ரூ 2,400. மனையிடமும் கட்டிடமும் சேர்ந்து இப்போதிய விலைக்கு ரூ 20,000 பெறும். பிரகிருதஸ்திதியில் இருக்கும் கட்டிடம்போதாமையால் நாலு வகுப்புகள் நடத்துவதற்காகக் கூரைக்கட்டிடங்களும் கட்டப்பட்டிருக்கின்றன. வருஷத்திற்கு ரூ 1, 00 வரை செலவாகின்றது. வரும்படி கொடுக்கக்கூடிய மூலதநம் இல்லை. மதுரைப்பட்டணத்தில் 1,20,000 ஜநங்களுக்கு மேலிருக்கின்றார்கள். பெரும்பான்மையார் ஹிந்துக்கள். இப்பள்ளிக்கூடம்போல 10 பள்ளிக்கூடங்கள் இந்நகருக்கு வேண்டுவன. அறிவுள்ள செல்வமுடையார் தங்கள் செல்வத்தை இத்துறைகளில் செலவழித்து வந்தால் அவ்விதம் ஏற்படும். அவைகளால் தேசம் நலம் பெறும்.

---

# பூர்ணசந்திரோதய அனுபந்தம்.

பகவான் பதஞ்சலி மஹரிஷி அருளிச்செய்த

## யோகசூத்திரம்.

(தமிழ் மொழிபெயர்ப்பு.)



ப. நா.

(இதன்பொருள்) "கௌந்தேய (ஒருவன் தனது வாழ்வின்) முடிவிலே எந்தெந்தப் பொருளை நினைந்து சரீரத்தை விடுகின்றனோ, அதனைப் பற்றிய பாவனையை எப்பொழுதும் பாவித்த, (ஸம்பாதித்துக்கொண்ட) வறாய் அதையே அடைகிறன்.

இவர்களுக்கு நீடித்த சுகமிருந்தாலும் அதற்கு முடிவு உண்டு. புநர்ஜந்மம் உண்டு. தவளைகளின் கருக்கள் மழையில்லாத காலத்தில் மண்ணோடு கலந்து அந்தர்கதமாக இருக்கின்றன. அவைபோல, இப்பிரகிருதிலயாள் அவியக்தத்தில் லயமடைகிறார்கள். பின்பு தவளைக் கருக்கள் வருஷகாலத்தில் உண்டாகுமாறுபோல, இப்பிரகிருதிலயாளானவர்கள், பூமியில் சரீரம் பெறுகிறார்கள். அவர்களுக்கு அந்த லயகாலத்தில் அந்த லயம் கைவல்லியத்திற்குச் சமமானதாகத் தோன்றும்; ஆனால், அது கைவல்லியமன்று.

உபாயப்பிரத்தியயம்:—புருஷ ஸாக்ஷாத்காரத்தை உண்டுபண்ணுதல் மநத்தின் பிரயோஜநம். மேற்கண்ட பிரகிருதிலய அநுபவங்களில் பற்றில்லாமல், மநம் மேல் நோக்கி, புருஷ தர்சநம் பெறுமாகில், அதுவே கைவல்லிய நிலை. இது தான் உபாயப்பிரத்தியயம். மஹத்தை அதாவது புத்தியை நான் என்று உபாஸிக்கிறவர்கள், 10,000 மந்வந்தரங்கள் லோகாந்தரங்களில் வசிப்பார்கள் என்றும், அவியக்தத்தை உபாஸிப்பவர்கள் 1,00,000 மந்வந்தரங்கள் லோகாந்தரங்களில் வசிப்பார்கள் என்றும், புருஷ தர்சநம் அடைகிறவர்கள் காலவரம்பைத் தாண்டுகிறார்கள் என்றும், வாயு புராணத்தில் சொல்லியிருக்கின்றன.

20. ஶ்ரத்³தா⁴வீர்யஸ்ம்ருʼதிஸமாதி⁴
ப்ரஜ்ஞாபூர்வக இதரேஷாம்॥

(முன் பிரஸ்தாபித்த தேவர்களின் ஸ்தாநம், பிரகிருதிலயஸ்தாநம் இவைகளைக் கருதாத)மற்றவர்களுக்கு சிரத்தை, வீரியம், ஸ்மிருதி, ஸமாதி இவைகள் மூலமாய் (கைவல்லியம் சித்திக்கும்.)

குறிப்பு:—சிரத்தை என்பது இங்கு, உயர்நலமமைந்த லக்ஷியமான கைவல்லியத்தை நோக்கான மநத்தின் தெளிவும், அதனால் மநத்தின் விசேஷ முயற்சியுமாம். புத்தி மேன்மேலும் தெளிவுபெற, வீரியம், அதாவது மந எழுச்சி, மந உத்ஸாகம் ஏற்படும்.

ஸ்மிருதி: அந்த உயர்நலமுள்ள லக்ஷியம் மநத்தில் தோன்றவே, அதை இடையறாது நினைத்தல், தியாநித்தல்.

ஸமாதி: அப்படி நினைத்தலால் மநம் ஐகாக்ரியம் கொள்ளும். மநச்சலநமின்மை உண்டாம்.

பிரஜ்ஞை: மநம் ஸமாதி பெறவே யதார்த்தமான ஞாநம், மெய்யுணர்வு உண்டாகும்.

இவைகளில் முன்னது, பின்னது உண்டாவதற்கு அநுகூலமாம்.

21. தீவ்ரஸம்வேகாநாமாஸந்ந:॥

தீவிரமான வைராக்கியமுள்ளவர்களுக்கு, ஸமாதிநிலை ஸமீபமாயுள்ளது.

குறிப்பு:—யோகிகள் 9 வித படிகளில் உள்ளவர்கள். உபாயங்கள், வைராக்கியங்களின் தாரதம்மியங்களினால் அப் படிகள் ஏற்படுகின்றன. உபாயம் மூன்று விதம்—மிருது, மத்தியமம், அதிமாத்திரை; வைராக்கியமும் மூன்று விதம். அதிமாத்திரையான உபாயம், அதிமாத்திரையான வைராக்கியம் இவையிரண்டும் கூடிய யோகிக்கு, இச்சூத்திரத்திற் சொல்லிய பிரகாரம், ஸமாதி ஸமீபத்திலுள்ளது. அதாவது ஸமாதி லாபம், ஸமாதி பலம் உண்டாகிறது.

சிரத்தை முதலிய உபாயங்களை அப்பியஸித்தாலும், ஸமாதி லாபம், ஏன் எல்லாரும் அடையவில்லை என்றால், மேற்கண்ட விதமாக, சிரத்தை முதலியவைகள் பல படிகளாக இருக்கின்றன. அப் படிகளின்கண்ணுள்ள யோகிகள் பல திறத்தாராக இருக்கின்றார்கள். உபாயம், வைராக்கியம் பல தாரதம்மியங்களை உடையன. அத் தாரதம்மியங்களுக்குக் காரணம், பூர்வஜந்மங்களில் ஏற்பட்ட ஸம்ஸ்கார விசேஷங்களாம். ஸம்பிரஜ்ஞாத ஸமாதியின் பலன் அஸம்பிரஜ்ஞாத ஸமாதியாம். அஸம்பிரஜ்ஞாத ஸமாதியின் பலன் கைவல்லியமாம்.



22. ம்ருதுமத்யாதிமாத்ரத்வாத் ததோऽபி விசேஷ:॥

மேலும் அத்தீவிரமான வைராக்கியம் மூன்று படிகளை உடையது, மிருது, மத்தியமம், அதிமாத்திரை. அவைகளில் பின்னது முன்னதை விட விசேஷமாம்.

23. ஈச்வரப்ரணிதாநாத்வா॥

ஈசுவரபக்தி விசேஷத்தினாலாவது:

குறிப்பு:—முன் 20-ம் சூத்திரத்தில் கண்ட உபாயங்களைத் தவிர, பின்வரும் சூத்திரங்களில் பிரஸ்தாபிக்கப்படும் இன்னும் பல உபாயங்களால் ஸமாதிநிலையைப் பெறலாம் என்பதைச் சொல்லுகிறார். இச் சூத்திரத்தில் ஈசுவரப் பிரணிதாநம், அதாவது இறைவனிடம் அன்பின் மிகுதியால் ஸமாதி லாபம், பலம் பெறலாம் என்பது சொல்லப்படுகிறது. வேறு வியாபாரமின்றி பக்தியினால் மாத்திரம் இச்சமாதி லாபம் சித்திக்கும். பக்தி என்பது மநம், மொழி, மெய்களால் நிகழ்வது. பக்தியினால் மாத்திரம் என்பதற்குப் பகவத்கீதை 9-ம் அத்தியாயம், 22-ம் சுலோகம் பார்க்க.

24. க்லேசகர்மவிபாகாசயைரபராம்ருஷ்ட:
புருஷவிசேஷ ஈச்வர:॥

கிலேசம், கர்மம், பலன்கள், ஆசயம் இவைகள் இல்லாத புருஷ சிரேஷ்டன் ஈசுவரனும்.

குறிப்பு 1:—முன் சூத்திரத்தில் சொன்ன ஈசுவரன் எத்தன்மையன் என்பதை, 24, 25, 26-வது சூத்திரங்களிலும், அவரைப் பக்திசெய்யும் முறையை 27, 28-லும், அதன் பயனை 29-லும் விவரிக்கிறார்.

குறிப்பு 2:—கிலேசம், 2-வது பாதம், 3-ம் சூத்திரத்திற் சொல்லியிருக்கிறபடி, அவித்தை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபிநிவேசம், என்பனவாம். கர்மங்கள் என்றால் அவைகளுக்குக் காரணமான நன்மை, தீமையாம். பலம் என்பது அக்கர்மங்களின் பயன்கள். அவை ஜாதி, ஆயுஸ், போகங்கள் என்பவையாம். ஆசயம் என்றால் பூர்வகர்ம வாசனைகள். இப் பூர்வகர்ம வாசனைகளே இந்த ஜந்மத்தில் கர்மங்கள் நடைபெறக் காரணமாகும். இவை சித்தத்தில் வய

ஸ்காரரூபமாக இருக்கின்றன. புருஷன் அவைகளின் பலன்களை அநுபவிப்பதால் அவனிடம் ஆரோபிக்கப்படுகின்றன. இது, சண்டையில் யுத்தவீரர்கள் ஜயித்தாலும் தோல்வியடைந்தாலும், அஜ்ஜயமும் தோல்வியும் இராஜாவைச் சேர்கின்றமைபோலவாம். இந்த போகம் சுத்தமாய்ப் பற்றாத புருஷ சிரேஷ்டன் ஈசுவரன்.

(1) வேதாந்திகள், ஜீவனுக்கு அஞ்ஞானதசையில், கர்த்திருத்துவம், போக்திருத்துவம் உணடென்பார். சாங்கியர்களும், பாதஞ்சலர்களும், கர்த்திருத்துவம் புத்திக்கும், போக்திருத்துவம் ஜீவனுக்கும் உண்டென்பார்கள். இந்த வித்தியாசம் கவனிக்கத்தக்கது.

(2) கைவல்லியத்தை அடைந்த மஹாபுருஷர்கள் அநேகர் உண்டு. ஆனால், அவர்கள் ஈசுவரர்கள் ஆகமாட்டார்கள் என்பதைக் குறிப்பிட, சிரேஷ்டன், விசேஷன் என்ற பதங்கள் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. அவர்களுக்கு முன் 3 பந்தங்கள் இருந்து, பின் அவைகள் விலகிவிட்டன. மூன்று பந்தங்களாவன :—

i. பிரகிருதிலயாளுக்கு : மூலப்பிரகிருதியால் மாத்திரம் பந்தம் உண்டு.

ii. விதேகாளுக்கு (தேவர்களுக்கு): ஷ பிரகிருதி விகாரங்களால் (மஹத், அஹங்காரம், பஞ்சதந் மாத்திரைகளால்) ஏற்படுகிற பந்தம் உண்டு.

iii. மேற்கண்டவர்களுக்குக் கீழானவர்களுக்கு தக்ஷிணதி பந்தமுண்டு. அதாவது பூத பௌதிகமான பந்தம்.

ஈசுவரனே எப்போதும் எக்காலத்திலும் பந்தம் இல்லாதவன். பிரகிருதிலயாளுக்கு முன்னும் பந்தம் இருந்தது. இனியும் பந்தம் நேரிடும். அவர்களுக்குப் பிரகிருதியாலேயே பந்தம் ஏற்படுகிறது.

(3) அத்தன்மையான புருஷசிரேஷ்டர் இருக்கிறார் என்பதற்குப் பிரமாணம் என்னவென்றால், சாஸ்திரம்தான். சாஸ்திரம் எப்படிப் பிரமாணமாகும்? அஃது உத்தமமானவர்களின் உயர்ந்த



மைமைந்த புத்தியின் அநுபவனாகம். அத்தன்மையான புத்திக்கும் சாஸ்திரத்திற்கும் உள்ள சம்பந்தம் அநாதி. இது முன்னது, இது பின்னது என்று நம்மால் அறியமுடியாது. அதனால் ஈசுவரன் என்றும் முக்தர், என்றும் எல்லாசம்பத்துமுள்ளவர். மேலான வரையும் சமானமான வரையும் இல்லாதவர்.* அவர் எல்லா ஐசுவரியத்துக்கும் முடிவு, எல்லை.†

(4) உலகத்தில் எல்லா வகையானும் ஸமமாயுள்ள இரண்டு வஸ்துக்கள் இல்லை. காலத்தினாலாவது வித்தியாஸம் ஏற்படும். அதனால் ஈசுவரன், மாணிக்கவாசகர் சொல்லுகிறபடி,

> "முன்புமாய்ப் பின்பு முழுதுமாய்ப் பரந்த
> முத்தனே! முடிவிலா முதலே!"

> "குறைவிலா நிறைவே! கோதிலா அமுதே!
> ஈறிலாக் கொழுஞ்சுடர்க்குன்றே!" —மாணிக்கவாசகர்.

தானய்த், தனிமுதலாய், என்றுமுள்ளவர்.

அத்வைத வேதாந்தத்தின் மோக்ஷத்திற்கும் பாதஞ்சலாள் கைவல்லியத்திற்கும் வித்தியாஸம் என்னவென்றால், பின்னதில் ஜீவபேதத்துவம், ஈசுவர பேதத்துவம் இருக்கின்றன. முன்னதில் இவைகள் அற்று அகண்டாகார விர்த்தியைப் பெறுதலே மோக்ஷமாம்.

---

* மனனக மலமற மலர்மிசை யெழுதரும்
மனனுணர் வளவிலன் பொறியுணர் வவையிலன்
இனனுணர் முழுநல மெதிர்நிகழ் கழிவினும்
இனனில னெனனுயிர் மிகுநரை யிலனே. —நம்மாழ்வார்.

† ஸ்வ)க்ஷாத் பூரஷாத் பரம் கிஞ்சித் ஸா காஷ்டா ஸா பரா கதி:। —கட உபநிஷத்

இதன்பொருள்—மூலப்பிரகிருதியைவிட புருஷன் மேலானவர். அவர் தான் முடிவு, எல்லை. அவரைவிட மேலானது வேறு ஒன்று மின்றும்

(5) ஐசுவரியம், ஞாந, இச்சா, கிரியா சக்திகளின் ஸம்பூர்ணமும், விசேஷ ஞாநமும், கிரியையும் ஈசுவரனிடம் எவ்விதம் இருக்கப்பாலன? ஈசுவரன் ஸதாமுக்தன். அவித்தைக்குப் புறம்பானவர். போகாபவர்க்கங்களுக்காக நம்மைப்போல அவருக்கு மநம் இல்லை. அப்படியானால் மநம் இன்றி, ஞாந கிரியா சக்திகள் எவ்விதம் அவரிடம் உள்ளன என்றால், ஜீவர்களிடம் உள்ள மநம் ஸத்துவ, ரஜஸ், தமஸ் உள்ளதாக இருக்கிறது. அவர் சுத்த ஸத்துவமான மநத்தைச் சுவீகரித்துக்கொள்ளுகிறார். தாமே அந்த சுத்த மநத்தில், ஞாந, கிரியை என்ற சக்திகள் அமைகின்றன. ஈசுவரன் இத்தன்மையான மநத்தைச் சுவீகரித்துக்கொளல், மனிதர்களைப்போல அவித்தையாலன்று. அதனால் இம்மநத்தில் ஸ்வாமி, ஸ்வாமித்துவம் இல்லை. ஜனங்களின்மேலுள்ள பரம கருணையால், தாபத்திரயத்தினின்று அவர்களைக் கரையேற்றும் பொருட்டு, ஞாந, தர்ம உபதேசத்திற்காக, தாமே சுத்த சத்துவமான மநத்தை ஏற்படுத்திக்கொள்ளுகிறார். சாதாரண மனிதன் அவித்தை வசமாகிறான். ஈசுவரன், அவித்தையின் ஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்டு, அவித்தையை, லோகோபகாரார்த்தம், ஸ்வீகரித்துக்கொள்ளுகிறார். இராமனின் வேஷம் பூண்ட ஒருவன், இராமனுக நடித்தாலும், அந்நாடக காலத்திலும், உண்மையில் தான் ராமன் அல்லன் எனத் தெரிந்திருப்பான்போல, ஈசுவரன் தாமே இந்த அவித்தையை வருவித்துக்கொள்ளுகிறார். இது அவருடைய தத்துவமன்று.

(6) ஜகத்திற்கு க்ஷேமம் உண்டாக்கவேண்டியதற்காக, ஸத்துவ குணத்தை ஈசுவரன் ஸ்வீகரித்துக்கொள்ளுகிறார்.* ஸத்துவ குணமிருந்தால்தான், ஜகத்திற்கு அநுக்கிரஹம் செய்யவேண்டுமென்று ஈசுவரனுக்கு இச்சையுண்டாகிறது. இவ்விதமாக அந்நியோந்நிய ஆச்ரய தோஷம் போலத்தோன்றுகிறது. உண்மையில் இல்லை. ஜகத்சிருஷ்டி, ஸம்ஹாரம் என்பவை அநாதியாக விருப்பதால், ஈசுவரனிடம் எப்போதும் ஸத்துவ குணம் உள்ளது. அடுத்த கல்பத்தில், சிருஷ்டி முறை இவ்விதமென்று சங்கல்பித்துக்கொண்டு, ஈசுவரன் ஒரு கல்பத்தின் சிருஷ்டியை ஸம்ஹரிக்கிறார். முன் சங்கல்பமானது மூலப்பிரகிருதியுடன் மஹாப்பிரளய காலத்தில் லய அவஸ்தையைப் பெற்றிருந்தாலும், சிருஷ்டி காலத்தில் அந்த ஸங்கல்ப வாசனையானது, பின்பு ஈசுவரனின் சத்வ சித்த ரூபமாகப் பரிணமிக்கின்றது. ஒருவன் மறுநாள் சூரிய உதயத்திற்கு முன் எழுந்திருக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் தூங்குகிறான். பின்பு, அவ்வெண்ணத்தின் காரியமாக, அந்தக் குறிப்பிட்ட காலத்தில் எழுந்திருக்கிறான். இதுபோலவே ஈசுவரன் சிருஷ்டி விஷயமும், ஈசுவரன் ஜகத்திற்கு அநுக்கிரஹம் செய்யவேண்டுமென்று இச்சையும், அதற்காகச் சத்துவ குணத்தைச் சுவீகரித்தலும், அதனால் சிருஷ்டியும், இவை அநாதியாகஇருக்கின்றமையால், மேல்கண்ட அந்நியோந்நியாச்ரய தோஷம் இல்லை.

(7) பிரளய காலத்தில், ஈசுவரனின்சித்தமானது, பிரகிருதியில் லயத்தை அடைகிறதில்லையென்று சிலர் சொல்லுவார். அது சரியன்று. பிரகிருதியில் லயத்தை அடையாமற்போனால், சித்தம் அதினின்று உண்டானதாகச் சொல்ல இயலாது. சித்தம் ஜடமாயும், ஈசுவரன் சேதநனுகவும் இருக்கின்றமையால், சித்தம் ஈசுவரனிடமிருந்து உண்டாவது என்று சொல்ல இயலாது. அதனால், மூன்றுவதாக வேறு ஒன்றைக் கற்பிக்க, மூன்றுவது இருப்பதற்குப் பிரமாணம் இல்லை. அதனால், ஈசுவரரின் சித்தமானது பிரதாநத்தில் லயம் அடைகிறது.

(8) மேற்கண்டபடி சொல்வதற்குப் பிரமாணம் யாது? சாஸ்திரம், அதாவது வேதம், ஸ்மிருதி, புராணங்கள், இதிஹாஸங்கள், இவைகள் ஈசுவரனின் உத்கிருஷ்ட சத்துவ குணத்தினின்று உண்டாயின. அதாவது மகரிஷிகளின் சுத்த மநத்தின் ஸத்துவ நிலையில் தோன்றிய விஷயங்கள் பின்பு வெளிவந்தன.

---

*அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூதாநாமீஶ்வரோऽபி ஸந்।
ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா॥

ப. கீ. 4-ம் அத்தியாயம் 6-ம் சுலோகம்.

*இதன்பொருள்-(நான்) பிறப்பற்றவனுனாலும், நாசமற்ற சுபாவமுள்ளவனுனாலும், பிராணிகளுக்கீசனுயிருந்தாலும், சொந்தமான சத்வாம்சமாயையைச் சுவீகரித்து, ஸ்வரூப சக்தியினுலே அவதாரஞ் செய்கிறேன்.

25. தத்ர நிரதிசயம் ஸர்வஜ்ஞபீஜம்

அவரிடத்தில் (ஈசுவரனிடத்தில்), எல்லாவற்றையும் அறியும் சக்தியா னது உயர்வற உயர்வுபெற்றது.*

1. இந்திரியங்களுக்குப் புறம்பாய் உள்ள விஷயங்களில், நடந்த விஷயம், நடக்கப்போகும் விஷயம், நடக்கிற விஷயம் இவைகளைத் தனியாகவோ, ஒருங்காகவோ, பெரிதாகவோ, அல்லது சிறிதாகவோ அறியும் சக்தியானது ஸர்வஜ்ஞபீஜம். அதாவது இந்த ஞானம் மேன்மேலும் பெருகிக்கொண்டுபோய் எந்த இடத்தில் முடிவு பெறுகிறதோ, அந்த ஞானஸ்வரூபி ஈசுவரன். ஞானம் பெருகிக்கொண்டுபோய் முடிவுபெறும் இடம் ஈசுவரன் என்றதினால், ஈசுவரன் இருக்கிறான் என்று சித்திக்கும். அப்போது, சப்தப் பிரமாணம் வேண்டுவதில்லையே என்றால், அநுமானத்தில் ஈசுவரன் உளன் என்று சாமாந்நியமான அறிவு மாத்திரம் உண்டா கும். அவன் குணங்களைப்பற்றியும், இத்தன்மையன் என்பதைப் பற்றியும் உள்ள விசேஷஞானம் சப்தப்பிரமாணத்தினால்தான் உண் டாகும்.

2. அவருடைய சிருஷ்டியினால் அவருக்கு யாதொரு பிர யோஜநமுமில்லை. பிராணிகளின் பிரயோஜநம் உண்டாகிறது பிராணிகளுக்கு ஞாந தர்மங்களை உபதேசிப்பதினால், "கல்பம், பிரளயம், மஹாப்பிரளயம் இவைகளில் ஏற்படும் ஜநந மரணங்களி னின்று பிராணிகள் கரையேறும்படி செய்வதுதான் ஈசுவரன் அடையும் பிரயோஜநம். இவ்விதமே பஞ்சசிகாசாரியார் முன்னர் அடியில் வருமாறு சொல்லியிருக்கின்றார்" "ஆதி வித்வான் (கபிலர்)

* குறிப்பு:—நாம் கிஞ்சிஞ்ஞன், அவர் ஸர்வஞ்ஞன். ஸ்ரீநம்மாழ்வார், ஸ்ரீமாணிக்கவாசகர், முதலாயினோரது பாசுரங்கள் இங்கு கவனிக்கத் தக்கன.

"உயர்வற வுயர்நல முடையவன் யவனவன்
மயர்வற மதிநல மருளினன் யவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே."—நம்மாழ்வார்.

"ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பமே"—மாணிக்கவாசகர்.

"வால் அறிவன்"—நாயனார்.

Registered No. M 878.



# பூர்ணசந்திரோதயம்.

சென்னை ராஜதாநியின் தென்பாகத்திலுள்ள பிரஹ்மஞாநக் கிளைச்சங்கங்களின் மஹாசபையின் ஆதரவின்மேல் மதுரையில் பிரசுரமாகி நடைபெறும்

மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

தொகுதி 2. { 1911ஆம் செப்டம்பர் 15உ விரோதகிருதுஆம் ஆவணிமீ 31உ } பகுதி 5.

...நாராயண அய்யர், B. A., B. L., F. T. S.
...அ. ரங்கஸ்வாமி அய்யர், B. A., B. L., F. T. S. } பத்திராதிபர்.

வருஷ சந்தா ரூ 2. தனிப்பிரதி அணா 4.

மதுரை
விவேகபாநு அச்சியந்திரசாலையில்,
பதிப்பிக்கப்பெற்றது.

## பொருளடக்கம்.


| | | பக்கம் |
|---|---|---|
| சுப்பிரமணியரும் அவருடைய உண்மையும் | சிவராமசுப்பிரமணியன் | ௧௫௭ |
| மனிதர் கடமை—து. வி. கோபாலசாமி நாயக்கர் | | ௧௬௬ |
| சுமதிஎன்னும் உத்தமியின்சரித்திரம்—எஸ். சாமிநாதஅய்யர் | | ௧௭௫ |
| வெள்ளியம்பலம் என்னும் ஞாநிகளின் சங்கமும் அதனின்று வெளிவரும் ஆசாரிய புருஷர்களும் | ப. நா. | ௧௭௮ |
| விஷ—திநம்—ஆர். எஸ். நாராயணஸ்வாமி அய்யர் | | ௧௮௭ |
| புத்தக வரவு—பத்திராதிபர் | | ௧௯௧ |
| சமாசாரம் | ஷை | ௧௯௨ |
| பதஞ்சலிமகரிஷி அருளிச்செய்த யோகசூத்திரம். | | |




ॐ

सत्यात् नास्ति परो धर्मः

# பூர்ணசந்திரோதயம்.


தொகுதி 2. { 1911ஹு செப்டம்பர்மீ 15உ விரோதகிருதுஹு ஆவணிமீ 31உ } பகுதி 5.


## சுப்பிரமணியரும் அவருடைய உண்மையும்.

1. சுப்பிரமணியர் என்றும், ஷண்முகர் என்றும், ஆறுமுகர் என்றும், கார்த்திகேயர் என்றும், குகன் என்றும்,குமரர் என்றும், இம்மூர்த்தியின் பெயர்கள் வழங்குகின்றன. இவரைப்பற்றிய ஒரு ஸஹஸ்ரநாமாவளியும் உண்டு. இவரைப்பற்றி ஸ்காந்தம் என்று பெயருள்ள ஒரு விஸ்தாரமான புராணமும் உண்டு. இவர் பரமேசுவரனின் இரண்டாம் குமாரர். மூத்தவர் கணபதிக்கடவுள். இவர் சூரபத்மாசுரன் என்னும் கொடிய அசுரனைப் பலபோர்கள் செய்து கடைமுறையில் வென்றார் என்பது பிரஸித்தமான புராண வரலாறு. இஃதை அடியில்வரும் திருமந்திரத்தில் குறிப்பித்திருக்கிறது.

எம்பெரு மானிறை வாமுறை யோவென்று
வம்பவிழ் வானோ ரசுரன் வலிசொல்ல
வம்பவள மேனி யறுமுகன் போயவர்
தம்பகை கொல்லென்ற தற்பரன் றானே.—திருமந்திரம்.

இது சுப்பிரமணிய ஆலயங்கள் எல்லாவற்றிலும், ஒரு பிரபல உத்ஸவமாகக் கொண்டாடப்பெறுகிறது. ஸம்ஸ்கிருதபாஷையில் கவிசிரேஷ்டனான காளிதாஸன் என்பார் இத்தேவருடைய உற்பத்தியை

ப்பற்றி குமாரஸம்பவம் என்ற நேர்த்தியான காவியம் ஒன்று எழுதியுள்ளார். கணபதியின் உபாஸனையும் ஆராதனையும் எவ்விதம் நம் தேசமுழுமையும் பரவியிருக்கின்றதோ, அவ்விதமே, சுப்பிரமணியக்கடவுளின் ஆராதனையும் உபாஸனையும் பரவியிருக்கின்றது. இவருக்கு அநேக பிரபலமான ஆலயங்கள் உள்ளன. முக்கியமாக தென்இந்தியாவில் அநேக க்ஷேத்திரங்கள் இருக்கின்றன. திருப்பரங்குன்றம், மதுரை (கூடல்குமரர்), திருச்சீரலைவாய் என்கின்ற திருச்செந்தூர், திருவாவினன்குடி என்கின்ற பழனி, குன்றக்குடி, திருவேரகம், என்கின்ற சுவாமிமலை, திருப்போரூர், திருத்தணிகை, மயிலம், கொல்லிமலை, பொதியமலை, கழுகுமலை, திருக்கோணமலை, கதிர்காமம், இத்தலங்கள் முக்கியமானவைகள்.* அவர் ஒவ்வொரு குன்றுதோறும் இருக்கிறார் என்பது ஞானிகளின் கொள்கை. அப்படியிருப்பதை குன்றுதோறுடல் என்று சொல்லுகிறது. எந்தச் சிவாலயத்துக்கும் கணபதி, சுப்பிரமணியர் என்ற பரிவார தேவதைகள் இன்றியமையாதவர்கள். இவருடைய மஹிமையைப்பற்றி அருணகிரிநாதர் என்ற ஞானியார் திருப்புகழ், திருவகுப்பு, கந்தர் அந்தாதி முதலிய பிரஸித்திபெற்ற அருமையான பாசுரங்கள் அடங்கிய பிரபந்தங்களை அருளியிருக்கின்றார். இவைகளின்கண் தமிழ்ப்பாஷையின் சிறப்பும், வலிமையும், வளமையும் விஸ்தாரமாக மனம் மகிழக் காணலாம்.

2. ஸ்ரீ சுப்பிரமணியரின் உண்மையைப்பற்றி பலவாறான விஷயங்கள் உள்ளன. அவைகள் அடியில் வருமாறு. தேகம் தேவாலயமாகப் பிரதீகப்படுத்தப் பெற்றிருக்கின்றது என்பதை அறிவுள்ளார் யாவரும் அறிந்தவிஷயம். இதை "உள்ளம் பெருங்கோவில், ஊன் உடம்பு சிவாலயம்" என்ற திருமந்திரத்தால் காண்க. சரீரத்தின்கண் ஆறு ஆதாரங்கள் இருக்கின்றன. இவைகள் சக்கரங்கள் எனப்படும்.

* டிஸ்டிரிக்ட்டு முன்சிபு ஸ்ரீமாந். சுப்பிரமணியபிள்ளை அவர்கள் பிரசித்தஞ்செய்திருக்கின்ற "திருப்புகழின்" முகவுரையில் 40 சுப்பிரமணிய ஸ்தலங்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன.



| ஆதாரங்கள். | இதனுள்ள தாமரையின் இதழ்கள் | அக்ஷரம். | தேவர். | சக்தி. |
|---|---|---|---|---|
| (1) மூலாதாரம். | 4 | ஓம்—ச | கணபதி | குண்டலினீ |
| (2) ஸ்வாதிஷ்டாநம். | 6 | ந—ர | பிரஹ்மா | ஸரஸ்வதீ |
| (3) மணிபூரகம். | 10 | ம—வ | விஷ்ணு | லக்ஷ்மீ |
| (4) அநாஹதம். | 12 | சி—ண | உருத்திரர் | உமை |
| (5) விசுத்தி. | 16 | வ—ப | மகேசர் | மஹேசுவரீ |
| (6) ஆஞ்ஞை. | 3 | ய—வ | சதாசிவன் | மனோன்மனி* |

இந்த 51 இதழ்களே, அக்ஷரங்களாக வடமொழி நெடுங்கணக்கில் அமைகின்றன. இந்த 51 இதழ்களின் முடிவில் சுத்தசிவம் இருக்கின்றது என்பது சைவஸித்தாந்தத்தின் அபிப்பிராயம். இதற்கு ஆதாரம் அடியில்வரும் பாசுரங்களாம்:—

"ஒன்பது வாசலும் ஒக்க அடைத்தால்
ஆனபதில் ஒன்றும் அரன்" —ஔவைகுறள்.

நாலும் இருமூன்றும் ஈரைந்தும் ஈராறும்
கோவில் நின்ற குறிகள் பதினாறும்
மூபங்கண்டு ஆங்கே முடிந்து, முதலிரண்டும்
காலங்கண்டான் அடி காணலுமாமே. —திருமந்திரம்.

நாலு, இருமூன்று, முதலியன ஒவ்வோர் ஆதாரத்தின் கண்ணுள்ள இதழ்களைக் குறிக்கின்றன. மேற்கண்ட ஆறு ஆதாரங்களுக்கும் ஆறு சக்திகள் உள்ளன. அவ்வாறு சக்திகளே ஓரே ஸ்வரூபமாகி, ஆறுமுகம், ஷண்முகம் என்று பெயரடைந்து சுப்பிரமணியராயின.

பிரஹ்மரந்திரத்தின்கண் இருக்கின்ற பஞ்சமுகமுள்ள சுத்தசிவத்தின் விவரமாவது:—

* ஸ்ரீமாந் சுந்தரமுதலியாரின் "அண்டபிண்ட ஸமத்துவ விளக்கம்" என்ற புத்தகத்தைப் பார்க்க. இவ்வட்டவணையிற் சொல்லியிருக்கும் தாமரை இதழ்களின் உண்மையைப்பற்றி, இப்பத்திரிகை முதலாம் தொகுதி 3[illegible]1-326 பக்கங்களைப்பார்க்க.

| | | | | |
|---|---|---|---|---|
| ஈசாநம் | ... | ... | ... | 1 |
| ஸத்யோஜாதம் | ... | ... | ... | 2 |
| வாமதேவம் | ... | ... | ... | 3 |
| அகோரம் | ... | ... | ... | 4 |
| தத்புருஷம் | ... | ... | ... | 5 |

ஈசுவரன் சிருஷ்டி கிருத்தியத்தில், ஆறு ஆதாரங்களினுள்ள சக்திகள்சேர்ந்து ஒருதலையாக இக்கடவுளாக (சுப்பிரமணியராக) மூர்த்திகரித்து ஏற்பட்டார்.

3. கணபதி, சுப்பிரமணியர், இவர்களைத் தரிசநம் செய்து வரம் பெற்றதின்மீது, சிவதரிசநம் கைகூடுமாகையால் 'தந்தைமுன்னவன்' என்ற பெயர் ஷண்முகனுக்கு முக்கியமாய் ஏற்பட்டது. இவ்வாறு ஆதாரத்தையும் யோகமுறைப்படி கடந்ததின்மீதுதான், பேரூர் (சிரசில்) உறையும் பெருமானைக் காணலாம். ஆத்மவிஷயமே ஆலயங்களில் பிரதீகப்படுத்தப்பெற்றிருக்கின்றது. ஆலயங்களின் பிரயோஜநம் மநப்பழக்கம் ஏற்படவே அன்றி வேறல்ல.

" காயக்குழப்பனை காயநன் றடனை
காலத்தினுள்ளே கமழ்கின்ற நந்தியைத்
தேவத்துளே எங்கும் தேடித்திரிவார்கள்
காயத்துள் நின்ற கருத்தறியாரே. " —திருமந்திரம்.

4. சுப்பிரமணியர், சூரபத்மாசுரனை வென்று, அவனை மயில் வாஹநமாக ஏற்படுத்திக்கொண்டது, யோகியானவன், உலகப்பற்றுக்களையெல்லாம் ஜயித்து, அவைகளைக் கீழ்ப்படுத்தி ஜீவன்முக்தனாக நடைபெறுகிறான் என்பதை உணர்த்துகின்றது.

5. சுப்பிரமணியர் என்ற பதத்திற்கு அழகாயுள்ள பிரஹ்மன் என்பது பொருளாம். புராண வரலாறு இதுவாம் :—

ஈசுவரனது நெற்றிக்கண்ணினின்று வீழ்ந்த ஆறு அக்கினிப் பொறிகளை அக்கினிபகவான் ஏற்றுக்கொண்டு சரவணப் பொய்கையில்விட அப்பொறிகள் ஆறு பிள்ளைகளாயின. அவைகளை அக்கினிக்கடவுளுக்கு சுகிர்தமான ஆறு கார்த்திகைக் கன்னிமார்கள் வளர்த்தார்கள். பின்னர் உமை அப்பிள்ளைகளைக் கட்டி உச்சிமுகர்ந்து பார்க்கும் காலத்தில், ஆறு தலைகளும், ஒரு உடலும், 12 கைகளும், இரண்டு பாதங்களும் உள்ள ஒரு மூர்த்தியாக ஏற்பட்டது.



கங்கைநதியில் அப்பொறிகள் விடப்பட்டனவென்றும், அவைகள் சரவணம் வளர்ந்த இடம் ஓரமாக ஒதுங்கினவென்றும் ,பின்பு குழந்தைகளாகக் கருத்தரித்து உண்டாயினவென்றும் வேறொரு புராண வரலாறு.

சரவணம்=ஹிருதயகமலம், ச=மூலாதாரம், ர=ஸ்வாதிஷ்டாநம், வ=மணிபூரகம், ண=அநாஹதம். குகன் என்றால் ஹிருதய குகையில் இருப்பவன்

ஆமே பிரான்முகம் ஐந்தோடு ஆருயிர்
ஆமே பிரானுக்கு அதோ முகமாறுளது
ஆமே பிரானுக்கும் தன்சிர மாலைக்கு
நாமே பிரானுக்கு நரர் இயல்பாமே. —திருமந்திரம்.

பரமசிவனுக்கு உள்ள ஐந்துமுகமும், கண்டத்தில் உள்ள அதோமுகமும், சேர்ந்து சுப்பிரமணியரானார். அதாவது ஜீவாத்மா ஆனார்; நரர் இயல்பின் பிரதீகமாக ஆனார். ஜீவாத்மா பரமாத்மாவின் குழந்தை. கண்டத்தில், ஜீவாத்மா அதிதேவதை என்பது யோகசாஸ்திரத்தின் துணிபு. பல சரீரங்கள் எடுத்து விருத்தியடைந்து, விகாரம்பெற்று உலகத்தில் பலவித விஷய நுகர்ச்சிகள் அநுபவிக்க, அவைகளால் காமனைகள் விருத்தியடைந்தன. சூரன் என்ற அசுரன் இக்காமனைகளின் பிரதீகம். பின்பு ஜீவன் யோகமுறைபற்றி பல ஆதாரங்கள் என்ற படியேறிக் குகைக்குள் உறைந்து, அதில் அநேக காலம் வசித்து, உருத்திரமூர்த்தியின் அநுக்கிரஹம்பெற்று, காமனைகளை ஜயித்தார். இக்காமனைகள் பல ஸ்வரூபங்கள் உள்ளனவென்பதைச் சூசிப்பிக்க, சூரபத்மாசுரன் பல ரூபங்கள் எடுத்து எடுத்து, ஜீவனான சுப்பிரமணியருடன் போர்புரிகின்றான். கடையில் மயில்ரூபம் எடுத்துக்கொள்ளுகிறான். அதைக் கொல்லாமல் அதன்மேல் ஒட்டியும் ஒட்டாமலுமாய்ச்சுப்பிரமணியர்

இருக்கின்றூர். அதாவது ஞாநியானவன் அக்காமனேகளை முற்றும் அழிக்காமல் அவைகளை வசப்படுத்திக் கொண்டு ஜீவன் முக்தனுக உலகில் ஜநங்களின் அநுக்கிரஹார்த்தமாகச் சஞ்ச ரிக்கிறுன். இவரே ஞாநபண்டிதன். ஞாநத்திற்கு இடையூறுக ளான அரிஷட்வர்க்கங்களைத் தொலைக்கும் மருந்தைக் கொடுக்கி ன்ற பரமபுருஷன். வல்லபை என்பாள் சூரனின் சகோதரி. அவளே குண்டலிநீசக்தி. அவளால் பல அசுரர்கள் உண்டாகின் றூர்கள். அவர்களை முற்றும் ஹதம்பண்ணச் சுப்பிரமணியரால் கூட வில்லை. பின்பு யோசித்தார். முதலில் பிரணவ உபாஸனே செய்ய வில்லை என்று அறிந்து, அதன்மேல் நாமரூப பிரபஞ்சத்தின் பீஜத் தின் பிரதீகமான பிரணவம், அதன் பொருளான கணபதியை, ஆரா தனேசெய்து, பலவித சங்கற்பங்களான இவ்வசுரர்களை வென்று வேரோடுகளைந்து எறிந்து மநச்சாந்தம் பெற்றூர்.

6. இவர்க்கு குமரர் என்ற பெயருண்டு என முன்னமேயே தெரிவித்திருக்கிறோம். சநத் குமாரர் நால்வர். சுக்கிரன் என்ற கிரகத்தினின்று, பூமியில் மனிதனின் மூன்றும் வர்க்கத்தினரான தாநவர்கள் நடைபெறுங்காலத்தில், அப்போது ஆண் பெண் என்ற விவஸ்தை ஏற்படாமல் இருந்த சமயத்தில், அதாவது, கிருதயுக அந்தியத்திலும்திரேதாயுகத்திலும்,இற்றைக்குச் சுமார்ஒருகோடியே அறுபதுலக்ஷம் வருஷங்களுக்கு முன்னர், கம்பீரமான ஞாநநாகங் கள் என்று பெயர்பெற்ற மஹாபுருஷர்கள் கிரியாசக்தியால் யோக சரீரங்களை எடுத்துக்கொண்டு, ஒரு கம்பீரமான ஞாநக்குழாமாக பூமிக்கு வந்தார்கள். அக்குழாத்தில் நால்வர் முக்கியஸ்தர். அவர் களே, சநத்குமாரர் எனப் பெயர்பெறுவார். அவர்களில் தலை மைபெற்றவர் மூலாதாரப் பொருள் (Root base of occult Hierarchy) என்றும், எங்கும் பரவும் ஆலவிருக்ஷம் என்றும், பர மத்தீக்ஷாகுரு வென்றும், வழங்கப்பெறுவர். இவரே நம் குமரக் கடவுள் ஆவர். அவருக்கு ஞாநஜோதிஸ் என்றும் பெயருண்டு. சாந் தோக்கிய உபநிஷத்தில் vii-26 இவரைப்பற்றி அடியில் வருமாறு.

" அந்நம் சுத்தமாயிருந்தால், மநத்தில் ஸத்வபாகம் ஏற்படும். மநம், புத்தி, விஞ்ஞாநம், ஸூக்ஷ்ம, காரண சரீரங்கள், சுத்தமாக ஏற்படில், முன்



ஜந்மாந்தரங்களின் ஸ்மரணே தெளிவுபெறும். முடிவில்லாத முன் ஜந் மங்களின் ஸ்மரணேயையும், இனி வருங்காலத்தின் அறிவையும் பெற்றுல், ஹிருதய கிரந்திகள் அறுபடும்; காமனேகள் அற்றுப்போம். பற்றற்றவ ஞவான். பரமாத்மாவின் ஸ்பரிசத்தால் இது நேரிடும். அத்தன்மை யான நிலைமைபெற்ற புண்ணியனுக்கு மஹாகுருவான பகவான் சநத்குமா ரர் தமஸுக்கு அப்பால் உள்ள பரஞ்ஜோதிஸை வெளியிடுவர். சுக்கிர னிடமிருந்து இறங்கின ஸ்கந்தர் இவராவர். தாரகாஸுரனே ஹதம்பண் ணின பரமசிவனினின்று உண்டானவர். தாரகாசுரனே மனிதரை ஞாந முறையில் மேற்போகாமல் தடுக்கின்றவன். ஸ்கந்தர் தாரக மந்திரத்தை உபதேசம் செய்பவர்.

7. இவரைப்பற்றி அடியில்வரும் விவரம் ஞாநவாசிஷ்டத் தில் உள்ளது:—

பரப்பிரஹ்மத்தின் எல்லையில்லாத அகண்டமான பிரதேசத்தில் பிரகிருத சிருஷ்டி கர்த்தாவான பிரஹ்மாவானவர், சமுத்திரத்தில் அலை யுண்டாவதுபோல, சுயேச்சையாக, சுயம்புவாக உண்டாயினர்.எல்லாச் சலந ங்களுக்கும் ஆதாரமான மையமாக ஏற்பட்டார். பெரியோர் கட்டளைகளை ஆக்ஷேபிக்காமல் முதன்மையில் ஜநங்கள் நடைபெற்றூர்கள். பின்பு அவ் வொழுக்கம் குறைந்தது, நான் என்ற அகங்காரம் மேலிட்டது. ஜநஸமூ கத்தில் குழப்பம் உண்டாயிற்று. இது பாலன் யௌவந பர்வத்தை அடை யும் காலத்தில் நிகழ்வது போன்றது. பின்பு பிரஹ்மா இந்நிலையை முன் பின் ஆலோசித்தார். என்னே (வசிஷ்டரை) சிருஷ்டித்தார். எல்லா ஞாந விஷயங்களையும் எனக்குக் கற்பித்தார். பூமிக்குப்போய் அறிவிலிக ளான மனிதவர்க்கத்தினர்க்கு ஞாநஉபதேசம் செய்யவும்,அவர்களுக்கு நல் வழி காட்டவும்,என்னே அனுப்பினர். என்னேப்போல அநேக ஞாநிகளையும் அவர் அனுப்பினர். அவர்களில் நாரதர் முதலியவர்கள் முக்கியமானவர்கள். நாங்கள் எல்லோரும் சநத் குமாரர் என்பவரின் தலைமைக்குட்பட்டு இவ்வு லகுக்கு வந்தோம். இவ்வுலகில் அந்த ஞாநிகள், அறிவில்லாது மதிமயங் கிய பலவிடங்களிலுள்ள ஜநங்களை நல்வழிப்படுத்தவும், தர்ம முறைகளை யும் நீதி நெறிகளையும் கற்பிக்கவும், மனிதர்களும் தேவர்களும் ஒருவரோ டொருவர் ஆதரவாயிருக்க யக்ஞாதிகளைக் கற்றுக்கொடுக்கவும், ராஜாக்களை நியமித்தார்கள். தர்மார்த்தகாமம் என்ற பிரகிருதி சம்பந்தமான மூன்று வித புருஷார்த்தங்களை அடையும்படியாக தர்ம சாஸ்திர முறைகளை ஏற் பாடு செய்தார்கள்.

இவரே உலகத்தில் உள்ள ஸ்தாவர ஜங்கமங்களான யாவற்றையும் விகாசமுறையில் நடத்திவருகின்றார். இவரே வெள்ளி அம்பலம் என்ற சித்தர்களின் மஹாசபையை ஆதியில் ஸ்தாபித்தவர். இவரே அதன் உயிராக இருப்பவர்.*

8. சுப்ரஹ்மண்யருக்கு, பால்யாவஸ்தையில், குழந்தையாக விளையாடும் பருவத்தில், முருகக் கடவுளென்ற பெயருண்டு. இதுபற்றிய பிள்ளைத்தமிழ்கள் என்றபிரபந்தங்கள் தமிழ் நாட்டில் ஏராளமானவை. அம்மூர்த்தியாக உபாஸனையும் ஆராதநமும் முக்கியமாய்த் தென்னிந்தியாவில், ஆரியருடைய சம்பந்தம்ஏற்படுவதற்கு முன்னரே, இருந்திருக்கிறதாகச் சிலரபிப்பிராயம். அது சரியாயிருக்கலாமென்று தோன்றுகிறது. ஏனென்றால், ஆரியர்கள் தென்னிந்தியாவில் முதல் முதல் பிரவேசித்தது சுமார் 20,000 வருஷங்களுக்கு முன்னரெனத் தெரியவருகிறது.† அதற்கு அவ்வாரியர்களுக்கு முன்பு திராவிடர்கள் தென்னிந்தியாவில் குடியேறி இருந்து நாகரீகம் பெற்றிருந்தார்கள். திராவிடர்களோ, அட்லாண்டிக் ஜாதியாரின் இரண்டாம் வகுப்பினரான தையித்தியர், லெமூரியரான தாநவர்களுடன்விவாகசம்பந்தம் பெற்று, அச்சம்பந்தத்தின் வழியில், திராவிடர்கள் உண்டானார்கள். அட்லாண்டிக் ஜாதியார் உலகில் தோன்றும் முன்னரே, சநத்குமாரர்கள் உலகில் தோன்றினார்கள். அதனால், இச்சநத் குமாரர்களில் சிரேஷ்டரான ஸ்கந்தரைப் பற்றிய பூஜையும், ஆராதனையும் திராவிட உலகத்தில், ஆரியர் வருமுன்னரே, ஏற்பட்டிருக்கலாமெனத் தோன்றுகிறது.

9. சுப்பிரமணியர் என்பது இனி உலகத்தில் ஜநிக்கப்போகின்ற, புத்தி தத்துவம்பெற்ற, 6-ம் மனிதவர்க்கத்தினரைச் சூசிப்பிக்கிறதாக எண்ணலாம். கணபதிதத்துவம்* எவ்விதம் 5-ம் தத்துவமாகிய மநத்தின் விகாஸத்தைத் தெரிவிக்கின்றதோ, அவ்விதம், சுப்பிரமணியர் என்ற பிரதீகம் 6-ம் தத்துவமாகிய புத்தியின் பூர்ணவிகாஸ நிலையைத் தெரிவிக்கின்றது. புத்தி தத்துவத்தின் லக்ஷணமாவது, வேற்றுமைப்படுத்தும் தன்மை நீங்கி, ஒருமைப்படுத்தும் தன்மை மேலாக மலரும் நிலைமையாம். அப்போது, மனிதனுக்கு எல்லாவஸ்துக்களைத் தன்னிலும், தன்னைஎல்லா வஸ்துக்களிலும் பார்க்கும்தகைமை ஏற்படும். ஈசோபநிஷத்மந்திரங்களில் †சொல்லியிருக்கும் உயர்நலம் அமைந்த நிலைமையைப் பெறுவான். இப்போது நாம் வழிபடும்சுப்பிரமணியக்கடவுள், இனிவரப்போகும் ஆறும் மனிதவர்க்கத்தின் (6th root race) அடையாளமாக லக்ஷியிக்கப்படத்தக்கவர். இனி ஜநிக்கப்போகும் ஆறும்மனிதவர்க்கத்தின ஆத்மபராளாய், ஆத்ம ஸந்துஷ்டாளாய், மெய்யுணர்வு பெற்றவர்களாய் இருப்பவராவர்.

ஓம் தத் ஸத்.

சிவராமசுப்பிரமணியன்.

---

## நன்மொழி.

107. வைராக்கியம்என்பது, ராகமின்மை, பற்றற்றநிலைமை, இம்மையிலும் மறுமையிலும், போகநுகர்ச்சியில்ஆசைப்படாதுஇருத்தல், விஷயங்களில் விருப்பும், வெறுப்பும், இல்லாமல்இருத்தல். வேண்டுதல் வேண்டாமை இல்லாமல் இருக்கும் மநோநிலை. இஃது உண்மை வைராக்கியம், போலி வைராக்கியம் என இருவகைத்தாம். போலி வைராக்கியம், யாதேனும் உலக சங்கடங்கள் உன் மநத்தை வசப்படுத்துங்கால், உண்டாகும். அப்போதைக்கப்போது இவ்விதம் வைராக்கியம் ஏற்பட ஆராய்ச்சியும் நிகழ்ந்தால், கடைமுறையில் உண்மையான வைராக்கியம் உண்டாகும். அதனால் நம்மநம் நேர்மை பெறும், சாந்தமடையும்.

---

*(குறிப்பு: இதிற்கண்ட விஷயங்கள், Babu Bhagavandoss's Science of Social Organisation என்ற புத்தகத்திளின்றும், Sir S. Subramania Aiyer's the Great White Brotherhood என்ற புத்தகத்தைத் தழுவியும் எழுதப்பட்டுள்ளன)

† (Note:— Vide Vol. 31, Theosophist P. 1073, 1074.)

*இப்பத்திரிகையின் முதலாம் தொகுதி 22-ம் பக்கத்தில் "கணபதியும் அவருடைய உண்மையும்" என்பதைப்பற்றிய விஷயத்தைப் பார்க்க.

† ஈசோபநிஷத்தின் 6-7 மந்திரங்களைப் பார்க்க.

# மனிதர் கடமை.

1. ஸர்வேச்வரன், வேதங்களாலும் முநிசிரேஷ்டர்களாலும் நாயன்மார்களாலும் ஆழ்வார்களாலும் கொண்டாடப்பெற்ற ஏற்றமுடைய அந்தமில் பேரின்பவீடாகிய பரமபதத்தில் இரத்நமயமான திருமாமணி மண்டபநடுவில் சீரிய அரியாசனத்தில் "அகலகில்லேனிறையுமென்றலர் மேல்மங்கையுறைமார்பா" என்றபடி "உடனமர்காதன்மகளிர், மணமகள் ஆயர்மடமகள்" என்கிற முப்பிராட்டிமார்களோடும் உபயவிபூதிக்கும் நிர்வாககனாய் எழுந்தருளியிருந்து, தானும், நிரதிசய ஆநந்த பூரிதனாய், அநந்த கருட விஷ்வக்சேநர் முதலான நித்யஸூரிகளையும், முக்தர்களையும், ஆநந்திப்பித்துக்கொண்டிருக்கவும்; இவர்களைப்போலவே பெத்தாத்மாக்களும், தன்னை அநுபவித்து நித்யநிரதிசய ஆநந்தமாகிய மகாசம்பத்தைப்பெற்று வாழுகைக்குப் பிராப்தியுண்டாயிருக்க, இவர்கள் அவ்வாழ்வைப் பெறுகைக்குத் தேடிக்கொள்ளவேண்டிய ஞாநம், பக்தி, வைராக்யாதிகளை எள்ளளவேனுங்கொள்ளாமல், அவைகள்கொள்ளுகைக்குறுப்பான அவயவாதிகளும் இன்றியே, அடியறியப்போகாத அநாதியாகிய மூலப்பிரகிருதியில் மூர்ச்சித்துறங்கி உருமாய்ந்து கிடக்கும் ஜீவகோடிகளைக்கடாக்ஷித்துத் தனியரைப்போல் நொந்து "பல்லுயிர்க்கும் யாக்கை கொடுத்தளித்தகோனே" என்றபடி பல்லுயிர்களுக்கும் அதனதன் அநாதிகன்மத்துக்கொத்தபடி பல்வேறுசரீரங்களைப் பல்பிறவியிலும் தந்தருளுகிறுன் என்பது நூற்றுணிபு.

2. இங்ஙனமாகவே அநுபவத்திலும், ஒரு வித்தினுள் உருமாய்ந்து கண்ணுக்கு விஷயமாகாது அடக்கியுறங்கிக் கிடந்த ஒரு ஜீவசக்தியானது மண்ணீர் முதலிய சேர்க்கையால் முன்னொருநாளும் காணப்படாதிருந்த முளைதோன்றிச் செடிகொடி, அல்லது மரமாகி, அதனிடத்து மொட்டுவிட்டுப்பிறகு மலராய்க் காயாய்க் கனியாய்ப் படிப்படியாக வித்தாய் விருத்தியாகி அடங்குவதுபோல, மூலப்பிரகிருதியில் உருமாய்ந்து கிடந்த ஜீவாத்மாக்களும் மேற்கண்டவாறு அதனதன் கன்மாநுசாரப்படி படிப்படியாக,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்



கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்ல சுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லா அநின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்து" என்றும்

"மொய்த்த வெந்தீவினையால் பல்லுடல்
தொறும் மூத்து" என்றும்

சொல்லுகிறபடி எண்ணில்லாத பல்பிறவியினும் "மாறி மாறிப்பல் பிறப்பும் பிறந்தும் செத்தும்" என்றபடி எண்பத்துநான்குலக்ஷம் யோநி பேதங்கள் ஒவ்வொன்றிலும், பல்லுடல் கொண்டு பிறந்து, இறந்து, புண்ணிய மேலீட்டினால், ஈற்றில் கடலைக் கையால் நீந்திக் கரைகண்டான் கதைபோல இம்மனிதப் பிறவியில், கூன் குருடு செவிடு முதலிய உடற்குறையின்றிப் பிறக்கப்பெற்றது, அரிதினும் அரிதாகும், இந்தமானிடப்பிறவி. இதுபற்றியே.

"அண்டசஞ் சுவேதசங்கள் உற்பீசம் சராயுசத்தோ
டெண்டருநா லெண்பத்து நான்குநூ றாயிரந்தான்
உண்டு பல் யோநிதோறும் ஒழிந்துமானிட துதித்தல்
கண்டிடிற், கடலைக்கையால் நீந்தினன் காரியங்காண்"
எனச் சித்தியாரும்,

எண்ணிரிய பிறவிதனின் மானிடப்பிறவிதான்
யாதினு மரிதரிதுகாண்" எனத் தாயுமானாரும்,
"அரிதரிது மானிடராதலரிது மானிடராயினும்
கூன்குருடு செவிடுபேடு நீக்கிப்பிறத்தலரிது"
என ஞாந வள்ளலாரும்

கூறியவை காண்க.

3. இனி மேற்கூறியவாறு, ஈசுவரனுடைய பரமகாருண்யத்தால் தந்தருளப்பெற்ற "ஊர்வன நடப்பன பறப்பன செயற்கொண்டிருப்பன முதற்றேகங்களத்தனையும், உடைய ஜீவவர்க்கங்கள் யாவும், ஆகாரம், நித்திரை, விருப்பு, வெறுப்பு, இன்பதுன்பம், முதலானவைகளில், மனிதனோடு சமமாகவிருந்தாலும், மாநம் அவமாநம் நன்மைதீமை என்பவைகளைப் பகுத்தறியும் அறிவினாலும், சுகதுக்க

ங்களை அநுபவிக்கும் முறைமையினாலும், தொழிலினாலும், மற்றஜீவவர்க்கங்களைவிட மனிதன் வேறுபாடுடையவனாயிருக்கிறான்; அன்றியும் கடவுளால் பொதுவாக எல்லா ஜீவவர்க்கங்களுக்கும் இயல்பாகவே தந்தருளப்பெற்ற இயற்கையறிவைக்கல்வி கேள்விகளினாலும், சத்சகவாசத்தினாலும், கூடிய செயற்கையறிவால் விருத்திசெய்து கொள்ளும் சக்தியும் மனிதனுக்குண்டு; இன்னும் கண்ணுக்குக்காணக் கூடாதவைகளையும், செவிக்குக் கேட்டறியக்கூடாதவைகளையும் ஊகித்தறியும் பேரறிவும் மனிதனுக்குண்டு. ஆகவே மனிதன் இயற்கையறிவோடு செயற்கையறிவையுங்கொண்டு நன்மை தீமைகளையும், அவைகளின்பலனாகிய புண்ணிய பாவங்களையும்,பகுத்தறிந்து வேண்டிய முயற்சிசெய்து இம்மைப்பயனை அநுபவிப்பதுமன்றி மறுமையில் "வாக்காய் மநத்தாய் மநவாக்கிறந்தவர்பால் தாக்காதே தாக்குந்தனி" என்றபடி மநவாக்குக்கெட்டாத தனிமுதலாகிய பரமாத்மாவையும் அறிந்து, நித்யநிரதிசயாநந்தத்தை அடைதற்குரியவனுமாகிறான். ஆதலால் இம்மைப்பயன் ஒன்றையே அடைதற்குரிய பசுபக்ஷிமுதலிய மற்றஜீவவர்க்கங்களைவிட, மறுமையும் பெறுதற்குரிய மனிதனே மேற்பட்டவனென்பது தெற்றெனவிளங்கும்.

4. இத்தகைய மேம்பாட்டினையுடைய மனிதப்பிறவியை அடைந்தும் "மின்னின் நிலையிலமன்னுயிராக்கைகள்" என்றும் "மின்னனைய பொய்யுடல்" என்றும் கூறியபடி, சரீரம் நிலையற்றதாயும், இருமையுமடையும் பெருமைபெற்ற பேரறிவுடைய "இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ ஏது வருமோ அறிகிலேன்" என்றபடி, இம்மனிதப்பிறவி அல்லாத இனி எந்த தாழ்ந்தபிறவி கிடைக்குமோ அதையும் அறியக்கூடாமையும், இருக்கின்றமையால், இம்மனிதசரீரம் உள்ளபோதே நிலையில்லாத இம்மைப்பயன்ஒன்றையே கருதி வீணே வாணாள் கழிக்காது,

"எடுத்த தேகம் இறக்குமு னேயெனைக்
கொடுத்து நின்னையுங் கூடவுங் காண்பனோ
அடுத்த பேரறி வாயறி யாமையைக்
கெடுத்த வின்பக் கிளர்மணிக் குன்றமே" என்றும்



"பொய்திகழு முலகநடையென் சொல்கேனென்
சொல்கேன் பொழுதுபோக்கே தென்னிலோ
பொய்யுட னிமித்தம் புசிப்புக் கலைந்திடல்
புசித்தபின் கண்ணுறங்கல்
கைதவம லாமலிது செய்தவ மதல்லவே
கண்கெட்டபேர்க்கும் வெளியாய்க்
கண்டிது விண்டிதைக் கண்டித்து நிற்றவெக்
காலமோ வதையறிகிலேன்" என்றும்

ஸ்ரீ தாயுமானார் மனமிளகிமுறையிட்டுக்கொண்டபடி, எடுத்ததேகம் இறக்குமுன்னே இவ்வுலகவாழ்க்கைக்குழைப்பதுபோலவே, பரவாழ்வுக்குரிய சாதநங்களைச்செய்து, இம்மனித யாக்கையாலாய பயனை எய்தகினையாதிருக்கும் நமதுஅறியாமையை என்னென்றுகூறுவது?

"இன்றுசாதல் நின்றுசாதல் அன்றியாரும் வையகத்து
ஒன்றிநின்று வாழ்தலின்மை கண்டுநீசர் என்கொலோ
அன்றுபா ரளந்தபாத போதையுன்னி வானின்மேல்
சென்றுசென்று தேவரா யிருக்கிலாவ வண்ணமே"

எனத்திருமழிசைப்பிரானும்.

"நீரிற்குமிழி இளமை, நிறைசெல்வம்
நீரிற்சுருட்டு நெடுந்திரைகள்—நீரில்
எழுத்தாக்கும் யாக்கை, நமரங்கா ளென்னே
வழுத்தாத தெம்பிரான்மன்று"

என வனையோரும் கூறும் திருவாக்குகளையும் இங்கு கவனிக்கத் தக்கது.

5. ஆகவே நமது வாழ்நாள்களில் ஒருநிமிஷங்கூட வீழ்நாள் கழிக்காமல்,இகவாழ்வுக்குழைப்பதில் விசேஷமாகச்செலுத்தும் ஊக்கத்தைப் பரவாழ்வுக்குழைப்பதிலும் பங்கிட்டுக்கொண்டு,அவ்வுழைப்பிற்குரிய முக்ய சாதநங்களாக தன்னைப்போலவே மேற்கண்டவாறு கடவுளாகிய பரம பிதாவினிடத்திலிருந்தே எல்லாச்சீவவர்க்கங்களும் சரீரம் தந்தருளப்பெற்று வந்திருப்பதால், நாம் யாவரும் ஒரே வயிற்றிற்பிறந்த சகோதரர் என்னும் சகோதர பாவம் உடைய

வராய், அங்ஙனம் யாவரும் சகோதரர்களாகவே சுகதுக்கங்களிலும் தனக்கெப்படியோ அப்படியே பிறருக்கு முண்டென்பதை யறிந்து, பரஹிம்சை, பரதிரவ்யாபகாரம், முதலிய தீச்செயல்புரியாமல், பிறர் துக்கத்தையும் தன் துக்கமாகப் பாவித்து "ஒல்லும்வகையா லறவினையோவாதே செல்லும்வாயெல்லாஞ்செயல்" என்றபடி, தன்னாற்கூடியவரையிற் பரோபகாரம்புரிந்துகளங்கமில்லாஉளங்கனிந்து, நம்மைப்படைத்த கடவுளின் ஆதிசங்கல்பத்திற்கு மாறின்றிப் பரலோகத்தில் நித்யநிரதிசயாநந்த வாழ்வைப் பெறுதற்குரிய யாவும் குறைவறப்புரிய முயலுவதே மனிதர் கடமையாம்.

6. இவ்வாறின்றித் தன் இகசுகமொன்றையே கருதியிருப்பானுயின், மறுமைக்குரியவைகளைச் செய்ய இயலாத பசுபக்ஷிகளுக்கும் மனிதனுக்கும் பேதமின்றி, அம்மனிதன் இகத்தில் யாவராலும் இகழப்படுபவனும், இம்மனித யாக்கையாற் பெறவேண்டிய பயனைத் தவறவிட்டவனும், மறுமையில் நரகத் துன்பங்களை யடையக் கூடியவனுகவுமாகிறுன்.

ஆதலால் இகபரவாழ்விரண்டையும் தேடவேண்டியதே, மனிதரிலக்கணமும் கடமையுமாமெனக்கொண்டு,அவைகளுக்கு வேண்டியதாய் மேற்கூறியவாறு யாவரிடத்தும் சகோதரவாஞ்சையுடன் தன்னால் கூடுமான பரோபகாரம் செய்தலே சிறந்தவழியாகும்.

இப்பரோபகாரமும் ஜீவகாருண்யமின்றி நிகழாது. ஜீவகாருண்யம் என்பது ஜீவர்களிடத்துக்காட்டும் இரக்கமாம். காருண்யம், இரக்கம், அருள், எனினும் பொருள் ஒன்றே. கொல்லாமை, வெகுளாமை, இன்னு செய்யாமை, முதலியவைகளும், இச்சீவ காருண்யத்துள் அடங்கும். உலகில் புண்ணியம் ஒருவனுக்குப் பொருட்செல்வங்கொண்டாயினும்பொருளில்லாமையாயினும்,வேறு பல வகையாற் கிடைக்கக்கூடியதாயிருந்தாலும், இச்சீவகாருண்யம் என்னும் அருட்செல்வம் ஒன்றினுல் கிடைப்பதே மேலாகும். இதுபற்றியே "அருட்செல்வம் செல்வத்துட்செல்வம் பொருட்செல்வம் பூரியார்கண்ணுமுள" எனநாயனுர்கூறியதுமென்க.(பூரியார்-இழிஞர்) இவ்வறம்ஒன்றே சர்வ சுலபமாய்ச் செய்யக்கூடியதாயும், யாவரும் ஒப்புக்கொள்ளக்கூடியதாயுமிருக்கிறது. இவ்வருள் ஒன்றே இருமையுந்தரும் பெருமைபெற்றது. யாங்ஙனமெனில் "அல்லல் அருளாள் வார்க்கில்லை, வளிவழங்கு மல்லன்மாஞாலங்கரி" என இம்மைச் சான்று கூறி இம்மையிற்றுன்பம் நிகழா எனவும் "அருள் சேர்ந்த நெஞ்சினுர்க்கில்லை இருள்சேர்ந்த இன்னுவுலகம் புகல்" என மறுமையிற்றுன்ப உலகம் புகல் இல்லையென்றும், தெய்வப் புலவர் திருவாய் மலர்ந்தருளிய திருவாக்கானறியக் கிடக்கின்றன. இனி அருள்சேர்ந்த நெஞ்சினுர்க்கு இருள்சேர்ந்த இன்னுவுலகம் புகல் இல்லையெனவே, இன்பவுலகம் புகல் உண்டு என்பது பெறப்படும். அவ்வின்பவுலகம், புண்ணியங்குறைந்தவுடன் மறுபடியும் பிறத்தலைச் செய்கின்ற சுவர்க்காதி போக லோகமே உண்டெனக் கூறுவரேல் அஃது அன்று. இருள்சேர்ந்த இன்னுவுலகம் புகல் இல்லையெனவே, அந்த ஸ்தானமானது அநேக சூரியர்கள் ஒன்ருகச் சேர்ந்து நிறைந்து பிரகாசித்தாலும், நிகரற்ற ஒளியையுடையதாய், ஈசுவர ஸ்வயம்பிரகாசத்தையே நிறையப் பெற்றிருக்கும் என்று ஆன்றோர் துணிபு. "சுடரொளியாய்நின்ற தன்னுடைச் சோதி" என்றும் அகண்டமான பேரொளி சேர்ந்ததும் "நலமந்தமில்லதோர் நாடு" "அந்தமில் பேரின்பவீடு" என்றும் இவ்விதம் பேரின்பம் நிறைந்துள்ளதுமாகிய முத்தியுலகமே புகல் உண்டு என்பது தெற்றென விளங்கும்.

7. ஆதலால் சகோதர பாவத்தாலுண்டான ஜீவகாருண்யத்தை முதன்மையாகக்கொண்ட பரோபகாரத்தினுல் இகபர வாழ்விரண்டும் கைகூடுமென்பது நாட்டப்பெற்றது.

இதுபற்றியே இற்றைக்குச் சுமார் 35 வருடங்களுக்கு முந்திய நம்மிந்தியநாட்டு ஜநங்களின் மந நிலைமைக்கும், பிந்தியவர்களின் மந நிலைமைக்கும் முறையே ஏற்றக்குறைவுகளாகிய மாறுக்குணங்கள் தோற்றித் தேச மத பாஷாபிமாநங்குன்றி, நாத்திகம் பேசி நாத்தழும் பேறியவர்களாய், ஆத்திகம் தொலைய நாத்திகந்தழைய, ஆரம்பித்ததையறிந்த பகவான் "உலகில் ஞாநங்குன்றி அஞ்ஞாநந்தலைப்பட்டு அபிவிருத்தியாகும் காலத்தில் தர்மத்தை நிலைநிறுத்த நானேயுகங்கள்தோறும் அவதாரம் செய்வேன்" என்று பகவத்கீதையில் உபதேசித்திருந்தபடி, தானே இப்பொழுது அவ

தாரஞ்செப்பததுபோல. இக்காலத்திய ஆங்கில நாகரிகத்திற்கொத்தபடி மானைக்காட்டி மானைப்பிடிப்பார் போல, பிளவாட்ஸ்கி அம்மையார், கர்னல் ஆல்காட், அனிபிஸன்ட் அம்மையார்,முதலிய ஆங்கில அறிஞர்களைக்கொண்டு பிரஹமஞ்ஞாந சபாரூபமாகத் தோன்றி மேற்கூறியவாறு, இருமையுந் தருவதற்கு மூலகாரணமாயுள்ள சகோதரபாவத்வம், ஜீவகாருண்யம், பரோபகாரம், மதங்களினுள் ஒற்றுமை முதலிய சுலபமான தர்மங்களை அதன் கொள்கைகளாக அமைத்து, அக்கொள்கைக்கு மாறின்றி நடக்கும்படி ஏற்பாடு செய்து உலகத்தினின்று நெடுநாளைக்கு முன்னரே தொலைந்து போகவிருந்த நமது உத்கிருஷ்டமான ஆஸ்திகமதம் தலைகாட்டி நிலைநாட்டி விருத்திக்குவரும்படி செய்திருக்கிறதை யாருமறிவர்.

8. இத்தகைய சங்கம் நம்மிந்திய தேசத்தின் மூலவிருக்ஷமாக சென்னை ஆதியார் க்ஷேத்திரத்திலும், அதன் கிளைச்சங்கங்கள் பன்னூறுகளாக பல நகரங்களிலும் சிறு கிராமங்களிலும் தோன்றி நடைபெறுகின்றன.

ஹரித்துவாரமங்கலம் என்னும் கிராமத்தில் ஸ்ரீமாந் இரகுநாதராஜாளியார் அவர்களின் முயற்சியால் ஒருகிளைச்சபையும் ஸ்தாபிக்கப்பெற்றுள்ளது. அச்சபைக்கு அங்கமாக ஸ்ரீ கோபாலசாமி திரு மடாலயத்தில் இகபர வாழ்விற்குரிய நித்தியாநித்ய வஸ்து விவேகாதிகளைக் கற்றுக்கொள்ளும் மாணவர்களுக்கென்று ஓர் கலாசாலையும் (1) அம்மாணவர்களுடன் வித்வான்களும் ஏனையோரும் சுலபமாக ஆராய்ச்சிசெய்ய உபயோகமாகும்படி பல அருமையான கலைப் பொக்கிஷமென்னலாம் படியான புத்தகசாலை ஒன்றும் (2) இவ்விருபாலருக்கும் சரீர சுகம் இன்றியமையாததாதலின் உயிர்ப்பிணியேயன்றி உடற்பிணியும் நீங்கிச் சரீராரோக்கியம்பெற, பல மகான்களின் முறைப்படி பல திவ்யதரமான அவுடதங்கள் சேகரிக்கப்பெற்ற ஔஷதசாலை ஒன்றும் (3) ஆக இம்முச்சாலைகளும் ஒருங்கே ஏககாலத்தில் ஷை ஸ்ரீமாந் இரகுநாத ராஜாளியார் அவர்கள் ஸ்தாபித்துள்ளார். அவர் நற்காரியம் யாவராலும் மெச்சத்தக்கது.

து. வி. கோபாலசாமிநாயக்கர்.

## சுமதி என்னும் உத்தமியின் சரித்திரம்.

(17-ம் பக்கத் தொடர்ச்சி).

---

கோபிநாதனும் சுமதியும் சகோதர வாஞ்சையுடன் உல்லாசமாக வநத்தில் காலங்கழித்துவரும்நாளில், ஒருநாள் இருவரும்காலக்கடனை முடித்துக்கொண்டு அவ்வநத்துக் கருகாமையிலுள்ள ஒரு குன்றுக்குச் சென்று அதன்மீது அமர்ந்திருக்கும் ஆலயந்தொழுதுவரக் கருதினார்கள். சிறிது தூரம் நடக்கவே, வெயிலின் கொடுமையால் சுமதியின் மெல்லிய சரீரம் வாடத்தொடங்கிற்று. களைப்போமேலிட்டது. தாகமும் அதிகரித்தது. கால் நொந்து நொந்து கடுகிவழிநடந்து சென்றனர் அச்சிறுவர். கோபிநாதனோ, அடிக்கடி காட்டிற்போய் வேட்டையாடி வழக்கப்பட்டவனனபடியால், சிறிதும் களைப்பைப் பாராட்டாதவனாய்ச் சென்றுகொண்டிருந்தான். சுமதியோ, தள்ளாடித் தத்தளித்தனள். அதனைக்கண்ட கோபிநாதன் அவளை ஒரு விசாலமான ஆலமரத்தின் அடியில் உட்காரச்செய்து அவளது நீர்வேட்கையைத் தீர்க்கத் தண்ணீர் கொணரப்போனான். அவ்விடமோ மேடான கரட்டுநிலம். ஒரே வெளியாய்த் தோப்புத்துரவுகளின்றி இருந்தது. நீரகப்படுவது அரிதாய்விட்டது. "நீர்நசைஇ வேட்கையின் மானின்று விளிக்கும்" பாலைவனம்போற் காணப்பட்டது. கோபிநாதன் சிறிதுதூரஞ்சென்றும் தண்ணீர்கிடைக்கவில்லை. போகும் மார்க்கத்தில் ஒரு மானைக் கண்ணுற்றான். அன்று ஆகாரத்துக்கும் உதவும் என்று அதனை நோக்கிச் சென்றான். அது வில்லுங் கையுமாக ஒரிளைஞனைக் கண்ணுற்றதும், தாவிக்குதித்து மனோவேகத்தினும் வேகமாகச் சென்றது. கோபிநாதனும் குறி வைத்து அம்பு எய்தான். குறி தப்பிப்போயிற்று. இருந்தாலும் விடாமல் பின்தொடர்ந்து சென்றான். அது சில இடங்களில் மறைந்தும் சில இடங்களில் வெளிப்பட்டும் விளையாடிக்கொண்டே வெகு தூரம் சென்றுவிட்டது. கோபிநாதனும் பின்தொடர்ந்து செல்லச் சிறிதும் சலிக்கவில்லை. மாரீசனைப்பின்தொடர்ந்த ஸ்ரீ இராமபிரானை நிகர்த்தான் கோபிநாதன். மான்வேட்டையிற் காட்டிய ஊக்கத்தில் மங்கையாகிய தங்கையின் தாகத்தைக்குறித்து அவனுக்குச்சிறிதும்

3

ஞாபகம் வரவில்லை. கடைசியாய் இரண்டு பள்ளத்தாக்குக்களுக்கு மத்தியில் மானைத் துரத்திச்சென்று மான் தப்ப வழியில்லாமல் அதனைத் தன் கூரிய அம்பால் கொன்று வீழ்த்தினன்.

சுமதியோ களைப்பால் ஒன்றும் அறியாமல் அயர்ந்து தூங்கி விட்டாள். சிறிதுநேரத்துக்கெல்லாம் விழித்துக்கொண்டு பார்த்தாள். தன் அருமைச் சகோதரனைக் காணவில்லை. "நெடுநேரமாகியும் அண்ணன் வராத காரணமென்ன, போன இடத்தில் என்னஆபத்து நேர்ந்ததோ? தெரியவில்லையே. ஒருகால் தண்ணீர் அகப்படாமல் களைப்பால் என்போல் அவனும் தூங்கிவிட்டானோ? அல்லது தண்ணீர் அகப்படாமல் இவ்வநாந்தரத்தில் இன்னும் அலைந்துகொண்டிருக்கிறானோ? ஒரு நிமிஷமாவது வீண்பொழுது போக்கானே. இன்னும் சற்றுநேரம் பொறுமையுடன் காத்திருப்போம். உச்சிப் பொழுதிற்கு மேலாய்விட்டாலும் காத்திருப்பதே நலம்" என்று நினைத்து நாலாபக்கங்களிலும் சுற்றிச் சுற்றிப் பார்த்தவண்ணமாயிருந்தாள். சூரியனும் குடதிசையிற் சாய ஆரம்பித்தான். சுமதிக்கு மநங் கலங்கிற்று. "அந்தோ! தெய்வமே! உற்றூர் பெற்றோரை விட்டுப் பிரிந்தும் சகோதரன் ஒருவனாவது இருக்கிறான் என்று சந்தோஷித்துக்கொண்டிருந்தேனே. அதற்கும் இடையூறு உண்டாகும்போற் காண்கின்றதே. நான் என்செய்வேன். என் அருமைச் சகோதரன் எனக்காக எங்கெல்லாம் ஓடித்திரிகிறானோ. அவனுக்கு என்ன அபாயம் நேர்ந்ததோ. என்றைக்கும் பதினைந்துநாழிகைக்கு மேல் வெளியில் தங்கிநிற்க மனம்பொறானே. நாழிகை இருபது ஆகியும் இன்னும் வரக்காணேனே. இஃதென்ன விபரீதமாக இருக்கிறதே. கோபிநாதா! என் உயிர்க்குயிரான அண்ணா! ஏழையாகிய என்னை நீ தனியேவிட்டுச் சிறிதும் பிரிந்திருக்கமாட்டாயே. என் இத்தனை நாழிகையாகியும் வரவில்லை. என்குற்றமோ? நீபோகும்போது நானும் உன் பின்னேயே வராமற்போனேனே. பெண்புத்தி பின்புத்தி யாயிற்றே. இவ்வுலகத்தில் யான் எவ்வாறு தனித்து வாழ்வேன். பெற்றோரை இழந்த துக்கம் சிறிதுந் தோன்றாமல் அப்பன் நீ, அம்மை நீ, என்னுருயிர் நீ, என்று நினைந்து நினைந்து அடைந்த மநமகிழ்ச்சியெல்லாம் அடியோடே அற்றுப்போகும்போற் காணப்படுகிறதே. என் அண்ணா! உன்னை இனி என் கண்கள் காணப்



பாக்கியம் பெறுமோ. ஒருநிமிஷம் ஒரு யுகமாகத் தோன்றுகிறதே. உன்னைப் பார்த்தாலும் என் பசி தீருமே. ஐயோ! தெய்வமே! என்னை இப்படி அநாதையாக்கலாமா? இனிஎன் உயிர் இருந்தாலென்ன. போனாலென்ன. தஞ்சமென்றிருந்த என் அருமைத் தமையனில்லாமல் என் உயிர் எப்படி உய்யும்? பகவானே! என்னைச் சோதிக்காதேயும். ஏழையாகிய யான் அச்சோதனைக் கிடாகமாட்டேன். வீணில் என்னுயிரை வாட்டாமற் காத்தருளும். உமது கருணைக் கடாக்ஷத்தால் நோக்கியருளும். என்செய்வேன்! என்செய்வேன்!!" என்று ஏங்கித் தயங்கிப் பேதையாகிய சுமதி விம்மி விம்மி அழத்தொடங்கினள். எரிகிற நெருப்பில் நெய்வார்த்ததுபோல் சூரியனது கொடிய உஷ்ணமும் அவளுடைய மனக்கொதிப்பை அதிகரிக்கச்செய்தது. இவ்வாறான மநோநிலையில் சிறிது தூரத்தில் மானிடக்குரல் கேட்டது. அழுதகண்ணும் சிந்திய மூக்குமாக விருந்த சுமதி அக்குரலைக்கேட்டவுடன் கோபிநாதன் வந்துவிட்டான்போல் தோற்றுகிறது. பகவான் காருண்யமூர்த்தியானதால் ஏழைமீ திரங்கி என்னருமை அண்ணாவைக் கண்ணுற்றுக் களிக்கக் கிருபைசெய்தார்போலும். இந்நிர்மாநுஷ்யமான காட்டில் வேறு மானிடக் குரல்கேட்க நியாயமில்லை. கோபிநாதனே வரவேண்டும். ஒருகுரல் கூப்பிட்டும் பார்ப்போம்" எனக் கருதி "அண்ணா" என்று உரத்துக் கூவினள். மறுமொழி யாதொன்றும் கேட்கவில்லை. மறுபடியும் இரண்டு மூன்று குரல் உரத்துக் கூவினள். யாதொரு அரவமும் கேட்கவில்லை. "இஃதென்ன விபரீதமாக இருக்கிறது. சற்றுமுன் கேட்ட குரலும் காணோமே. மநத்தின் சங்கற்பந்தான் அவ்விதம் கேட்கச்செய்ததோ. அல்லது உண்மைதானோ. சற்று நிதாநித்துக் கேட்போம்" என்று குரல்கேட்ட திக்கைக்குறித்துச் செவிசாய்த்தனள். ஒரு பெரிய அரவம் கேட்டது. ஒரு குரலுக்குப் பல குரல்கள் கேட்கத் தொடங்கின. கால்நடைச் சப்தமும் வரவர அதிகரித்தது. பின்னும் சற்று உற்றுநோக்கவே அடுத்த பள்ளத்தாக்கினின்றும் பல மனிதர்கள் பல கால்நடைகளை ஓட்டிக்கொண்டு மேட்டேறிவந்தனர். "ஏதோ ஒரு பெருங்கூட்டம் காணப்படுகின்றது. பல மனிதர்கள் கூட்டமாய்க் கால்நடைகளை ஓட்டிக்கொண்டு வருகின்றனர். தெய்வாதீநம் கோபிநாதனும் வராமலிரான். அவர்களு

டன் கூடிக்குலாவி வருவதால்தான் காலதாமதம் ஆயிற்றுப்போலும். சற்றுப்பொறுத்தறிவோம். 'ஆத்திரக்காரருக்குப் புத்திமட்டு' என்பார்களே. நாமேன் அதற்குள் ஆத்திரப்படவேண்டும். மலிந்தால் கடைக்கு வருகிறது'' என்று மிக்க ஆவலுடன் அக்கூட்டத்தின் வரவை எதிர்பார்த்துக்கொண்டு, அம்மரத்தடியிலேயே நின்றுகொண்டிருந்தாள். சற்று நேரத்திற்கெல்லாம் ஒரு பெரும் வியாபாரக்கூட்டம் வந்து கிட்டியது. சுமதியின் கண்கள் கோபிநாதனை அக்கூட்டத்தில் தேடத்தொடங்கின. ஆருயிர்ச் சகோதரனைக் காணுமல் அவை ஏக்கமுற்றன. அவள் மனம் பொறுமல் பெருங்குரலுடன் அண்ணு! அண்ணு!! என்று அலறினுள். புயற்காற்றால் அடியுண்ட மெல்லிய வாழைபோல் தரையிற்சாய்ந்தனள். புரண்டு புரண்டு அழுதனள். ''மறுபடியும் எழுந்தனள். மறுபடியும் வீழ்ந்தனள். நெட்டுயிர்ப்போடு ஐயோ தெய்வமே'' என்று அரற்றினள்.

இக்கோலத்தைக்கண்ட தார்வணிகர்வேந்து அவ்வணங்கினிடம் வந்து ''மைக்குழலாய்! நீ எக்குலத்தாய்? யார்மடந்தை? யாதுனூர்? யாதுன்பேர்? நெக்குருகி நீ யழுதற்கென்னிமித்தம்?'' என்று மிக்க அன்புடன் வினவினன். அப்பெண்ணணங்கோ துக்கத்தின்மிகுதியால் அவற்றிற்கு யாதொரு மறுமொழியும் பகரவில்லை. வணிகர் வேந்தும் ''நங்காய் உனக்குள்ள மனோவருத்தத்தை வாய்விட்டுச் சொல். சிறிதும் கவலைகொள்ளாதே, இவ்விதம் நீ துக்கிக்கக் காரணமென்ன?'' என்று கேட்கவே சுமதியும் சிறிது துக்கத்தை மறந்தவளாய் ''ஐயா! என் தமையன் தண்ணீர்கொணர இக்காட்டுக்குள் சென்ருன், காலையிற்போனவன் இன்னும் வரவில்லை. நீங்கள் வழியில் அவனை எங்கேயாவது பார்த்தீர்களா? தாய்தந்தையற்ற அநாதைக்கு அவனே தஞ்சம் என்றிருந்தேன். என்செய்வேன், அவனுக்கு என்ன ஆபத்து நேர்ந்ததோ! தெரியவில்லையே. நான் எங்ஙனம் பிழைப்பேன்'' என்று சொல்லிமுடியுமுன், அவளையறியாமல் துக்கம் மேலிட்டு விம்மி விம்மி அழத்தொடங்கினுள். வணிகர் வேந்தன் சுமதியின் நிலையை உணர்ந்து பரிதபித்தனன். அவள் வடிவழகைக்கண்டு பிரமித்தனன், ''இம்மாது மானுடப்பெண் தானே! தெய்வகன்னிகையோ அறிகிலேன். கண்ணிமைத்தலாலும் கால் நிலந்தோய்வதாலும் மானுடப்பெண்ணே யாவாள். இவளோ



திக்கற்றவளாயிருக்கிருள். கண்ட என் மனமும் கண்ணும் கவர்ந்திட வனப்புவாய்ந்தவளாகிருள். இவளை எவ்விதமாகவாவது இணக்கி மணம்புரியவேண்டும். இவ்வித சிருஷ்டியைப் படைத்த பிரமன் கைவன்மையே வன்மை. எந்த அவயவமும் மாசு மருவின்றித் தூய்மையாய் இருக்கிறது. இவ்வநாதைக்கு ஒரு நாதன் வேண்டுவதும் இன்றியமையாததே. சகோதரவாஞ்சையால் ஏக்கமுற்றிருக்கிற இவளது மனத்தைத் தேறச்செய்து, பின் எவ்வாருகவாவது இவளை இணக்க முயல்வேன்'' என்று எண்ணிப் பேசத்தொடங்கினுன்.

(இன்னும் வரும்)

எஸ். சாமிநாத அய்யர்.

---

## நன்மொழி.

108. சமம் என்பது, சித்தமடக்கல், தமம் என்பது, செயலடக்குதல், இந்திரியங்களை அடக்குதல். மனம் நினைக்கும் நினைப்பு, இந்திரியங்கள் வாயிலாகத் தொழிற்படும். கர்மேந்திரியங்கள் ஐந்து. ஞானேந்திரியங்கள் ஐந்து. ஆக பத்து இந்திரியங்களுண்டு. அவைகளை அடக்குதல் என்ருல் அவைகளைப் பொய்த்துப்போம்படி செய்தல் அன்ரும். ஆனல் அததன் இந்திரியகோளங்களையும், அக்கோளங்களின் சக்தியாகிய இந்திரியங்களையும் ஆராய்ந்து அவைகளின் உண்மைநிலைகளை அறிதல்.

109. உபரதி, பொறுமை, எச்சமய வேற்றுமைகளையும் எவ்வபிப்பிராயங்களையும் பிங்நிலைமைகளையும் எவ்வித சுகதுக்கங்களையும், யாதொரு மனக்கிலேசமின்றி சகித்தல். இவ்வேற்றுமைகள் நித்தியமானவைகள் அல்லவென்றும், வெளித்தோற்றங்களென்றும் அறிகிருன். அதனல் பொறுமைகொள்ளுகிருன். நித்யாநித்யவஸ்து விவேகமே இந்த சீலம் ஏற்படுகிறதற்கு முக்கியமான காரணம். பொருளல்லவற்றை பொருள்எனக் கொள்ளாமல் உண்மை நிலைமையை நன்கு உணர்ந்து வெளித் தோற்றங்களால்மருளாமல் பொறுமை பெறல்.

## * 'வெள்ளியம்பலம்' என்னும் ஞானிகளின் சங்கமும் அதனின்று வெளிவரும் ஆசாரிய புருஷர்களும்.

---

"வீணிலே அலையாமல் மலை இலக்காகநீர்
வெளிப்படத் தோற்றல் வேண்டும்
வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே."—தாயுமானவர்.

இவ்வுலகத்தின் தற்காலத்தியச் சரித்திரகாலங்களுக்கு முற்பட்ட காலத்தை நோக்குமின்; மஞ்சிபோன்றுமறைவாய் இருக்கின்ற புராணகாலத்திற்கும் முற்பட்டகாலத்தை நோக்குமின்; புராணமும் ஏற்படாத காலத்திற்கு இன்னும் முற்பட்டகாலத்தையு நோக்குமின்; இப்பூமியில் மனிதவர்க்கம் ஆரம்பமாகும் அத்தருணத்தை நோக்குமின்; அப்படி நோக்குவீர்களேயாகில், 'சுக்கிரன்' என்ற கிரஹத்தினின்று ஜோதிர்மயமான சுவர்ணச்சாயையுள்ள ஒரு மேகம் பூமியின்மீது பளிச்சென்று வந்திறங்கி அமைவுறுவதைக் காண்பீர். சுக்கிரனே, பூமிக்கப்பால் வெகுதூரத்திலுள்ள கிரஹம். அக்கிரஹத்தினின்று சுத்தமான ஆகாயத்தின்வழியாக, அக்கினியின் பிரகாசமுள்ள ஒரு மேகவடிவம், ஒரு பெரிய சுவர்க்கலோகத்தின் ஹம்ஸபக்ஷிபோன்று, ஆகாயத்தைக் கிழித்துக்கொண்டிறங்கி, புராணங்களில் 'சுவேததுவீபம்' என்று கூறப்பட்டிருக்கும் துவீபத்தில் அமைந்து உட்கார்ந்தது. அந்த சுவேததுவீபத்தில் பின்னர் 'சம்பளா' என்ற திவ்வியநகரம் நிர்மிக்கப்பட்டது. அக்நிமயமான, விமானத்தின்மேல் ஏறிவந்தாற்போலத் தேஜோமயமான மகாபுருஷர்கள் அம்மேகத்தினின்றும், இவ்வுலகத்திற்கு வெளியானார்கள். அவர்கள் 'அக்நிதேவர்கள்.' ஈசுவரனின் தூதர்களாக இப்பூமியின்கண் பிரவேசித்தார்கள். அக்காலத்தில் இப்பூமியில் நடைபெற்ற மனிதவர்க்கம் இளம்பிராயத்திலிருந்தது. அதைச்சார்ந்த

---

* குறிப்பு:—இஃது இவ்வருஷம் ஜனவரிமீ 1௨ ஆதியாற்றின் கண்ணுள்ள பிரம்மஞான வாசிரமத்தின் ஓர் பாகத்தில், விசாலமாய்ப் பரவியிருக்கின்ற ஒரு ஆலவிருக்ஷத்தினடியில், சாயங்காலத்தில் சூரியாஸ்தமனத்திற்கு முன்னர், மாதுஸ்ரீ அந்நிபெசண்டு அம்மையார் ஆங்கிலத்தில் செய்த உபந்நியாஸத்தின் சுருக்கமான மொழிபெயர்ப்பு.



மனிதர்களை விகாசாபிவிருத்திமுறையில் நல்வழிப்படுத்த உதவிபுரியும்படியாக இம்மகாபுருஷர்கள் இவ்வண்ணம் பூமியிலவதரித்தார்கள். இவர்கள் 'வெள்ளியம்பலம்' என்னும் ஞானசபையின் மூலாதாரமாயிருக்கின்றார்கள். அன்பினாலும், சிரத்தையினாலும், அவர்களின் மஹிமையைப்பார்த்த வியப்பினாலும் பூமியில், இவர்களுக்குப் பலபெயர்கள் வழங்குவன. புராணங்களில் நாலு 'குமாரர்கள்' என்றும், வீரியக்கட்டுலையாதபாலர்களென்றும், சில சமயங்களில் 'சிவகுமாரர்கள்' என்றும், இவைபோன்ற பலநாமங்கள் இவர்களுக்குண்டு, ஆயினும் பெயர்கள் முக்கியமன்று. அவர்களோ "மாற்ற மனங்கழியநின்ற" மகாபுருஷர்கள். ஒருகோடியே அறுபதுலக்ஷம் வருஷங்களுக்கு முன்னர் அவர்கள் இவ்வுலகத்திற்கு வந்தகாலம். அவர்கள் வந்து தங்கின 'சுவேததுவீபம்' அப்போது வடக்குசமுத்திரத்தினலையால் மோதப்பட்டுக் கொண்டிருந்தது. தற்காலத்தில் அச்சமுத்திரம் அவ்விடத்தில்உலகத்தில்நேர்ந்த பெரியகுழப்பத்தினால், வற்றிப்போய் 'கோபி' பாலைவனமாக மாறிப்போயிருக்கின்றது. இதேசமயத்தில் 'ஆபிரிக்கா' கண்டத்தில் முன்ஜலமாயிருந்தபாகம் 'சஹாரா' மணல்வநாந்தரமாக மாறிப்போனது. இந்த 'கோபி' மணல்வநாந்தரத்தில், அங்குமிங்கும் இற்றைக் கைம்பதினாயிரம் வருஷங்களுக்கு முன்னர், கம்பீரமானகட்டிடங்கள் கட்டப்பட்டன. அவைகளின் சின்னங்கள் சிதிலமாய்ப்போன ஆலயங்களின் பாகங்கள் இப்போதும் கம்பீரமான காக்ஷிகளாக விளங்குகின்றன. அவைகளுக்குச் சமீபத்தில், மணலால் மூடப்பெற்ற ஒரு பட்டணத்தின் சின்னத்தைக் காணலாம். அந்தப் பட்டணத்தையும் துவீபத்தையும் இணைக்கும் ஓர் அற்புதமான வாராவதி இருந்தது. அவ்வாராவதியின் கீழ்ஓடிக்கொண்டிருந்த வெள்ளம் வெகுகாலத்திற்கு முன்னரே அம்மணல் வநாந்தரத்திற்குள் அந்தர்க்கதமாகிவிட்டது.

2. 'வெள்ளியம்பலம்' என்று சொல்லப்படும் ஞானசபையை ஸ்தாபித்தவர்கள் இம் மகாங்களேயாகையால், இவர்களை 'எங்கும் பரவும் ஆலவிருக்ஷத்தின்மூலம்' என்று குப்தசாஸ்திரங்களில்பிரஸ்தாபம் நடைபெறுகின்றது. 'எங்கும் பரவும் ஆலவிருக்ஷம்' என்ற பிரதீகமானது நேர்மையாயும் அழகாயும் அமைந்துள்ளது. இப்போது உங்கள் முன்னிருக்கின்ற விசாலமான ஆலவிருக்ஷத்தைப் பாருங்

கள். மத்தியில் ஸ்தம்பம்போன்ற அடிமரம். அது நாளடைவில் சிறுகச் சிறுகப் பெருத்திருக்கின்றது. அவ்வடிமரத்தினின்று வெகு தூரம் பரவிக்கொண்டுபோகின்ற கிளைகளுண்டாகியிருக்கின்றன. அக்கிளைகள் அங்குமிங்கும் விழுதுகள்விட்டு, அவ்விழுதுகள் நீண்டு பெரிதாகி, பூமியைப் ஸ்பரிசித்து, வேரூன்றுகின்றன. இதனுல் ஆதிமரம் என்றும் நீடித்திருக்கக்கூடிய தசைமையைப் பெறுகிறது. இதுபோலவே அந்த ‘வெள்ளியம்பலம்’ என்ற ஞானசபை உலகத்திற்குப்பிராணுதாரமான முக்கியஸ்தானம். நம்முன்ளுேன்றும் அவ்வாலமரத்தின் கிளைகள்போல, ஞானாசாரியர்களின் பரம்பரையாகிய அநேகம் கிளைகள் இவ் ‘வெள்ளியம்பலத்’திலிருந்து பலகாலங்களில் பூமியின் பலபாகங்களில் விழுதுவிட்டு வேரூன்றி, அவ் வேரூன்றின விடங்கள்தோறும், புதியமதங்கள் ஸ்தாபிக்கப்பெற்றன. அவைகள் மூலமாய்ப் பூமியில் அந்தந்தவிடத்தில்,ஞானஜ்யோதிஸ்விளங்கும்படியான ஸ்தானங்கள் அமைகின்றன. இவ்விதமே ‘வெள்ளியம்பலம்’ என்ற விசாலமான ஆலவிருக்ஷம் உலகமெங்கும் பரவி மென்மேலும் மஹிமைபெற்றுவரவே, உலகத்திலுண்டாகிக்கொண்டு வருகின்ற பலஜாதியார் தலைமுறைதத்துவமாய் அதனிழலின்கண் ணடைக்கலம் புகுந்து சிரேயஸையடைந்து வருகின்ருர்கள்.

3. இதுதான் ‘வெள்ளியம்பலம்’ என்று சொல்லப்படும் ஞானக்குழாத்தின் ஆரம்பம். இவர்கள்தான் அதை ஸ்தாபித்த மகாபுருஷர்கள். இந்த வெள்ளியம்பலந்தான் மனிதவர்க்கத்தை காக்கும் ரக்ஷையாகவும் நல்வழிப்படுத்துங் குருவாகவுமிருக்கின்றது. தேசத்தாருக்குப்பின் தேசத்தார் உண்டாகவும், அதாவது பலகுடும்பங்கள் சேர்ந்து ஒருபெரிய வகுப்பாகவும் பலவகுப்புக்கள் சேர்ந்து ஒரு தேசத்தாராகவும் மனிதவர்க்கம் விருத்தியாகிக்கொண்டுவருவதில், ‘வெள்ளியம்பல’த்தின் சம்பிரதாயமுறையை யநுசரித்து ஓரோர் கண்டங்களிலும் சபைகள் ஏற்பட்டு, நாகரிகமும் ஞானமுறையும் பரவுதற்கு அநுகூலமான மத்தியப் பிரதேசங்களாக அமைகின்றன.

4. இப்போது ‘அட்லாண்டிக்கு’ மகாசமுத்திரம் இருக்கின்ற அடியிடம் ஜலத்திற்குமேல் இருந்தகாலத்தைக்கவனியுங்கள். அதில்



ஒரு பெரிய ‘கண்டம்’ இருந்தது. அந்தக் கண்டத்தில் ஒரு பெரிய பட்டணம் இருந்தது. விஸ்தாரமான (Toltec) டால்டெக்கு ராஜாங்கத்தின் பிரதான நகர் அது. அந்நகரத்தின் வாசல் சுவர்ணத்தால் அமைந்துள்ளது. தேவாம்சத்தைப்பெற்ற ஒருவர் சுவேதசக்கரவர்த்தியாக அவ்விராஜ்ஜியத்தையாண்டார். ‘முன்வெள்ளியம்பலம்’ என்று பிரஸ்தாபித்த மகா சபையினின்று இதன்கண் வந்து மகாபுருஷர்கள் உயர்வற உயர்நலமமைந்த கம்பீரமான நாகரிகத்தை ஸ்தாபித்தார்கள். அதன் பின்னர் அடிமரத்தினின்றும் கிளைகள் பரவுவதுபோல, சிறுசிறுராஜாங்கமும், பெரியபெரிய ராஜாங்கமும் ஒன்றின்பின்ஞென்ருய்த்தோன்றுவதாயின. ‘எகிப்து’ தேசத்தில் தோன்றின அற்புதமான நாகரிகமும் இம்மகாபுருஷர்களால் ஏற்படுத்தப்பட்டது. ‘புன்ஸன்’ என்னும் ஜர்மானியதேசத்து அறிஞர் ஒருவர் ‘எகிப்து’ தேசத்தின் உயர்தர நாகரிகத்தைப்பற்றிப் பின்வருமாறு பிரஸ்தாபிக்கிருர். “அந்நாகரிகம் மிகவும் அற்புதமானது. அஃது உலகத்தில் தோன்றிய காலத்தை யறியமாட்டோம். ஆனல் அதன்பூர்வீகத்தைப்பற்றியும் அது எவ்விதம் உலகத்தில்தோன்றலாயிற்றென்பதைப் பற்றியும் நாமறிய இயலவில்லை”. ‘எகிப்தியர்’ கட்டியிருக்கின்ற பிரஹ்மாண்டமான கட்டிடங்களை, இக்காலத்திய கட்டிடநிர்மாண நிபுணர்களும் சிற்பவல்லவர்களும் இப்போது அழிவுற்றிருக்கிற நிலையில், பார்த்துப் பிரமிக்கின்ருர்கள். ஆலயங்களின் உயர்ந்த ஸதம்பங்களின்மேல் இவ்வளவு பெரிய கற்களை யெவ்விதம் ஏற்றிவைத்தார்கள் என வியக்கின்றனர். எகிப்தியரின்வித்தியையையும், ஞானத்தையும்,சந்தோஷம் நிறைந்த நாகரிகமுறைகளையும்,தேவராஜவம்சங்களையும்,ஆரியர்களின் காலத்திற்குமுன்னர் இருந்த தெய்வத்தன்மை பொருந்திய (‘Pharoahs’என்ற) அரசர்களையும் சூக்ஷ்மமான பூமிகளைப்பற்றிய அவர்களுடைய அற்புதமான அநுபவவறிவையும், ஸ்தூல வுலகைப்பற்றிய அவர்களின் சாஸ்திரப்பயிற்சியையும், பாருங்கள். அவைகள் மிகவும்மேலானவையன்ருே!‘Atlantes’ ‘அட்லாண்டிஸ்’ என்று சொல்லப்பெறும் நாட்டினின்றுஇப்போது கீழ்நோக்கிஞெம்.

இனி மேல்நோக்கிப் பார்த்தோமானால் 'மெக்ஸிகோ' என்ற வேறு ராஜ்ஜியம் தன் நிலையைக் காப்பாற்றுவதற்காகத் தத்தளிக்கின்றதைப்பார்ப்போம். 'எகிப்து' ராஜ்ஜியத்தைப் போலவே, அதுவும் நாகரிகமுள்ளது. 'Aztecks' 'அஜ்டெக்ஸ்' என்ற ஜாதியார் அதை யழிக்குங்காலத்தில் அது மகா புராதந நாகரிகமுடையதாயிருந்தது. 'தென்னமெரிக்கா' வின் சரித்திரத்தை யாராய்வோம். அது, மகாபழமையான வொரு நாகரிகம். மடிந்துபோன பின், அதன் பிரேதத்தைப் போல் காணப்படுகிறது. 'ஸ்பானியா' தேசத்தின் குதிரை ராணுவமும் காலாட்படையும் அஜ்ஜாதியாரை வதம் செய்து, அக்கினிக்கு இரையாக்கி,அருமையான அந்நாகரிகத்தின் சின்னங்களைப் பொய்த்துப்போம்படி அந்தோ! என்ன கொடுமை செய்து போட்டார்கள்!

இனி நம்மிந்திய தீபகற்பத்தைப்பற்றி நமது திருஷ்டியைச் செலுத்துவோம். சமுத்திரத்தின்கீழ் மூழ்கியிருந்த ஹிமாசலமானது, வெளிவந்து அதன் உந்நதமான சிகரங்களை நீலநிறமுள்ளவாகாயத்தில் தோன்றும்படி செய்துகொண்டிருந்த அந்த புராதந காலத்தில், ஹிமாசலத்திற்குத் தென்பாகத்திலுள்ள விடங்கள் மனிதன் காலடிப் படாதனவும் மனித சஞ்சாரத்திற்கு அநர்ஹமாகவும் உள்ள விஸ்தாரமான சதுப்புள்ள களர்ப்பற்றிய நிலமாகவிருந்தது. அப்போதுதான் சமுத்திரம் வற்றித்தரையாக ஏற்பட்டிருந்த தருணமாம். பின்பு வர வர உலர்ந்து களர்மாறிக் கெட்டித் தரையாகவமைந்து, நதிகள் ஏற்பட்டுப் பயிர் பச்சைகள் உண்டாகவே, மனிதன் வசிக்கயோக்கியதையுள்ள நிலமாக அமைந்தது. அப்போது ஏராளமான 'டால்டெக்' ஜாதிக்கூட்டங்கள் ஹிமாசலத்தின் அங்குமிங்குமுள்ள பலகணவாய்களின் மூலமாய், அதன் தென்பாரிசத்திலுள்ள இந்நாட்டிற் பிரவேசித்தார்கள். பல்கிப்பெருகி, இந்தியா தேசமுழுமையும் பரவினார்கள். கம்பீரமான பட்டணங்களை நிர்மித்தார்கள். கோட்டை கொத்தளங்களை யமைத்தார்கள். போக நுகர்ச்சியதிகமாயுள்ள நாகரிகத்தையுண்டு பண்ணினார்கள். இதுதான் புராணங்களில் 'தைத்தியர்'களின் நாகரிகமென்றும், 'தைத்தியர்களின்' காலமென்றும் சொல்லப்பெறும். இப்பால் உயர்ந்த நாசியும் வீரியமுமுள்ள ஆரிய மகாவர்க்கத்தினரின் வெள்ளம் வடக்கேயிருந்து இந்நாட்டை நோக்கிப் படையெடுத்து வரவே, 'தைத்தியர்'காலம் ஒடுங்கியது. அவர்களும் அடங்கினார்கள்.



5. இவ்விதம் உலகத்தில் பூர்வீகசரித்திரங்களை ஆராய்வோமாகில், நம்மநத்தில் அழுத்தமாய்ப்பதியும் விஷயமொன்றுண்டென அறிவோம். அஃதென்னவெனில், கம்பீரமான கல்விப்பயிற்சியும் அற்புதமான சிற்பவேலைபமைப்பும்,இயற்கையான சக்திகளையாளுந்திறமையும், வெள்ளியம்பலத்தினின்று வந்த மகா புருஷர்களான தெய்வத்தன்மை பொருந்தியவரசர்களால் அந்தந்த ஜாதியாரின் நாகரிக முறையில் ஏற்படுத்தப்பட்டனவென்றும், மனிதவர்க்கம் குழந்தைப்பருவமாயிருக்குங்காலத்தில், அதன் நாகரிகமுறையை நேர்மைப்படுத்தினவர்கள் அம்மகா புருஷர்கள் என்றும், நமக்குத் தெரியவரும். அக்காலங்களில் நிர்மிக்கப்பெற்ற மகாபெரிதான கட்டிடங்களின் இக்காலத்தில் தங்கிநிற்குஞ்சின்னங்களை நாம் கண்ணுறும்பொழுது, அவைகளை நிர்மித்த சிற்பியின் புத்தி நுட்பத்தையும் திட்பத்தையும் மௌனமாக அவைகள் பறைபறைகின்றனவைபோலத்தோன்றும். அவைகளைக்கட்டியவர்கள் நாகரிகமற்ற மூடர்கள் அல்லவென்றும் அறிவோம். 'Chaldea' 'கால்டியா' நாட்டில் உள்ள நகரங்களைக் கட்டியவர்கள் அநாகரிகமுள்ளவர்களென்று எவ்விதம்சொல்லத்துணிவோம்? நகரத்தின்மேல் நகரம்,ஒன்றின்மேலொன்றாய்க் கட்டப்பட்டிருந்தனவாகஇப்போது பூமியைவெட்டிச் சோதித்துப்பார்க்கும்போதுதெரியவருகிறது!மகாபாதாளத்தில் கட்டியிருந்தநகரத்தை இப்பொழுதுசோதித்துப்பார்க்குங்கால், அணியணியாய் உள்ள ஸ்தம்பங்களமைந்த மண்டபங்களையும், அப்பண்டை நாளிலுள்ள ஜனங்களின் அபிப்ராயங்களையும், நீதிமுறைகளையும், சாஸ்திரமுறைகளையும், விஸ்தாரமாகச்சொல்லும்புஸ்தகங்களும்,சுவடிசுருணைகளும்,ஆயிரக்கணக்காய் அமைந்துள்ள ஸரஸ்வதி விலாசங்களையும், நாம்கண்கூடாய்க்காணலாம்! இக்காலங்களை நோக்க, சமீபத்தில் ஏற்பட்டுள்ளனவென்று சொல்லப்பெறும் 'Stone henge' 'ஸ்டோன் ஹெஞ்சு' என்னும் ஸ்தலத்திலுள்ள கற்களைத்தூக்கி ஏற்றிவைத்தவர்நாகரிகமில்லாதவர்களா? அக்கற்களில்

ஒரு குழந்தைகூட வசைக்கும்படியானதும், ஒரு ராக்ஷதன் கூட அப்புறப்படுத்தக்கூடாததுமான மிகவும் புத்தி நுட்பத்தால், அமைக்கப்பட்டுள்ள சில ஆடுங்கற்களைப் பார்க்கலாம். அத்தன்மையான கற்களினமைப்புக்குச் சிற்பசாஸ்திரத்தின் திறமை எவ்வளவு தூரம் விருத்தியடைந்திருக்க வேண்டுமென்பதை, அக்கற்கள் 'பேசாமடந்தை'யாகவிருந்துகொண்டு விளக்குகின்றன.

'சீனு' தேயத்தின் பழமையும் அதன் நாகரிகத்தின் உயர்வையும் இப்பொழுதுதான் மேல்நாட்டார்க்குத் தெரியவந்து கொண்டிருக்கிறது. 'அமெரிக்கா' தேசத்தைச் சேர்ந்த ஒருவர் இத்தேசத்தினுட் பாகத்தில் பிரவேசித்து யாத்திரை செய்தார். அதில் ஒரு வாராவதியைக் கண்டனராம். அஃது பெரிதான 'Marble' சலவைத் தகட்டுக்கற்களால் அழகாய் அமைக்கப்பட்டிருந்ததாம். அவைகள் எக்காலத்தில் அமைக்கப்பட்டனவென்றும், அவ்வளவு பெரிய கற்கள் எவ்விதம் பொருத்தப்பட்டிருக்கின்றன வென்றும், ஒருவராலும் சொல்லமுடியவில்லை. யாத்திரை செய்தவரோ யந்திரங்களின் பழக்கத்தில் பிரசித்திபெற்றிருக்கின்ற அமெரிக்காதேசத்தின் சிற்பசாஸ்திரி; 'சீனு' தேசத்தின் பழமையான நூல்களில் இப்பொழுது ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ள 'Classic of Purity' என்னும் பெயர்வாய்ந்த அருமையான நூல் ஒன்று உண்டு. இது 'சீனு' தேசத்து ஞான இலக்கியங்களில் மிகவும் உயர்வான நூல். மேனாட்டிலிருந்து கர்ணபரம்பரையாய் இந்நூலின் கண்ணுள்ள விஷயம் வந்ததாகவும், 'கோ ஹ்சுவான்' ('Ko-Hsuan') என்பவரால் அவர் காலம் வரை ஒலிவடிவாயிருந்து,பின் வரிவடிவாய்ஏற்படுத்தப்பட்டதென்றும் சொல்லப்படுகிறது. "கிழக்கிலுள்ள 'ஹ்வா' ('Hva') நாட்டின் தெய்வத்தன்மை பொருந்திய அரசரிடமிருந்து நான் இதைப்பெற்றேன். அவர் இதைச் சுவர்ணமயமான வாசலமைந்த நகரத்தின் தெய்வத்தன்மை பொருந்திய அரசரிடமிருந்து பெற்றார். இவரோ நாட்டின் தெய்வத்தன்மையான மாதாவினிடமிருந்துபெற்றார்." "சுவர்ணமயமான வாசல் நிலை"யுள்ள பட்டணமென்றபெயர் பிற்காலத்தில் உண்டான பிரதான நகரங்களுக்கு ஏற்பட்டது. இத்தன்மையான நகரங்கள் பலவேறுபட்டன. மத்திய 'அட்லாண்டிஸ்' நாட்டின் கடைசிப்பிரதான நகராயிருந்த பட்



டணத்தின் பெயரும் இதுவே. பழமையான 'க்ரீஸ்' தேசம் உண்டான காலத்தில் மத்திய 'அட்லாண்டிஸின்' பிரதான பட்டணமானது ஏற்கனவே பழமையான பட்டணமாகவிருந்தது.

6. நான்காம் மனிதமகாவர்க்கத்தினின்று ஏற்பட்ட 5-ம்மனித வர்க்கம் உற்பத்தியானது இவ்விதமே. இதனை அதிக கவலையுடன் தெய்வத்தன்மை பொருந்திய ராஜாக்கள் சம்ரக்ஷித்துக்கொண்டு வந்தார்கள். தெய்வத்தன்மை பொருந்திய ஞான குரவர்கள் கல்வி கற்பித்து நல்வழிப்படுத்திவந்தார்கள். கம்பீரமான தர்மசாஸ்திர முறையை வெளியிட்டவரான 'வைவசுவதமநுவே இவர்களுக்குள் அவதாரமாயினர். ஜனங்களின் பிரயோஜனார்த்தமாக வேதசாஸ்திரங்களைத்தொகுத்து வகுத்த சிரேஷ்டரான வியாசமஹருஷியே இவர்களுக்குள் சரீரமெடுத்து நடை பெறுவாராயினர். பின்னர் பல திவ்ய நாமங்களமைப்பெற்ற மஹருஷிகள் பின்னர் தோன்றி ஞானசாஸ்திரத்தைக் கற்றுக்கொடுக்கத் தலைமுறைதோறும் அவதாரமாயினர். இந்துக்களுடைய புராணங்களைப்பார்த்தால் 'தெய்வத்தன்மைபொருந்திய ராஜாக்களைப்பற்றிப் பிரஸ்தாபம் வருகின்றது. ஸ்ரீராமரின் சரித்திரத்தைஸம்ஸ்கிருதபாஷையினின்றும்நேரில்கேட்டு அன்பால் உருகாத ஹிந்துவின் ஹிருதயமும், ஆச்சரியத்தால் வியக்காத ஹிந்துமநமும், மரியாதையுடன் வணங்காதஹிந்துவின் தலையும்இருந்திருக்கவும்கூடுமோ? அவரோ அரசர்களுக்குள் உயர்வறஉயர் நலமமைந்த மகாபுருஷன். புத்திரர்களுக்குள் புத்திரன்என்றசொற்கு இலக்ஷியமாவர். தெய்வத்தன்மை பொருந்திய அவர் ஆளுகையோ கம்பீரமானது. பூர்ணம் பெற்ற மநோதீரர் அவர். நீதிமுறை வழுவாநியாயாதிபதி. நேர்மையாய் அரசாக்ஷிசெய்தராஜசிரேஷ்டர்.

7. இவ்விதமே இந்தியாதேசத்தில் மாத்திரமன்றி ஆரியவர்க்கத்தினின் கிளை வர்க்கங்கள் உலகில் குடியேறினவிடங்களிலெல்லாம், இவ்விதமாகவே நேர்மையும் சிறப்பும் உடையனவாய் அந்தந்த இடங்களிலுண்டான நாகரிகங்கள் நிகழ்ந்தன. அத்தேசங்கள் எல்லாம் அந்நாகரிகங்கள் தோறும், முன் தெய்வத்தன்மை பொருந்திய ராஜாக்கள் இருந்தனர் என்பதைப்பற்றிய நல்ல ஸ்மரணையும், மதஸ்தாபகர்களான ஞானகுருக்களின் பிரஸ்தாபமும், அந்நாட்டார்

களின் பழமையான காலத்தில் தெய்வத்தன்மை பொருந்திய மகா புருஷர்கள் ஆண்டார்களென்றும், கல்விகற்பித்து நல்வழிப்படுத்தினர்கள் என்றும், விஸ்தாரமான பிரஸ்தாபங்கள் உள்ளன. ஆதிகாலத்தில் மனிதர்கள் உடன் கூடவே தேவர்கள் நடமாடினர்கள் என்றும் உறவாடினர்களென்றும், ஆண்டார்களென்றும், கற்பித்தார்களென்றும், ஜனங்களுடைய மநத்தைக் கவர்ச்சி செய்யும்படியான உயர் நலமமைந்த லக்ஷியபுருஷர்களாக, பின்னர் அவர்கள் ஏற்பட்டார்களென்றும், இவ்விதம் பாரம்பரியமான ஐதீகம் இன்னும் இருந்துகொண்டிருக்கிறது. இக்காலத்தில் ராஜா என்றால், ஒரு அற்புதமான மஹிமையும் செல்வாக்கும் உடையர் என மதிப்பு பிரகிருத நாகரிக முறையில் கூட இருந்து வருகிறது. அதற்குக்காரணம் ஆதிபூர்வீகராஜக்கள் தெய்வத்தன்மைபொருந்தியவராயும் ஜீவகாருண்யமுள்ளவர்களாயும், ஞாநகுரவர்களாயும், கம்பீரமான தெய்வவல்லமையும் மயிரிழை தவறாத நீதிமுறை உள்ளவராயும், இருந்தார்கள் என்பதின் ஸ்மரணை இன்னும்ஒருவிதமாய்த் தங்கியிருப்பதனுலென்று அறிக. எத்தனையோ கொடுமையாய் அரசாண்ட மன்னர்கள் இருந்திருப்பினும், அவர்களையெல்லாம் மறந்து, இக்காலத்திலும் முடிமன்னர் என்ற பேர்கேட்டமாத்திரத்தில், உலக ஜநங்கள் அவர்பால் அன்பும் வணக்கமும் சிரத்தையும் உள்ளவர்களாயிருக்கின்றார்கள் என்பதை நாம் பார்க்கின்றோம். அரசமுறையைப்பற்றி ஆங்காங்கு பிரஸ்தாபம்பெறும் நிந்தனைமொழியெல்லாம், பயனற்ற விருதாச்சொல்லென்றும் அரசன் என்ற உயர் லக்ஷியமுள்ள புருஷனிடம் ஜநங்களின் ஹிருதயத்தில் குடிகொண்டிருக்கும் அன்பைத் தொலைக்கச் செய்யுமுயற்சி வீண் முயற்சியென்றும், காலம்சென்ற சக்கரவர்த்திநியாகிய 'விக்டோரியா அம்மையார்' லண்டனிலுள்ள 'சேண்ட் பால்ஸ்' ஆலயத்திற்குப்பவனிபோகும்காலத்தில், லண்டன் பட்டணத்தில் வீதிகளில் ராஜாங்கத்தின் பல பிரதேசங்களிலுமிருந்தும் கூடியவர்களான ஆண் பெண் பாலர்களின் முகத்தை ஒருமுறை பார்த்திருப்பரேல், யாவருக்கும் நன்கு விளங்கும். ஜநங்களின் மநத்தில் அந்த அம்மையாரின்பால் பொங்கிவெளிவந்த அன்பின் அலைகளும் அம்மையாரைப்போற்றி வாழ்த்தின வசநங்களின் ஒலியையும் கவனித்தால் ராஜன் என்ற மொழிபானது



சௌகரியபக்ஷமாக ஜநங்களால் ஏற்படுத்திய ஒரு கட்டுப்பாடான மொழிஅன்று எனவும், 'பார்லிமேண்டு' சபையாரால் லௌகிககாரியங்களைக்கொண்டுசெலுத்த சௌகரியபக்ஷமாக அங்கீகரிக்கப்பட்டு அமைக்கப்பெறும் ஒருவார்த்தை அன்று எனவும், வெள்ளிடைமலை போல் தெளிவாய்த்தெரியவரும். ராஜா உண்மையில் இறைவனிடமிருந்து பெற்ற உரிமையாலாளுகிறான். ஜநங்களுக்குள் ஈசுவர சக்தியின் ஒருஅடையாளமாகவும், ஓர் அம்சமாகவும் விளங்குகிறான். இத்தன்மையான ஐதீகமானதுசகலவல்லமையும் பொருந்திய அரசர்களாயிருந்த மகா புருஷர்களால் ஆளப்பெற்ற ஜாதியார்களின் கால முதற்கொண்டு கர்ண பாம்பரையாய் நாளிதுவரை வந்துகொண்டிருக்கிறது. (இன்னும் வரும்.)

ப. நா.

## விஷு திநம்.

இரவும் பகலும் ஸமகாலமாய் ஏற்படுந் திநமே 'விஷு திநம்' என்னப்படும். சூரியன் 'பூமத்யரேகை' (Equator) க்கு நேர் உச்சியில் ப்ரகாசிக்கும் திநங்கள்தான் விஷு திநங்களாகும். சூரியன், 'மகரவீதி' (Tropic of Capricorn) யினின்றும் உத்தராபிமுகமாய்க் 'கடகவீதி' (Tropic of Cancer) வரை செல்லும் தனது உத்தராயண யாத்திரையின் நடுவில் ஒரு திநத்திலும், மறுபடி கடகவீதியினின்றும் தக்ஷிணபிமுகமாய் மகரவீதி வரை செல்லும் தனது தக்ஷிணாயந யாத்திரை நடுவில் ஒரு திநத்திலும், பூமத்யரேகைக்கு நேர் உச்சியில் ப்ரகாசிக்கின்றான்.

---

குறிப்பு: (1) மகரவீதி - Tropic of Capricorn - பூமத்யரேகைக்குத் தெற்கே $23\frac{1}{2}$ யாவது அம்சத்துள்ளது.

(2) கடகவீதி - Tropic of cancer - பூமத்யரேகைக்கு வடக்கே $23\frac{1}{2}$ யாவது அம்சத்துள்ளது.

(3) உத்தராயணம் - சூரியன் உத்தராபிமுகமாய்ச் செல்லக்கூடிய ஆறுமாதக்காலம். (அநுஷ்டாநத்தில் தை மாதம் முதல் திநம் முதல் ஆனிமாதம் முடிய)

(4) தக்ஷிணயநம் - சூரியன் தக்ஷிணபிமுகமாய்ச் செல்லும் ஆறுமாதகாலம். (அநுஷ்டாநத்தில் ஆடிமாதம் முதல் திநம் முதல் மார்கழி மாதம் முடிய).

இப்பொழுது அநுஷ்டாநத்தில் உத்தராயணம் என்பது தை மாதம் முதல்திநம் முதல் ஆடிமாதம் முதல்திநம் வரையுள்ள ஆறுமாதகாலமானதால், அதன் மத்யதிநமான சித்திரை மாதம் முதல்திநமே ஒரு விஷு திநமாகவும், ஆடிமாதம் முதல்திநம் முதல் தை மாதம் முதல்திநம் வரையுள்ள தக்ஷிணாயந காலத்தின் மத்திய திநமான ஐப்பசி மாதம் முதல்திநம் மற்றொரு விஷுதிநமாகவும் ஆக வருஷந்தோறும் இரண்டு விஷுதிநங்கள் வைதிகமுறைப்படி பித்ருச்ராத்தம், தர்ப்பண முதலிய கர்மாநுஷ்டாநங்களுக்காக அநுஷ்டித்துவருகின்றோம். சித்திரைமாதம் ஏற்படும் விஷுவுக்கு 'சைத்ரவிஷு' (Vernal Equinox) என்றும் ஐப்பசிமாதம் ஏற்படும் விஷுவுக்கு 'ஐப்பசி விஷு' அல்லது 'துலாவிஷு' (Autumnal Equinox) என்றும் சொல்லப்படும். நமது நாட்டில் வழங்கும் பஞ்சாங்கங்களிலும் இவ்விரண்டு திநங்கள்தான் விஷு புண்யகாலமாய்ச் சொல்லப்படுகின்றன.

ஆனால் ஜ்யோதிஷசாஸ்திர கணிதவிதிப்படிக்கும், ஜ்யோதிஷ யந்திரங்களின் (Astronomical instruments) உதவியாலும், ஆராய்ச்சி செய்வோமாகில், மேற்கூறிய விஷுதிநங்கள் முறையே 22திநங்களுக்கு முன்னதாகவே ஏற்படுகின்றன. அதாவது, உண்மையில், சைத்ரவிஷு என்பது பங்குனிமாதம் 8-ம் தேதியை யடுத்தும், துலா விஷு என்பது புரட்டாசி மாதம் 8-ம் தேதியை யடுத்தும் அமைகின்றன. மேற்கூறிய திநங்கள் நமது பஞ்சாங்கங்களில் முறையே மேஷாயந புண்யகால மென்றும், துலாயந புண்யகால மென்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. மேற்கண்ட இரண்டு திநங்கள்தான் உண்மையில் விஷு புண்யதிநங்கள். அப்படியிருக்க உண்மையான புண்யதிநங்களை, நாம் கவனியாது, அப்புண்ய திநங்களுக்குப் பின் சுமார் 22-வது திநத்தை விஷு புண்யகாலமாய் அநுஷ்டித்து வருகின்றோம். அதற்குக் காரணம், நமது முன்னோர்களால் எவ்வளவோ அபிவிருத்திக்குக் கொண்டுவரப்பட்ட ஜ்யோதிஷ சாஸ்திரத்தில் வரவர நமக்கு ஏற்பட்ட பயிற்சிக் குறைவுதான்.

**தவறு ஏற்பட்ட விதம்:** இப்பொழுது அநுஷ்டாநத்தில்வழங்கிவருவது ப்ராசீநநூல்களின் ஆதாரத்தைக்கொண்டுதான் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. நமது அநுஷ்டாநம் தவறுகுமானால் அதற்கு ஆதாரமான பூர்வக்ரந்தங்களே தவறாக இருக்கவேண்டுமென்ற சங்கை ஏற்படலாம். ஆனால் அதன் உண்மை அப்படியல்ல. ப்ராசீந நூல்களில் சொல்லியது வாஸ்தவந்தான். அந்நூல்களின் ப்ரகாரம் விஷு திநங்கள் சித்திரை மாதம் முதல் திநத்திலும், ஐப்பசி மாதம் முதல்திநத்திலும்தான், ஏற்பட்டிருந்தன. அந்நூல்கள் அக்காலத்துள்ள ஜோதிஷ கணிதப்படி விஷு திநங்களைக் கணக்கிட்டுக் கூறி



யிருக்கின்றன. 'ப்ருஹத்ஸம்ஹிதை' முதலான உயர்ந்த ஜோதிஷ நூல்களை வரைந்த 'வராஹமிஹிரர்' முதலான ஜோதிஷ சாஸ்திர நிபுணர்களின் காலமான கி. பி. 499-ம் வருஷத்தில் எழுதப்பட்ட நூல்களையே நாம் அநுஷ்டித்து வருவதால், அவைகளில் அக்காலத்துக் கணிதப்படிச் சொல்லப்பட்ட விஷு திநங்களையே இன்றும் விஷுதிநங்களாய் நாம் கொண்டாடுகின்றோம்.

பூமத்யரேகையில் எந்தஸ்தாநத்துக்கு நேர் உச்சியில் சூரியன் ப்ரகாசிக்கின்றானோ, அல்லது சூரியவீதி (Ecliptic) யும் பூமத்ய ரேகையும் எந்தஸ்தாநத்தில் சந்திக்கின்றனவோ, அந்த ஸ்தாநத்துக்குத்தான் 'க்ராந்திபதம்', அல்லது 'விஷுஸ்தாநம்' (Equinoctial Point) என்று பெயர். இந்த விஷுஸ்தாநத்து நேர் உச்சியில் சூரியன் ப்ரகாசிக்கும் திநந்தான் விஷு திநம் என்று பெயர். மேற்கூறியபடி வராஹமிஹிரர் காலமான ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியில் இந்த சைத்ர விஷுஸ்தாநமானது மேஷராசி அல்லது அசுவிநீநக்ஷத்திரத்தின் ஆதியில் இருந்ததாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. ஆதலால் இந்த ஸ்தாநத்திற்கு 'மேஷாதி' (First Point of Aries) என்று பெயர். 36 அம்சங்கள் (Degrees) அல்லது 27 நக்ஷத்திர பாகங்கள் அல்லது 12 ராசிபாகங்களாக வகுக்கப்பட்டசூரியவீதிக்கு (Ecliptic) ராசி சக்கரம் (Zodiac) என்று பெயர். 'மேஷாதி' (First point of Aries) அல்லது சைத்ர விஷுஸ்தாநம் (Vernal Eqinoctial Point) தான் அச்சக்கரத்தின் ஆரம்பஸ்தாநம்.

இந்த விஷு ஸ்தாநமானது எப்பொழுதும் ஸ்திரமானதன்று. அதாவது சூரியவீதியும் பூமத்ய ரேகையும் எப்பொழுதும் ஒரேஇடத்தில் ஸந்திப்பதல்ல. இந்த ஸ்தாநமானது வருஷம் ஒன்றுக்குச் சுமார் 4 கலை (Seconds) வீதம் பின்னோக்கிச் செல்கின்றது. அதாவது இந்த வருஷம் விஷு ஸ்தாநம் அசுவிநீயின் முதல்ஸ்தாந (Point) த்தில் இருந்தால், அடுத்த வருஷம் ரேவதியின் கடைசி நாலாவது விகலையில் அமையும். இவ்வாறு விஷு

ஸ்தானம் பின்னோக்கிச் செல்லுவதை, 'விஷு அபஸரணம்'* (Precession of the Equinox) என்று கூறுவார்கள். இவ்விஷு அபஸரண விதியானது நமது முன்னோர்களுக்கும் தெரிந்த விஷயமாதலால், அந்தந்தக் காலங்களின் அதன் ஸ்தானங்களைக் கண்டுபிடித்து அதுமுதல் ராசிசக்கரத்தைக் கணக்கிட்டிருக்கின்றனர். இந்த விஷு ஸ்தானமானது ரிக்வேத காலங்களில் மிருகசீரிஷத்திலும், பிறகு வேதாங்கஜ்யோதிஷம் எழுதப்பட்டகாலத்தில் கிருத்திகையிலும், பிறகு வாராஹமிஹிரர் காலத்தில் அசுவினீ நக்ஷத்திர ஆரம்பத்திலும், இருந்ததாக அந்தந்தக் காலங்களில் விளங்கிய ஜ்யோதிஷ நிபுணர்களால் கணிக்கப்பட்டிருக்கின்றது. மேஷாதியினின்றும், விஷு ஸ்தானமானது சுமார் 1400 வருஷங்களில், சுமார் 22 அம்சம் பின்னடைந்து இப்பொழுது உத்திராட்டாதி நக்ஷத்திரத்திலிருக்கின்றதெனக் கண்டுபிடித்திருக்கின்றார்கள். அதாவது மேஷாதியை முதல் அம்சமாக வைத்துக்கொள்வோமானல், இப்பொழுது 33-வது அம்சத்தில் விஷுஸ்தான மிருக்கின்றது. முன் மேஷாதியில் பூமத்திய ரேகைக்கு வரும் சூரியன் இப்பொழுது 22 அம்சங்களுக்கு முன்னதாகவே வந்துவிடுவதால், விஷு தினமும் சுமார் 22 நாட்களுக்கு முன்னதாகவே ஏற்படுகின்றது. அதாவது சுமார் 70 வருஷத்தில், விஷு தினமானது ஒருதினம் முன்னதாகவே ஏற்பட்டு வருகின்றது. இந்த விஷு அபஸரணவிதி (Law of Precession of Equinox) யின் ஸூக்ஷ்மத்தை நாம் மறந்துவிட்டோமாதலால், அதன் பிரகாரம் நமது புண்ய காலங்களையும் சரிப்படுத்திக்கொள்ள முடியாதவர்களா யிருக்கின்றோம்.

**ஆர். எஸ். நாராயணஸ்வாமி அய்யர்.**

---

*குறிப்பு: இந்த 'விஷு அபஸரணம்' என்பது 60 வருஷங்களில் ஒரு தினம் பின்னடைவதாகவும், அதன்கணநத்தை யநுஸரித்தே பார்ஹஸ்பத்யமான 'ப்ரபவாதி' 60 வருஷங்கள் நமது முன்னோர்களால் ஏற்படுத்தப்பட்டதாகவும் தெரியவருகின்றது. இப்பொழுது சுமார் 70 வருஷங்கள் ஆகின்றனவென்றும், ராசிசக்ரம் முழுமையும் ஒருதடவை விஷுஸ்தாநம் சுற்றிவரச் சுமார் 25,920 வருஷங்கள் ஆகின்றனவென்றும் தற்காலத்திய ஜ்யோதிஷ சாஸ்திரஞ்ஞர்கள் கூறுகின்றார்கள். ஆனல் நமது முன்னோர்கள் 21,600 வருஷங்களில் ஒரு அபஸரணவட்டம் ஆய்விடுமென்று கணித்திருக்கின்றனர்.

## புத்தக வரவு.

### அரும்பதவுரையுடன் வெளிவந்த ஒரு அரிய தமிழ்ப்புத்தகம்.

---

ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுகம் அரசாண்டுவந்த சூரபன்மன் எல்லாத்தேவதைகளுக்குஞ் செய்துவந்த இடுக்கண்களை சிவபிரானுடைய ஆறு நெற்றிக்கண்களினின்றுந்தோன்றி ஆறு திருமுகங்கொண்டெழுந்தருளி ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுளானவர் நீக்குதற்கிடமாயிருந்த திருச்செந்தூரென்னுந் திவ்ய க்ஷேத்திரத்துக்கேற்பட்ட அநேக பிரபந்தங்களுள் திருவருள்பெற்ற மகான்களுள் அறுவராலே செய்யப்பட்ட * ஆறு பிரபந்தங்களும் மதுரைச் சங்கத்து வித்துவான் மு. ரா. அருணசலக்கவிராயராலெழுதப்பட்ட அரும்பதவுரையுடன் திருச்செந்தூர்ப் பிரபந்தத் திரட்டெனப் பெயரிடப்பெற்று டிம்மி 8 பேஜ் சைஸில் 420 பக்கமாக அச்சிடப்பெற்றன.

கந்தப்புராணத்திற் சொல்லாத சூரனுடைய முற்பிறப்புக்களும் பிறகதைகளும் முகவுரைதொடங்கிப் படிப்பவர்களுக்கு நன்கு புலப்படும். இந்நூல்களும் அரும்பதவுரைகளும் மிகவும் பத்தியை விளைவிப்பதற்கும் விற்பத்தியை யுண்டுபண்ணுவதற்கும் சாதனமாயுள்ளவைகள். தமிழபிமானிகளெல்லாரும் வாங்கி வாசிக்கவேண்டியது ஆவசியகமாம்.

மேற்கூறிய ஆறு பிரபந்தங்களுடன் இராமநாதபுரம் அட்டாவதானம் வித்துவான் சரவணப்பெருமாட் கவிராயர் செய்த கந்தவருக்கச் சந்தவெண்பாவும் அரும்பதவுரையுடன் சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்நூல் பலதுறை நயங்களமைக்கப்பெற்றது. இப்பிரபந்தங்கள் செய்த ஆசிரியர் சரித்திரச் சுருக்கங்களும் ஆங்காங்கு எழுதப்பெற்றுள்ளன. நல்ல கவிக்கோ பைண்டுடன் தங்கக் கிலிட்டிற் பெயரிட்ட புத்தகம் க-க்கு விலை. ரூ. 1—8—0. வி. பி. சார்ஜ் அணு 4.

வேண்டுவோர் மதுரை விவேகபாநுப்பிரஸ் மு. ரா. அருணசலக்கவிராயருக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

* பிரபந்தங்களாவன:—1. திருச்செந்தூர்த் தலபுராணம். 2. ஷை பிள்ளைத்தமிழ். 3. திருச்செந்தினிரோட்டகயமகவந்தாதி. 4. திருச்செந்திற் கலம்பகம். 5. திருச்செந்தூர்க் கலிவெண்பா. 6. திருச்செந்தூர்த் திருப்புகழ். 7. கந்தவருக்கச் சந்தவெண்பா.

**பத்திராதிபர்.**

## சமாசாரம்.

பிரஹ்மஞான சபையின் முன் உதவி அக்கிராஸநாதிபதியாக (Vice-President) இருந்த ஸ்ரீமாந் ஏ. பி. ஸிந்நேட்டு என்பார் கொஞ்சகாலம் சபையினின்று விலகி இருந்தவர் திரும்பவும் அந்த ஸ்தாநத்தை வகிக்கிறதாக ஸம்மதித்திருக்கிறார். பிரஹ்மஸ்ரீ Sir எஸ். சுப்பிரமணிய அய்யர் அவர்கள், இப்போது உதவி அக்கிராஸநாதிபதியாக இருப்பதில் அதை ராஜிநாமா செய்துபோவதாக ஸம்மதித்திருக்கிறார்கள்.

மதுரை, இராமநாதபுரம் ஜில்லாக்களிலுள்ள பிரஹ்மஞான கிளைச்சங்கங்களின் நான்காம் முறை கூட்டம் பரமக்குடியில் நாளிதுமீ 23, 24உ களில் கூடும்.

ஷை தேதிகளில், தஞ்சாவூர் ஜில்லாக் கிளைச்சங்கங்களின் கூட்டமும் உட்கடை என்ற கிராமத்தில் கூடும்.

மாதுஸ்ரீ அந்நிபிஸண்டு அம்மையார் இப்போது இங்கிலாண்டில் பல இடங்களில், உயர்வற உயர் நலம் அமைந்த உபந்நியாசங்கள், பிரஹ்மஞான விஷயமாகச் செய்துவருகின்றார்கள். பிரஹ்மஞான ஸபையின் பிரயோஜநத்தை ஜநங்கள் நன்றாய் அறிந்து அநேகர் ஷை ஸபையின் அங்கத்தினராக ஆகிவருகின்றார்கள். அம்மையார் அக்டோபர்மீ 10உக்குள் நம் தேசத்துக்குத் திரும்புவார்கள்.

நான்குலக்ஷம் வருஷத்திற்கு முன்னம் இருந்த சமுத்திர ஆமையின் சிலாபாவம்:—வட அமெரிக்காக் கண்டத்தில் காலி போர்னியா என்னும் நாட்டில் லாஸ் ஆங்கிலிஸ் என்னும் பட்டணத்துக்கு அருகாண்மையிலுள்ள மலைச்சாரலில் கல்லாகச் சமைந்திருக்கின்ற கடலாமையின் சிலாபாவம் புதைந்திருந்தது சமீபத்தில் வெட்டியெடுக்கப்பெற்றது. இது குறுக்களவில் 30 அங்குலமுள்ளதாகவும்,100(lbs.)பவுண்டு நிறையுள்ளதாகவும்,இருக்கிறது. இதைக் கண்டெடுத்த இடத்தின் சமீபத்தில் சமுத்திர சம்பந்தமான பல கிளிஞ்சில்கள் கிடந்தன. இது இருந்த இடம் சமுத்திர நீர்ப்பரப்புக்குமேல் 3,000 அடி உயரமுள்ளதாகவும்,இப்போது சமுத்திரம் இருக்கிற இடத்துக்கு 50 மயிலுக்கு அப்பாலுமுள்ள ஒருமலை. அமெரிக்காதேசத்தில் இதுவரையில் பூமியிலிருந்து வெட்டியெடுக்கப்பெற்ற சிலாபாவங்களில் இது மிகவும் பூர்வீகமானது. இது கண்டுபிடிக்கப்பட்ட இடமானது நான்கு லக்ஷவருஷங்களுக்கு முன்னம், ஒரு மயில் ஆழமுள்ள சமுத்திரமாக, இருந்திருக்கவேண்டுமென்று சிலாபாவ கலைஞர்கள் ஊகித்துக் கணக்கிட்டிருக்கிறார்கள். இதைக் கண்டுபிடித்தவர் டாக்டர் ஹேக்டர் அலியாட் என்பவராம்.

பத்திராதிபர்.

## பூர்ணசந்திரோதய அநுபந்தம்.

பகவான் பதஞ்சலி மஹரிஷி அருளிச்செய்த

## யோகசூத்திரம்.

(தமிழ் மொழிபெயர்ப்பு.)

☞ பிறர் இதை அநுமதியின்றி பிரசுரம் செய்யக்கூடாது.

ப. நா.

சுத்தஸாத்விக சித்தத்தை நிர்மித்து, அதன் மூலமாய், கருணையால் ஜிஞ்ஞாஸுவாகிய ஆசுரி என்பாருக்கு ஸாங்கிய சாஸ்திரத்தை உபதேசித்தார். கபிலர், மஹாவிஷ்ணுவின் அவதாரமாகையால், ஈசுவரன் பிராகிருத சரீரமில்லாதவர், அதனுல் சுத்தசித்தத்தை நிர்மித்துக்கொண்டாரெனச் சொல்லியிருக்கிறது."

3. சாதாரணமாய் ஜநங்களுக்கு, அறிவு, ரஜஸ், தமஸ் என்ற குணங்களின் சம்பந்தத்தினுல், மநம் ஆவரண விக்ஷேப சக்திகளுக்குட்பட்டிருக்கிறது. ஈசுவரனுக்கோ இவை யில்லை.

4. புத்தர், கபிலர், அர்ஹத்தர்கள் முதலான அநேக தீர்த்தங்கரர்கள் (சாஸ்திரத்தை உண்டுபண்ணியவர்கள், அவதாரபுருஷர்கள், மஹான்கள் அந்தந்த மதங்களில் ஸர்வஞ்ஞர்களாக மதிக்கப்படுகின்றமையால் அவர்களை ஏன் ஸர்வஞ்ஞர்களாகச் சொல்லக்கூடாது? ஸர்வஞ்ஞன் என்ற பதம், அநுமாநத்தினுல், ஒருவன் என்றே ஏற்படும்.

அநுமாநத்தினுல் ஸாமாந்நியமான ஞாநம் உண்டாகுமேயன்றி விசேஷஞாநம் உண்டாகாது. அவ்வீசுவரனுடைய விசேஷகுணங்களைப்பற்றிய ஞாநம் உண்டாகாது. அது ஆகமத்தினுல்தான் கூடும். (ஆகமம்=வருதல். இந்திரியங்கட்குப் புறம்பான விஷயங்களைப் புத்திக்குத் தெரிவிக்கும் சாஸ்திரம், ஆகமம். இது வழக்கமாய் வேதத்திற்கே சொல்லப்படுகிறது). ஆனுல் புத்தர் முதலியவர்களால் உண்டுபண்ணப்பட்ட சாஸ்திரங்கள் ஆகமங்கள் ஆகமாட்டா. ஆகம ஆபாசமாம். போலியானவைகள் எல்லாப் பிரமாணங்களுக்கும் விரோதமான க்ஷணிகஞாநம், ஆத்மா இல்லையென்பது முதலியவைகளை அம்மத சாஸ்திரங்கள் உபதேசிப்பதினுல் அவை புத்திக்கு மயக்கத்தை உண்டுபண்ணுகின்றன. சுருதி, ஸ்மிருதி, இதிஹாஸங்கள், புராணங்கள் இவைகள்தான் (ஈஹ)-உபய= நிஶ்ரேயஸ) அதாவது இஹ, பர, லோக விஷய சுகங்கள், சாசுவதமான பேறு இவைகளை அடைவதற்கு உண்மையான உபாயங்களை உபதேசிக்கின்றன. ஈசுவரனின் பேயர், குணங்கள் முதலியவை வேத சாஸ்திரங்களால் தான் அறியக்கூடியவை. பேயர் என்றுல் ஆறு அங்கங்கள். பத்து குணங்கள் ஏற்படுகின்றன.

இவ்விதம் வாயு புராணம்:— எல்லாவற்றையும் அறியுந்தன்மை, என்றும் திருப்தியாயிருத்தல், அநாதியான ஞானம், ஸ்வதந்தரம், குறைவில்லா சக்தி, அநந்த சக்தி இவை ஆறும் ஈசுவர அங்கங்கள் என்று அறிஞர்கள் சொல்லுகின்றார்கள். ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், தபஸ், ஸத்தியம், க்ஷமை, தைர்யம், ஜகத்தை சிருஷ்டிக்கும் சக்தி, ஆத்ம ஸ்வரூபஞானம், எல்லாவற்றிற்கும் அதிஷ்டாநமாகவிருத்தல் என்ற 10 குணங்கள் எப்பொழுதும் அழிவில்லாமல் ஈசுவரனிடம் இருக்கின்றன. இத்தன்மையான குணங்களை உடையவரானால் துக்கம் நிறைந்த இந்த லோகத்தை ஈசுவரன் சிருஷ்டித்திருக்கமாட்டார் என்ற ஆக்ஷேபணைக்கு சமாதானம்:— பரம சிரேயஸ்கரமான கைவல்லியத்தைப் பிராணிகள் அடையும் பொருட்டு சுகதுக்கங்களை ஏற்படுத்தி, அவைகளின் அநுபவங்களினால் பிராணிகளின் மனஸ் சுத்தியாகி, ஞானம் உண்டாகி, பிரகிருதி புருஷ விவேகம் ஏற்படுகிறது. அதனால் கைவல்லியம் ஸித்திக்கிறது. இது ஈசுவரனின் பரமகாருண்ணியத்தைக் காட்டுகிறது.

முக்தி இருவிதம்:—(1) சத்தியோமுக்தி (2) கிரமமுக்தி. இந்த ஜந்மத்திலேயே உடனே முக்திபெறுதல் ஒருவிதம். மேல் மேல் படியேறி மேல் மேல் லோகங்களிற் சென்று கடையில் பிரஹ்மலோகம் (7-வது லோகம்) போய் பிரஹ்மாவுடன் தங்கியிருந்து மஹா பிரளயாந்தத்தில் பிரஹ்மாவுடன் சேர்ந்து முக்தி பெறுதல் தான் கிரமமுக்தி எனக் கூறப்படுவது. ஈசுவரனால் உபதேசிக்கப்பட்ட ஞானதர்மங்களினால் அநேகர் இம்முக்தியை அடைகிறார்கள். மற்றவர்களோ பிரகிருதியில் லயமடைகிறார்கள், மரணத்துக்குச் சமானமான துக்கத்தை யடைகிறார்கள். அவரவர்கள் விகாசமுறையில் இருக்கின்றபடிகளான நிலைமையுடன் லயம் அடைகின்றார்கள். பின்பு வேறு ஒரு பிரஹ்மாண்டம் சிருஷ்டி ஏற்படுங்காலத்தில், அந்தந்த நிலையில் வெளிக்கிளம்புகின்றார்கள். ஆனால் இவர்கள் பிரகிருதிலயர்கள் அல்லர், பிரகிருதிலயர்கள் உபாஸனைக்கிரமத்தில் முக்தியடைகின்றவர்கள். பிரஹ்மாவின் ஒரு பகலில் 14 கல்பம், 14 மநு, 14 இந்திரன். இவ்வாறு அதிகாரிகள் பதினான்கு பதினான்காக நிகழும். பிரஹ்மாவின் இராத்திரி திநப்பிரளயம், ஓர் ஓர் கல்பத்தில்



பூ: புவ: ஸுவ: என்ற மூன்று லோகங்களுக்கு மாத்திரம் லயம். 4 யுகங்களும் 72 தரம் சுற்றிவந்தால் ஒரு கல்பம். இப்போது பிரஹ்மாவுக்கு 51-வது வயது நடப்பு. வைவஸ்வத மந்வந்தரத்தில் 27 தடவை சதுர்யுகங்களும் சுற்றிவந்துவிட்டன. பிரஹ்மாவின் 100-வது வயசு முற்றுப்பெறுகிற காலமே மஹாப்பிரளயகாலமாம். சத்திய லோகத்தில் பூதங்கள் எல்லாம் லயமடைகின்றன. யோகிகளின் குருபரம்பரை ஈசுவரன், ஹிரண்ணிய கர்ப்பராவர்.

26. ஸ பூர்வேஷாமபி குரு:
காலேநாநவச்சேதாத்॥

காலவரம்பைக் கடந்தவராகையால் அவர், பூர்விக ஞாநாசாரியர்களின் குருவாவர்.*

27. தஸ்ய வாசக: ப்ரணவ:॥

அவருடைய பெயர் பிரணவம்.

குறிப்பு:—பிரணவம் என்பதின் பொருள் 'என்றும் புதிதாயுள்ளது. என்பதாம்.' மற்றைய சப்த ராசிகள் மாறும். பிரணவம் ஒன்றே என்றும் மாறாதது, நித்தியமானது. 'ஓம்' என்ற பதத்திற்குப்பொருள் ஈசுவரன் என்பதே பதம், அர்த்தம் (பொருள்) இவைகளின் ஸம்பந்தம் ஸங்கேதமாக ஏற்பட்டதா, அல்லது தீபம், பிரகாசம் இவைகளின் சம்பந்தம் போன்று என்றும் உடன் நிகழ்வதா? அவருக்கும் (அர்த்தத்திற்கும்) பிரணவத்திற்கும் பதத்திற்கும் உள்ள சம்பந்தம் ஸ்வபாவமாய் என்றும் உள்ளது. மேலும், சங்கேதமென்றால் மனிதர்களுடையதன்று. ஈசுவரனால் சிருஷ்டிகாலத்திலேயே, இன்ன பதத்திற்கு இன்ன பொருளென்று சங்கற்பிக்கப்பட்டது. பதத்திற்கும் அர்த்தத்திற்கும் உள்ள சம்பந்தத்தை சங்கேதம் வெளிப்படுத்துகின்றது. பிதா, புத்திரன் என்பவர்களுக்குள் நிகழும் சம்பந்தம் என்றும் உள்ளது. அதை வார்த்தை பிரகாசப்படுத்துகிறது. ஓர் ஓர் கல்பத்தின் முடிவில், பிராணிகள் வாசனைகளுடன்

* மற்ற குருக்கள் காலவரம்புக்குட்பட்டவர்கள். அவர் ஆதி குரு சுவேதாஸ்வதரோபநிஷத்தின் யோ ப்ரஹ்மாணம் என்ற மந்திரம் இங்கு கவனிக்கத்தக்கது.

லயமடைந்து, பின்பு வேறு கல்ப ஆரம்பத்தில் எல்லா வாசனைகளுடன் வெளிவருமாறுபோல, சப்த ராசிகள் அவைகளின் சக்தியுடன் (இன்ன அர்த்தத்திற்கு இன்ன சப்தம் என்ற சம்பந்தம்) பிரளய காலத்தில் பிரகிருதியில் லயம் அடைகின்றன. பின்பு சிருஷ்டி காலத்தில் வெளிப்படுகின்றன. சப்தத்திற்கும் அர்த்தத்திற்குமுள்ள சம்பந்தம் பரிணும நித்தியம், கூடஸ்த நித்தியமன்று. புருஷன் ஒருவனே கூடஸ்த நித்தியன் சப்தராசிகள் எப்போதும் மாறிக்கொண்டேயிருக்கின்றன. பூமியினின்று உண்டாகின்ற ஜீவராசிகள் (உத்பீஜம்) மற்றகாலங்களில் பூமியோடு பூமியாக லயமாகி, வருஷகாலத்தில் வெளியாகின்றன. அவைபோல சிருஷ்டிகாலத்தில், முன் லயம் அடைந்த வஸ்துக்கள், ஜீவராசிகள், சப்தராசிகள் பின் வெளிப்படுகின்றன.*

28. தஜ்ஜபஸ்தத³ர்த²பா⁴வநம்॥

அப்பிரணவத்தை ஜபித்தலும் அதன் பொருளாகிய ஈசுவரனைத் தியானித்தலும் வேண்டும்.

குறிப்பு :—அப்படிச் செய்வதினுல் யோகியின் மனம் ஆவரண விக்ஷேபசக்தி குறைந்துவர ஐகாக்ரியம் பெறுகிறது அந்த ஐகாக்ரியததினுல் ஸமாதியும் அதன் பலனை ஈசுவரப் பிரகாசமும் உண்டாகும்.

29. தத꞉ ப்ரத்யக்சேதநாதி⁴க³மோ(அ)ப்யந்தராயாபா⁴வஶ்ச॥

அதனுல் (பிராணவ தியாநத்தினுல்) புருஷனுடைய உண்மையான ஸ்வரூபஞாநமும் விக்நங்கள் நீங்குதலும் உண்டாகும்.

குறிப்பு :—ஈசுவரப் பிரஸாதத்தினுல் வியாதி முதலானவைகள் இவனை அணுகா. இவனைவிட்டு அகன்றுவிடும். தன்னுடைய உண்மையான ஸ்வரூபத்தைப் பார்ப்பான். ஈசுவரன் சுத்தனையும், பிரஸந்நராயும் (கிலேசங்கள் இல்லாதவராயும்), கேவலனையும (புண்ணிய பாப சம்பந்தமில்லாதவனையும்), ஜந்ம, ஆயுஸ், போகங்களில்

* கடோபநிஷத்தின் பிரணவத்தைப்பற்றிய மந்திரங்கள் இங்கு கவனிக்கத்தக்கன.

Registered No. M 878.




# பூர்ணசந்திரோதயம்.

சென்னை ராஜதானியின் தென்பாகத்திலுள்ள பிரஹ்மஞானக் கிளைச்சங்கங்களின் மஹாசபையின் ஆதரவின்மேல் மதுரையில் பிரசுரமாகி நடைபெறும்

## மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.


தொகுதி 2. { 1911ளு அக்டோபர்மீ 15உ / விரோதகிருதுளு புரட்டாசிமீ 30உ } பகுதி 6.



ப. நாராயண அய்யர், B. A., B. L., F. T. S.
அ. ரங்கஸ்வாமி அய்யர், B. A., B. L., F. T. S. } பத்திராதிபர்.



வருஷ சந்தா ரூ. 2. தனிப்பிரதி அணா 4.

மதுரை
விவேகபாநு அச்சியந்திரசாலையில்,
பதிப்பிக்கப்பெற்றது.

# பொருளடக்கம்.


| | | பக்கம் |
|---|---|---|
| மாதுஸ்ரீ அந்நிபெஸண்டு அம்மையார் நமது தலைவர் அவர்படம் | ப. நா. | |
| அந்நிபெஸண்டு அம்மையார் சரித்திரம் | ரா. கிருஷ்ணமாச்சாரியார் | க௯௬ |
| வெள்ளியம்பலம் என்னும் ஞாநிகளின் சங்கமும் அதனின்று வெளிவரும் ஆசாரிய புருஷர்களும் | ப. நா. | உ0௬ |
| புத்தக வரவு<br>பத்திரிகை வரவு<br>சமாசாரம் | பத்திராதிபர் | உக௫ |
| பதஞ்சலிமகரிஷி அருளிச்செய்த யோகசூத்திரம். | | உ௬0 |



MRS. ANNIE BESANT.




# பூர்ணசந்திரோதயம்.

தொகுதி 2. | 1911௵ அக்டோபர்௴ 15௳ / விரோதகிருது௵ புரட்டாசி௴ 30௳ | பகுதி 6.

## யாதுஸ்ரீ அந்நிபெஸண்டு அம்மையார்.

நமது தலைவர்.

---

அந்நிபெஸண்டு அம்மையாருக்கு இந்த அக்டோபர் ௴ முதல் தேதியுடன் 64 ஆண்டு நிறைவு ஆகி 65-வது ஆண்டு ஆரம்பமாகிறது. அவர் பால்யகாலத்தில் உரிய கல்விகற்று யௌவநம் ஆரம்பிக்க, பேஸண்ட் என்ற பாதிரியாரை மணம்புரிந்து, ஒரு புருஷப் பிரஜையையும், ஒரு ஸ்திரீப் பிரஜையையும் பெற்றார். பின்பு விவிலிய நூலிலும், கிறீஸ்து மதத்திலும் நம்பிக்கை குன்றவே புருஷனும் ஸ்திரீயும் மதசம்பந்தமான அபிப்பிராய பேதத்தால் ஒருவரோடொருவர் நேர்மையாகவில்லாமற் போனதால், நமதம்மையார் புருஷனைவிட்டுப்பிரிந்து, கிறீஸ்துமதத்தைத் துறந்து, நாஸ்திகமதம் கைக்கொண்டு, ஸ்ரீமாந். ப்ராட்லாவுடன் நாஸ்திகமதத்தைப் பரவச் செய்தும், அநேக வருஷங்கள் பொதுஜநங்களுக்கு நலம்பயக்கும் காரியங்களில் இடையறாது விடாமுயற்சியை யெடுத்துக்கொண்டும், மநம், மெய், மொழி, இம்மூன்றும் மாறுபாடின்றி நேர்மையாய் நடைபெற்றுவரவும், ஸத்தியமே வழியென்றும், ஸத்தியமே செயலென்றும், ஸத்தியத்தையே நாடிக் காலங்கழித்தனர் எனத், தாம் இறந்தமேல் பிறர் சொல்லிக்கொண்டால் அதுவே போதுமான பாக்

கியம் என்றும், உறுதியான நன்னம்பிக்கை யுள்ளவராய்க் காலங் கழித்து வந்தனர்.

2. இப்படி வருநாளில் ஒரு ஸம்பவம் நேரிட்டது. அதாவது, ஹெலிநாம்பாள் அம்மையார் (H. P. B.) ஸங்மார்க்கஞாநக் களஞ்சியம் எனச் சொல்லத்தகும் அற்புதமான "குப்தசாஸ்திரம்" என்ற ஒரு ஞாநநூலை 1889-ம்வருஷத்தில் பிரவித்தம் செய்தார்கள். அப்புத்தகம் ரிவ்யூ ஆப் ரிவ்யூஸ் (Review of Reviews) என்னும் பத்திரிகையின் அதிபரான ஸ்ரீமாந். ஸ்டெட் (Stead) என்பாரின் பார்வைக்கு அனுப்பப்பட்டது. அவர் தம்முடைய உதவி பத்திராதிபர்களை அப்புத்தகத்தை ஆராய்ந்து அதன் தகைமையையும், உண்மையையும், தம்முடைய பத்திரிகை வாயிலாக வெளியிடும்படி கேட்டும் அவர்களால் இயலவில்லை. மாதுஸ்ரீ பெஸண்டு அம்மையார், ஒரு நாள், ஸ்ரீமாந். ஸ்டெட் என்பாரைச் சந்திக்க நேரிட்டது. அப்பொழுது அவர் சொன்னதாவது:—"அம்மணி! ஞாந நூலென்று சொல்லப்பெறும் இரண்டு பெரிய புஸ்தகங்கள் இதோ என் முன்னர் மேஜையில் இருக்கின்றன. ஹெலிநாம்பாள் அம்மையாரால் இயற்றப்பட்டு அனுப்பப்பட்டன. நம்முடைய தொழிற்கள (Office)த்தில் இப்புத்தகங்களை ஆராய்ந்து அதின் தகைமையையும் பெருமையையும்பற்றி விவரம் எழுதக்கூடியவர் இல்லை. நீவிர் இத்தன்மையான நூல்களில் அதிக அபிலாஷையுள்ளவர்; ஞாந நூல்களின் ஆராய்ச்சியில் நிபுணர். அதனால் நீவிர் இப்புத்தகங்களை நன்கு ஆராய்ந்து, அவற்றின் தகைமையையும் பெருமையையும் பிறர் உணருமாறு ஒரு வியாஸம் எழுதுவீர்கள் என, உடனே "ஓம்" என்று சொல்லிப் புத்தகங்களிரண்டையும் அம்மையார் எடுத்துக்கொண்டு தம் கிருஹம் சென்றார்.

3. இதைப்பற்றி அம்மையார் சொல்லுவதாவது:—"பக்கம் பக்கமாய், மிக ஆவலுடனே, சிதறாத சிந்தனையுடையவளாய், இப்புத்தகங்களைப் படித்தேன். மந எழுச்சி உண்டானது. பழமையானவைகளை ஞாபகத்திற்கு வருவனவாகத் தோன்றின. அவைகளிற்கண்ட விஷயங்கள் முதலில் என்னைப் பிரமிக்கும்படியாகச் செய்தன. மேற்பார்வையில் ஒன்றோடொன்று பொருத்தமில்லா



மற்றேன்றிய பலவாறான விஷயங்கள் சற்று உற்றுநோக்க, நேர்மையுள்ளவைகளாகவும்பொருத்தமுள்ளவைகளாகவும்பிரகாசித்தன. எத்தனையோ தத்துவங்களின் ரகஸியங்களும், எத்தனையோ புதிர் போன்ற விஷயங்களும் தெளிவுற்றன. இதுகாறும் பலதுறைகளை நாடித் தேடி அவைகளில் அகப்படாத உண்மைப் பொருட்களை இப்புத்தகங்களிற் கண்டேன். நாஸ்திகமத சம்பந்தமாய்ச் சமாதாநம் பெறாத அநேக கடிநமான வினக்களுக்குத் தெளிவானதும் பொருத்தமானதுமான விடைகளை அறிந்துகொண்டேன். பலவாறாகச் சமுத்திர அலையில் மிதந்துகொண்டிருக்கும் நங்கூர மிதப்புப்போல் அலைந்து கொண்டிருந்த என் மநம் சாந்தம்பெற்றது. சுகிருதம் அடைந்தேன். பிறகு இப்புத்தகங்களின் மஹிமையையும், ஞாந உயர்வையும்பற்றி விஸ்தாரமான ஒரு வியாஸம் எழுதி ஸ்ரீமாந். ஸ்டெட் என்பாரிடம்கொடுத்தேன். இப்புத்தகங்களை உலகத்திற்கருளிய அவ்வுத்தமியைத் தரிசிக்கவேண்டுமென அவரிடம் ஒருஸிபாரிஷைக்கடிதம் வேண்டினேன்." பின்பு ஹெலிநாம்பாள் அம்மையாருக்கு அவர் கொடுத்த கடிதத்தை அனுப்பியதுடன், தான் பார்க்க வராலாமோ என வினவி விநயமாய் ஒரு கடிதத்தையும் எழுதியனுப்பினார். "தங்கள் வரவை எதிர்பார்க்கிறேன்" என்ற பிரியமான பதிலும் கிடைத்தது. மாது ஸ்ரீ பெஸண்டு அம்மையாரும் வேறு ஒரு நண்பரும் மாதுஸ்ரீ ஹெலிநாம்பாள் அம்மையார் வசித்துவந்த கிருஹத்திற்கு ஒருநாள் சாயங்காலம் சென்றார்கள். அது வசந்தகாலமாயிருந்தது. கிருஹத்தில் நுழைந்தார்கள். கதவு திறக்கப்பட்டது. ஹெலிநாம்பாள் அம்மையாரைப் போன இருவரும் கண்ணுற்றார்கள். உரத்த குரலில் கணீர் என்ற சப்தத்துடன் கம்பீரமாய் "வருக, பிரியமுள்ள அந்நிபெஸண்டு அம்மை, வருக. தங்களைச் சந்திக்க வெகுகாலமாய் என்மநம் சிந்தித்துக்கொண்டிருக்கிறது" என்று ஹெலிநாம்பாள் அம்மையார் சொல்லி பெஸண்டு அம்மையாரின் கையை இறுகப் பிடித்தனர். பெஸண்டு அம்மையார் இப்பிறப்பில் முதல் முதல் ஹெலிநாம்பாள் அம்மையாரின் நக்ஷத்திரங்கள்போல் ஜ்வலிக்கின்ற இருநேத்திரங்களையும் பார்த்தார். இச்சந்திப்பைப்பற்றி மாதுஸ்ரீ பெஸண்டு அம்மையார் சொல்வதாவது "என் ஹிருதயத்தினின்று அன்பின் மிகுதியால்

மாக எழுச்சி உண்டாவதை உணர்ந்தேன். பழமையின் பிரஞ்ஞை வந்ததுபோல் தோன்றியது. பின்பு ஆலஸித்தேன். பொதுவான விஷயங்களைப்பற்றி லோகாபிராமமாக ஹெலினாம்பா ளம்மையார் பேசினார். ஞானவிஷயங்களைப்பற்றி ஒன்றும்பிரஸ்தாபித்தாரில்லை. இப்படிப் பேசிக்கொண்டிருக்குங்கால் உள்மர்மங்களைத் தாமே அறியுமாறு போல ஜ்வலித்துக்கொண்டிருக்கின்ற அத் திருநேத்திரங்கள் இரண்டும் என் கண்களின் நோக்கில் எதிர்ப்பட்டன. இனிய பிரியமுள்ள தொனியில் அடியில் வருமாறு ஹெலினாம்பாள் அம்மையார் வசனித்தனர். "என் பிரியமுள்ள பெஸண்டு அம்மை! எங்களில் ஒருவராக நீவிர் ஆதல் எப்போது? அப்படி வருவீராகில் நான்என் சொல்வேன்." அந்நிமிஷமே தடுக்கவொண்ணாத அவா என்னை மேற்கொள்ளவே, நான் தலைகுனிந்தேன். விசுவாஸத்துடன் அவரை முத்தமிட்டேன். திடீரென நான் இவ்விதம்செய்யத்தகுமோ என்று நான் என்ற அகங்காரம் என்னை மேற்கொண்டது. உடனே அத்தன்மையான என் புத்தியீனத்தை நொந்து அவ்வெண்ணத்தைத் தவிர்த்தேன். பின்பு விடை பெற்றுக்கொண்டு அம்மையார் கேட்ட கேள்விக்கு உத்தரம் செய்தலை நழுவவிட்டு என் கிருஹத்திற்கு ஏகினேன்."

4. பின்பு இருவரும் மறுபடி ஒருமுறை சந்தித்தனர். அப்போது பிரஹ்மஞானசபையில் சேரவேண்டுமென்று தமக்கிருந்த அவாவைப் பெஸண்டு அம்மையார் தெரிவித்தனர். "இச்சபையைச் சேருமுன் இச்சபையைப்பற்றியும் அது சப்பந்தமாக என்னைப்பற்றியும் கண்டபடியாக 'Psychic Research Society' என்பார் ஒரு வரலாறு விஸ்தாரமாய் எழுதிப் பிரசித்தம் செய்துள்ளார். அதைப் பார்த்ததின்மீது நீர் என்னிடம் திரும்புவீராகில், அப்போது உம்மைச் சேர்த்துக்கொள்வேன்" என்று ஹெலினாம்பாள் அம்மையார் சொன்னார். பின்பு அவ்வரலாற்றை வாங்கி ஆதியோடந்தமாக வரிவரியாய்ப் படித்து அதில் அம்மையாரைப்பற்றியும் சபையைப்பற்றியும் அவதூறாகச் சொன்னவை எல்லாம் அக்கிரமமானவையென்றும், மெய்யல்லவென்றும், அத்திய அபிப்பிராயத்துக்குப் போதுமான ஸாக்ஷ்யமில்லை என்றும், துரகங்காரத்தின்மீது



சபைக்குக் கெடுதலை உண்டுபண்ணவேண்டுமென்ற விஷம புத்தியுடன் எழுதப்பட்டவைகளே என்றும் அறிந்து, பொய்க்களஞ்சியமான அவ்வரலாற்றைத் தலைசுற்றி எறிந்து, மெய்யைப் பொய் போலும் பொய்யை மெய் போலும் காட்டும் உலகத்தாரின்கீழ் நோக்கிய புத்தியை நினைந்து வியசனித்து உண்மை தெரிந்து, பின்பு அந்நிபெஸண்டு அம்மையார் Countess Watchmeister அம்மையைச்சந்தித்து, அவர்மூலம் பிரஹ்மஞானசபையில் ஓர் அங்கத்தினராக ஏற்பட்டனர். பின்பு, ஹெலினாம்பாள் அம்மையாரைத் தரிசித்தனர். "எங்கள் சபையைச் சேர்ந்தீர்போலும்" என்றார். "ஓம் என்று சொல்லி அவர் முன்னர் பணிந்தேன். அவர் கையைப் பிடித்தேன். அவரது இருவிழிகளையும் கண்ணுற்றேன். என்னைத் தம்முடைய சிஷ்வர்க்கத்துள் ஒருத்தியாக அங்கீகரிக்க உடன்படுவீரோ? உம்மை என்னுடைய குருவாக அடைந்தேன் என்ற பாக்கியத்தை உலகில் பிரசித்தம் செய்யும்படியாக அநுமதிகொடுப்பீரோ என்றேன். கடுமையான அவர் முகம் தளர்ந்தது. எந்நாளும் சம்பவியாதபடி அவர் கண்களில் நீர் ததும்பியது. பின்பு கம்பீரமாகத் தம் கரத்தை என் சிரசின்மீது வைத்தார். "உயர்நலம் அமைந்த குணத்தோய் நீ! உனக்குக் குருப்பிரசாதம் வருக!" என்றார் இது நேர்ந்தது 1889-ம் வருஷம் மேமீ 10௨. அதுமுதல் ஹெலினாம்பாள் அம்மையாரின் மரண பரியந்தம் (8—5—1891) இருவருக்குள்ளும் நிகழ்ந்த குருசிஷ்ய சம்பந்தம் உயர்வற உயர்நலமமைந்ததாய் நடைபெற்றது; சுக்கிலபக்ஷச்சந்திரன்போல் மேன்மேலும்விருத்தியடைந்தது. அடியிற்கண்ட பாசுரத்திற்குத் தாமே உதாரணமாக மாதுஸ்ரீ பெஸண்டு அம்மையார் ஒழுகுவாராயினர்.

"சற்குணம் வாய்மை தயாவிவேகந் தண்மை
சற்குரு பாதமே சாயைபோ னீங்காமே
சிற்பர ஞானந் தெளியத் தெளிவோர்த
லற்புதமே தோன்றி லாகுஞ்சற் சீடனே". திருமந்திரம்.

5. அவர் இறந்தமேல், அக்குரு உபதேசத்திலிருந்த நன்னம்பிக்கையும் அவர்பால் பக்தியும் நாளிதுவரை அபிவிருத்தியாகிக்கொண்டே வருகின்றன என்பது பெஸண்டு அம்மையார் பலவிடங்க

அவர் பிறரதிகாரத்திற்குட்பட்டவருமல்லர்; அவரைப்போ வென்று சொல்லும்படியான பெரியார் யாருமிலர்; தாமே ஸ்வேச்சையாக உலகத்தில் தோன்றவேண்டுமெனச் சிந்தனையுண்டானால், அவ்விதம்நடக்கும் தகைமையுள்ளவர். அவரே ஜகத்குருவாவர். மஹர்ஷி போதிசத்வா பகவான் 'மைத்திரேய'ராவர். இனி புத்தராக ஆகப்போகின்ற மகாபுருஷரும் அவரே. குப்தமார்க்கமுறையைக் கொஞ்சமறிந்துள்ள யாம், உலகத்தில் அவரிருக்கிறார் என்பதற்கு அநுபவரூபமான சாக்ஷியாயிருக்கின்ற யாம், அவர் வரவை எதிர்பார்க்கின்றோம். ஜநங்கள் நிறைந்த உலகில் அவர் இறங்கும் முறையில் ஹிமாசலத்தின் செங்குத்தான பாறைகளில் அவருடைய காலடியின் எதிரொலி கேட்க ஏற்கனவே ஆரம்பித்திருக்கின்றது.! ' அதோ! அங்கே! நிற்கின்றார். அவர், தாம் வெளிவரும் காலத்தை நோக்கி, நிற்கின்றார். முன்னொரு காலத்தில் அவரை யூதர் தள்ளின உலகத்தை அன்பார்ந்த கண்ணினால் கருணையுடன் திரும்பவும் பார்க்கின்றார்காண்! உலகம் முன்போல், ஒருகால் அவரை யங்கீகரியாமல் அலக்ஷியம் செய்தாலும் செய்வதாகும்! ஆயினும், அவர் வரவேண்டிய உரிய காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு நிற்கின்றார்! அவர் வருமுன்னர் அவர் வரவை அவர் தூதர்கள் எங்கும் பிரசித்தம் செய்வார்கள். உலக ஜநங்கள் அவர் வரவை யங்கீகாரம் செய்யும் பொருட்டுச் சொற்பமேனும் ஆயத்தம் செய்யப்பெறுவார்கள்.

20. அவர் வருவார் என்று உலக ஜநங்கள் இப்பொழுது எதிர்பார்த்துக்கொண்டு மௌநம் சாதிக்கின்றார்கள். ஒரு ஞாநகுரு அவதாரமாகவேண்டியதென்றும், உலகத்திலுள்ள மதங்களெல்லாம் ஒருமைப்பட்டுச் சமரசமாக அமைந்து நடைபெறவேண்டுமென்றும், ஜநசமூகத்தில் உண்மையான சகோதரபாவம் நிகழவேண்டுமென்றும், மேனாட்டில் சமயமுறைக்கேற்பட்ட ஒவ்வொரு பிரசங்க பீடத்தினின்றும் தாகமுள்ள முறைப்பாடு கோஷித்துக்கொண்டிருக்கின்றது. உலகத்தின் ஹிருதயமானது அவ்வரவை எதிர்பார்த்து நன்னம்பிக்கை கொண்டு துடிக்கின்றது. உலகத்தின் மநம் அவர் வரவை ஆவலுடன் சிந்தனைகொள்ள ஆரம்பிக்கின்றது. சில வருஷங்களுக்குள்ளாக சமீபகாலத்தில் அவர் நல்வரவை வேண்டி



ஜநசமூகத்தினின்றும் ஆவல் பொருந்திய பெருகிய ஆரவாரம் அவரை நோக்கிச் செல்லும். அவர் சிரவணேந்திரியமோ, நுண்ணிய சப்தத்தையுங் கேட்கு மியல்பினது. அவருடைய ஹிருதயமோ, உலகம் க்ஷேமம் பெறுதலுக்கு விரோதமாய் ஒருகாலும் அடைபடாதது. அதனால், தாகத்துடன் நாம் அவரை நோக்கிச் செய்யும் பிரார்த்தனை இதுவாம். "உயர்தர வெள்ளியம்பலத்தின் முதல்வ! உலகத்தின் நிகழும் சமயங்களை நடாத்தும் மகாத்மாவே! உலகத்திற்கு வந்தருளவேண்டும்; உம்முடைய சந்நிதாநத்தை யுலகம் வேண்டுகின்றது; உம்முடைய சந்நிதாநத்தை நோக்கிப் பேராவல் கொண்ட ஜநங்களைக் கடாக்ஷித்தருளும். சாந்தமும் சமாதாநமும் பயக்கும்படியாக அம்முதுமொழியை உரையீரோம். அதன் மூலமாய் ஜநசமுகத்தில் நிகழ்கின்றஉலகப்போராட்டங்களைத் தொலையும்.சகோதர தர்மமென்ற வார்த்தையை யுரைத்தருளும்! அதனால் ஜாதிகளுக்குள் நிகழ்கின்ற வைஷம்யமும் மேல் கீழ் என்ற போராட்டமும் அழிவுறும். *ஜநசமூகமெல்லாம் ஒரே குலம் என்ற மெய்யுணர்வை மனிதர் மநத்தில் பதியவையும். உம்முடைய அன்பின் பூர்ண வலியுடன் உலகில் தோன்றுவீராக. உம்முடைய கம்பீரமான சக்தியுடன் விஜயம் செய்வீராக. உம்முடைய வரவை யெதிர்பார்த்துக் கொண்டிருக்கின்ற உலகை ரக்ஷிப்பீராக. தேவர்கட்கும் மனிதர்கட்குஞ் சமமான குரு நீரே யாவீர்.

ஓம் தத் ஸத் ஓம்.

ப. நா. அந்நிபெஸெண்டு.

## நன்மொழி.

---

112. நல்ல புத்தகங்கள் வாலிபத்தில் நல்வழிப்படுத்தும் நற்றுணையாம்; முதிய வயதில் மநத்தைச் சுகப்படுத்தும் நண்பன் போன்றவையாம்; தனிமையாயிருத்தலின் துன்பத்தைத் தொலைத்து ஆறுதல் பயக்கும் ஆதரவாம்; உலகவாழ்வில் மனிதர் கொடுமையையும், நக்கவலையையும், துக்கத்தையும் மறக்கச்செய்யும் நற்சாதநங்களாம்.

---

*ஒன்றேகுலமும், ஒருவனே தேவனும் நன்றே நினைமின்—திருமந்திரம்.

## புத்தகவரவு.

**பதரிவனத்தம்மி:**—இது தஞ்சாவூர் ஜில்லா இரண்டாம் கட்டளேயி லிருக்கும் ஸ்ரீ கங்காஜடேச சர்மா அவர்களால் இயற்றிய புத்தகம்; நன்ருய் அமைந்துள்ளது. இதன் விலை அணு 1 தான்.

## பத்திரிகைவரவு.

**நாடகாபிமானி:**—இப்பெயருள்ள ஓர் மாதாந்த ஆங்கிலத் தமிழ்பத்திரிகையின் இரண்டாம் பகுதி நமக்குக் கிடைத்திருக்கிறது. இத்தகைய பத்திரிகை மிகவும் அவசியமானது. இயல், இசை, நாடகம் என்ற முப்பான்மையாய்த் தமிழ்ப் பாஷை நடைபெற்றது. இயலைத்தவிர, இசை நாடகமுறைகள் சம்பந்தமான பிராசீந இலக்கியங்கள் இப்போது நடைபெறுகின்றனவாகத் தோன்றவில்லை. நாடகம் என்பதும் ஜநங்களை நல்வழிப்படுத்தும் இலக்கிய சாதநங்களில் முதன்மை பெற்றதாம். அதனைப் பயிலுவோர்சிலர் குறைவால் அதன் கௌரவம் குன்றி நாளடைவில் அதுவும்டொய்த்துப்போனதுபோலும். இக்காலத்தில் மேல் நாட்டு நாகரிகத்தின் தூண்டுதலால், நாடகமுறை உயர்நலம் பெற்றுவருகிறது. அது சம்பந்தமாக, தனித்துப் பத்திரிகை இருக்குமாயின் அதன் நலத்தை அபிவிருத்தி செய்ய இயலும். பிரகிருத பகுதியிற் கண்ட வியாசங்கள் நன்ருய் எளிய தமிழில் எழுதப் பட்டுள்ளன. இவ்விதமே இனிவரும் பத்திரிகையின் பகுதிகள் இருக்குமாயின் இப்பத்திரிகை நம் நாட்டாருக்கு நனிநலம் பயக்கும் என்பதில் சந்தேகமில்லை. இப்பத்திரிகை சில பாகம் ஆங்கிலத்திலும், சில பாகம் தமிழிலும் இப்போது எழுதப்பெற்று நடைபெறுகின்றது. பூர்ணமாய் இப்பத்திரிகை தமிழிலேயே எழுதப்பெற்று நடைபெறுதல் அதிக பயன் அளிக்குமன்ருே? அவ்விதம் இப்பத்திரிகை நடைபெறவேண்டுமென்பது நமது பிரார்த்தனை.

## சமாசாரம்.

ஒரு பெட்டைக்கோழிக்கு, துவைறு மாத்திரையைத் திநந்தோறும் கொடுப்பதினுல், திநமொன்றுக்கு 2 முட்டைகள் இடுகிறதாக பாஸ்டன் வைத்திய பத்திரிகை தெரிவிக்கிறது.

---

ஒளியைச் காணுமுன்னர், ஒளியைப் பார்க்கும் நேத்திரத்தின் அமைப்புமுன்னரே பூர்ணமாய் ஏற்பட்டுள்ளது. அவ்விதமே, ஒலியின் சம்பந்தம்



ஏற்படும் முன்னரே, கர்ணேந்திரியத்தின் அமைப்பு பூர்ணமாய் ஏற்பட்டுள்ளது. இதனுல், இவைகள் முன்னர் பூர்ணமாய் அமையும்படி செய்தது யாது என அறியும்பொருட்டு ஒரு மேனுட்டு புலனறிவு சாஸ்திரி ஆராய்ச்சி செய்தவர், சூக்ஷ்மமான ஒரு சக்தி இருத்தற்பாலது எனத் தீர்மானித்துள்ளார். அஃதை ஆத்மா என்று சொல்லலாம் என்ருர். இவ்விதமே சாந்தோக்கிய உபநிஷத்தும், (VIII-12, 4, 5.) உபதேசித்திருக்கிறது. ஆத்மா ஸ்தூலமான பிராகிருத பூமியில், பார்க்கவும், கேட்கவும், முகரவும், நுசிக்கவும், நினைக்கவும் விரும்புகிருன். அதனுல் கண், காது, கிராண இந்திரியம், ருசிக்கிற இந்திரியம், மநம் என்ற கரணங்களை உண்டுபண்ணிக் கொள்ளுகிருன். மேனுட்டுப் புலனறிவு சாஸ்திரிகள், சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தங்கள் முன் ஏற்பட்டு, அவைகளின் தூண்டுதலால், அவைகளுக்குரிய இந்திரியங்கள் உண்டாயின என்ருர்கள். இப்போது அதிக ஆராய்ச்சியால் அதற்கு மாருன அபிப்பிராயங்கொள்ள இடம் உண்டாயிற்று. இதைப்பற்றி "ஹிந்து மததூஷணையின் பரிகாரம்" என்ற நூலில் 75, 76-ம் பக்கங்களைப் பார்க்க.

---

சென்ற மீ 24, 25வ களில் பரமக்குடியில், மதுரை இராமநாதபுரம் ஜில்லாக்களிலுள்ள பிரஹ்மஞாந க்கிளைச்சபைகளின் கூட்டம் நான்காம் முறை கூடிற்று. காலிபோர்ணியா நாட்டின் சான்பிரான்ஸிஸ்கோ என்னும் நகரவாஸியாகிய ஸ்ரீமாந் இர்விங்க கூபர் என்பார் அக்கிராஸநம் வகித்தார். "இந்தியா தேசம் உலகத்திற்கு, முக்கியமாக மேனுட்டாருக்கு செய்யும் உபதேசம்" என்பதைப்பற்றியும் "மநச்சாந்தமே யோகம்" என்பதைப்பற்றியும் அவர் விஸ்தாரமாக உபந்யாசம் செய்தார். "கர்மகதியைப்" பற்றி மகா-ள-ள-ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி சாஸ்திரிகளும், "பிரஹ்மஞாநத்தைப்பற்றி மகா-ள-ள-ஸ்ரீ அ. ரெங்கஸ்வாமி அய்யரவர்களும், மனித சரீரத்தின் மகிமையைப்பற்றி டாக்டர் ஆர். சி. கிருஷ்ணஸ்வாமி அய்யரவர்களும், புநர்ஜந்மத்தைப்பற்றிப்பெரியகுளம் மகா-ள-ள-ஸ்ரீ சுந்தரராஜஅய்யர் அவர்களும், "மாதங்களுக்குள் மார்க்கசீர்ஷோஸ்மி" என்பதைப்பற்றி மகா-ள-ள-ஸ்ரீ எம். நாராயணஸ்வாமி அய்யர் அவர்களும், பக்தியைப்பற்றி பண்டிதர் சாம்பசிவ சாஸ்திரி அவர்களும், மஹாத்மாக்களை அடையும்முறையைப்பற்றி மகா-ள-ள-ஸ்ரீ எல். சுப்பிரமணிய அய்யர் அவர்களும், உபந்யாசம் செய்தார்கள். ஸ்ரீமாந் ராமச்சந்திர நாயக்கர் அவர்கள் "பிரஹ்மஞாநசபையின் நோக்கங்களை"ப்பற்றி எழுதியனுப்பிய வியாசமும் வாசிக்கப்பட்டது. 24உ ஞாயிற்றுக்கிழமை இரவில், புகைப்படம் மூலமாய் வாநசாஸ்திரத்தின் சில அற்புதங்களைப்பற்றி மகா-ள-ள-ஸ்ரீ மதுரை ப. நாராயண அய்யர் அவர்கள் உபந்யா

சம் செய்தார்கள். பரம்பக்குடிக் கிளைச்சபையார் விருந்தோம்பல் என்ற தர்மத்தைச் செவ்வையாக நடத்தினார்கள். இரண்டு ஜில்லாக்களிலுள்ள சபைகளின் அங்கத்தினர்கள் 50 பெயர்களும் 100 அபிமானிகளும் கூடின ர்கள். இறைவன் அருளால் எல்லாம் நன்றாய் நடைபெற்றது.

---

தஞ்சாவூர் ஜில்லா உக்கடை கிராமத்தில், அஜ்ஜில்லாவின்கண்ணுள்ள பிரஹ்மஞானக் கிளைச்சங்கங்களின் பெரிய கூட்டம் சென்றமீ 23, 24வ களில் கூடிற்று. மிகவும் விமர்சையாக அது நடைபெற்றது. மகா-ள-ள-ஸ்ரீ சப்ஜட்ஜு தேசிகாச்சாரியார் அவர்கள் அக்கிராஸநம் வகித்தார்கள். அநே கர் உபந்நியாசம் செய்தார்கள். மகா-ள-ள-ஸ்ரீ நீலகண்ட சாஸ்திரிகள், கெ. நாராயணஸ்வாமி அய்யர்அவர்கள் செய்த உபந்நியாசங்கள் முக்கியமாக நன்கு மதிக்கத்தக்கன. மகா-ள-ள-ள-ஸ்ரீ ராவ்பகதூர் அண்ணாசாமித் தேவர் அவர்கள் வந்த விருந்தினர்களை மிகவும் அன்புடனே ஆதரித்தார்கள்.

பத்திராதிபர்.

---

## நன்மொழி.

---

சத்சங்கத்தின் பிரயோஜனம்.

113. சன்மார்க்கத்தில் ஒழுகுவான், மநம் சிதராமல், ஒருமுகப் பட்டவனாய் இருத்தல்வேண்டும். உலக சம்பத்து பெறவேண்டு மானாலுங்கூட மநம் ஐக்காகிரதை பெற்றவனே நலம்அடைகிறான். ஒருநிலைப்பட்ட தீர்மானம் கொள்ளுதலால் உண்டாம் நலம் நன்கு கவனிக்கத்தக்கது. உலக சம்பத்துக்கருதுபவனுக்கு, அவன் பலன் அவன்முன் நேரே தோன்றும். சன்மார்க்கத்தில் ஒழுகுபவனுக்கு அவன் பலன் அவன்முன் நேரே தோன்றாது. அது மறைந்தே இரு கும். இக்காரணம்பற்றியே, ஓர் ஓர் சமயத்தில், அவன் கொண்ட தீர்மானம் தளரும்;மன ஐக்காகிரதையும் உலைந்து சோர்வுபெறும், சிதரும். இவ்வண்ணம் நேராதபடி நம்மைவிட அந்நெறியில் பழகி மேன்பாட்டை பெற்றவர் சங்கத்தை நாடவேண்டும். அவர் உண் மையைக்கண்டவராயிருப்பர். நமக்கு தடுமாட்டமும் மந நொய்மை யும் வரும்போது, அவர் அநுபவஞானத்தால் நம்மைத் தேற்று வர், நம்மநம் தெளிவிப்பர்.

# பூர்ணசந்திரோதய அநுபந்தம்.

பகவான் பதஞ்சலி மஹரிஷி அருளிச்செய்த

## யோகசூத்திரம்.

(தமிழ் மொழிபெயர்ப்பு.)

☞ பிறர் இதை அநுமதியின்றி பிரசுரம் செய்யக்கூடாது.

ப. நா.

லானும் எப்படி இருக்கிறானோ, அப்படியே புத்திக்குப் பிரகாசத்தை உண்டுபண்ணுகிற புருஷனும் இருக்கிறான். விருத்த தர்மங்கள் உள்ள இரண்டு வஸ்துக்களில் ஒன்றை அறிந்தால் மற்றதை அறிய முடியாது. ஒரே மாதிரியான தர்மங்களையுடையவைகளாக இருப்பின் ஒன்றை அறிந்தால் மற்றதை அறிதல்கூடும். அதனால், ஈசுவரனுக்கும் புருஷனுக்கும் (யோகியின் புத்திக்கு சாக்ஷியான புருஷனுக்கும்) மேற்கண்டபடி குணஸாம்யமிருப்பதால் ஈசுவர ஸ்வரூபத்தை அறிவதால், புருஷ ஸ்வரூபத்தை அறிவதாகும். பிரத்தியக்சேதநன் என்றால் அவித்தியாவான், அதாவது உள்ளபடி அறியாமல் விபரீதமாக அறிகிறவன் என்பதாம். இதன் தேர்ந்த கருத்து, இந்தப் பிரணவ உபாஸனையால், சித்தம் அந்தர்முகப்படுதலும், தடைகள் நீங்குதலும் உண்டாகும்.

30. வ்யாதிஸ்த்யாநஸம்ஶயப்ரமாதாலஸ்யாவிரதிப்ராந்தி
தர்ஶநாலப்தபூமிகத்வாநவஸ்திதத்வாநி சித்தவி
க்ஷேபாஸ்தேऽந்தராயா:॥

தடைகளாவன:—(1) வியாதி, (2) மநநோய்மை, (3) ஸம்சயம், (4) பிரமாதம், (5) ஆலஸ்யம், (6) அவிரதி (துறத்தல்இன்மை), (7) பிராந்தி தர்சநம், (8) யோகபூமியை அடையாமை, (9) சமாதிநிலையினின்று நழுவுதல். மநத்திற்கு விக்ஷேபத்தை யுண்டுபண்ணும் தடைகளான், இவை ஒன்பது, இவைகளால்தான் மநோவிர்த்திகள் உண்டாகின்றன.

குறிப்பு:—வியாதி வாத, பித்த, சிலேஷ்மதாதுக்களும், ஆகாரங்களின் ரசமும், மநஸ் முதலிய விந்திரியங்களும் நேர்மையில்லாமல் விருத்தலால் உண்டாகும்.

மநநோய்மை = ஒரு காரியத்தைச் செய்வதற்குத் தகுதியில்லாமை, அதாவது, பூர்வ அநுபவமின்மையாலும், பூர்வ ஸம்ஸ்காரமின்மையாலும் ஒரு காரியத்தைச் செய்வதற்குத் தகைமையின்றிருத்தல்.

ஸம்சயம் = இதுவோ அதுவோவென்று சந்தேகங் கொள்ளுதல்.

பிரமாதம்=ஸமாதி ஸாதநங்களில் பிரவிர்த்தியில்லாமை.

ஆலஸ்யம்=தமஸினால், சரீரம், மநம், இரண்டும் பிரவிர்த்திக்காமல் இருத்தல்.

அவிரதி=விஷய சுகங்களின் மேல் ஆசை, விஷயங்களில் ஒழிவில்லாமை.

பிராந்திதர்சநம்=பிரமையினால் ஒன்றை வேறொன்றாகவறிதல்.

யோகபூமியையடையாமை=யோகாப்பியாஸம் செய்துகொண்டுவருகையில் உயர்ந்த ஸமாதி நிலையைப் பெறாமல் கீழான பூமிகளின்கண் உண்டாம் சித்திகளின் மேல் ஆசைகொண்டு, அவைகளில் திருப்தியாகவிருத்தல்.

ஸமாதிநிலையினின்று நழுவுதல் = ஸமாதி நிலைபெற்ற பிறகு அதைக் காப்பாற்றிக்கொள்வதில் முயற்சியில்லாமை.

31. து:³க²தௌ³ர்மநஸ்யாங்க³மேஜயத்வஶ்வாஸப்ரஶ்வாஸா
விக்ஷேபஸஹபு⁴வ:॥

துக்கம், தௌர்மநஸ்யம், சரீர நடுக்கம், உச்வாஸம், நிச்வாஸம் இவை விக்ஷேபத்துடன் நிகழ்பவை.

துக்கம் என்பது ஆத்தியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் இவைகளால் உண்டாகும். துக்கம் பிரதிகூலமான அநுபவம்.

தௌர்மநஸ்யம்=செய்த முயற்சி பலிக்காமல் அதனால் உண்டாம் மநச்சஞ்சலமாம்.

சரீரநடுக்கம்=அங்கங்களின் அசைவு. இது யோகாப்பியாஸத்திற்கு விரோதி.

உச்வாஸ நிச்வாஸம்=நம்முடைய ஸ்வாதீநமின்றி காற்று உள்ளே போதலும் வெளியே வருதலும்.

ரேசகம், பூரகம் என்றவை இத்தனை மாத்திரை என்ற அளவுக்குட்பட்டு சுவாஸம் நடைபெறும்படி செய்தல்.



32. தத்ப்ரதிஷேதா⁴ர்த²மேகதத்த்வாப்⁴யாஸ:॥

இவைகளை நிவிர்த்தித்து ஒன்றான தத்துவத்தை மாத்திரம் அப்பியஸித்தல் வேண்டும்.

குறிப்பு:—(1) நிவிர்த்தித்து என்றால், முன் சொல்லியிருக்கிறபடி, வைராக்கியத்தால் நிவிர்த்தி ஏற்படுத்தலாம். ஒன்றான தத்துவம் என்பதற்கு ஈசுவரன் என்பது அர்த்தமாம். விஞ்ஞாநபிக்ஷுவின் அபிப்பிராயப்படி யாதேனும் ஒரு தத்துவத்தைப் பற்றிச் சிந்தனை கொள்ளுதல் இதில் பயன்படும் என்கிறார். ஆனால் முன்னுள்ள சூத்திரங்களை நோக்க, ஈசுவரன் என்று கொள்ளுதலே உசிதமாகும். மேலும் மநம் ஒருமுகப்படவேண்டுமென்றால் உயர்வற உயர்நலமமைந்த அந்த பரம புருஷனைத் தியானித்தலே வேண்டும்.

(2) க்ஷணிக விஞ்ஞாந வாதிகளின் மத கண்டநம்:—

(a) அவர்கள் மதப்படி, மநோவிர்த்திகளைத் தவிர, மநம் என்று பிரத்தியேகமாக வேறொன்றுமில்லை. ஒவ்வொரு விர்த்தியும் க்ஷணிகம் அதனால் ஒவ்வொரு விர்த்தியும் நிகழ்தல் ஏகாக்கிரமாகும். அதனால் விக்ஷிப்தமே இல்லை என முடியும். அதனால் யோகாப்பியாஸமுயற்சி வேண்டுவதில்லை யெனவேற்படும். அது சரியன்று, மநம் வேறு, க்ஷணிகமன்று, நிலையுள்ளது. ஒரு பதார்த்தத்தைப் பல பதார்த்தங்களினின்று வேறுபடுத்தி அந்த வேறுபடுத்தப்பட்ட பதார்த்தத்தில் மநத்தை நிற்கும்படி செய்தல் கூடும். அதனால் ஏகாக்கிரம் ஏற்படும், அதனால் விக்ஷேபநிவிர்த்திக்காகச் செய்யவேண்டிய முயற்சி பிரயோஜநமுள்ளதுதான்.

(b) க்ஷணிகவிஞ்ஞாந வாதிகளின் வேறு அபிப்பிராயம்:—விர்த்திகள் பல உள. அவைகளின் பிரவாகத்தில், ஒரே விர்த்தியாகவே மநம் மாறி நிற்றல் கூடுமன்றோ? அது சரியன்று. அவர்களின் ஸித்தாந்தப்படி, விர்த்தியும் மநமும் க்ஷணிகமென்பதனால், இரண்டிலும் பிரவாகம் ஏற்படுதல் கூடாது. அதனால் ஏகாக்கிரம் உண்டாவதற்கு அவகாசமில்லை. நான் என்ற ஆலய விஞ்ஞாநம் (சாமாந்நிய அகங்காரம் என்பார் வேதாந்திகள்) என்ற ஸ்திரமான நிலைமை

இருக்கின்றது என்றாலோ, அந்த "நான்" என்பதற்கு விக்ஷிப்தமின்மையாலும், விக்ஷிப்தம் மறத்தையே பொறுத்ததாகவிருக்கின்றமையாலும் யோகமுயற்சி பிரயோஜநம் இன்றே என்பது ஏற்படும்.

(c) க்ஷணிக விஞ்ஞாநவாதிகள், அதாவது வைநாசிகர்களின் சித்தாந்தத்தில், தர்மம் ஒன்றே உளது. அது ஆசிரயிக்கும் தர்மி என்பது இலது என்பதாம். அதனால் அந்தக்கரணம் இல்லை என்பார். விர்த்திகளின் பிரவாகம் இருக்கின்றது என்றால், அது சரியன்று. பிரவாகம் என்றால் ஸஜாதீயப் பிரத்தியயம் (ஒரே மாதிரியான விர்த்திகள்) தொடர்ந்து நிகழவேண்டும். அப்படியில்லாமல் விஜாதீயப் பிரத்தியயம் (விருத்தமான பிரத்தியயங்கள்) நடைபெற்றால் பிரவாகம் எங்ஙனம் உண்டாகும்? விர்த்திகள் தனித்தனியாக உண்டாகி அழிகின்றமையால், ஒரு விர்த்தியின் பலனை மற்றொரு விர்த்தி அநுபவிப்பதும் அறிதலும் எங்ஙனம்?

(d) மநம் ஒவ்வொரு க்ஷணத்திற்கும் வேறு வேறு என்றால் நான் என்ற அநுபவம் நிகழமாட்டாது. விர்த்திபேதங்கள் இருப்பினும், நான் என்ற தொடர்புள்ளது. விர்த்திகள் விஷயங்கள் வெவ்வேறாயினும், நான் என்ற ஞாநம் அபிந்நமாக அநுபவத்திலிருக்கின்றது. சித்தம் ஒவ்வொரு விஷயத்திற்கும் வேறு வேறாயின், இந்த நான் என்ற அநுபவம் எப்படி உண்டாகும்? அது பிரமை (மருள்) என்று சொல்வது சரியன்று. அபேதமான 'அஹம்' என்ற ஞாநம் பிரத்தியக்ஷமான அநுபவம். இதற்கு விரோதமான வைநாசிகர்களின் மதம் சரியன்று.

33. மைத்ரீகருணாமுதிதோபேக்ஷாணாம் ஸுகதுக்க புண்யாபுண்யவிஷயாணாம்பாவநாதஶ்சித்த ப்ரஸாதநம்॥

சுகமாயிருப்பவர்கள், துக்கிக்கிறவர்கள், புண்யம் செய்பவர்கள், பாபிகள், இவர்களிடம் முறையே ஸ்நேஹம், கருணை, சந்தோஷம், உபேக்ஷை இப்பாவனைகளை அப்பியாசம் செய்வதால் மநம் பிரஸாதம் பெறுகிறது.

## பூர்ணசந்திரோதய விளம்பரம்.

சந்தா விவரம்.

வருஷசந்தா தபாற்கூலி உள்பட ரூ. இரண்டுதான்.
தனிப்பிரதி விலை அணு 4.

விளம்பர விகிதம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஒருபக்கம் 1 மாசம் | 4—0—0 | அரைபக்கம் 1 மாசம் | 2—8—0 |
| ,, 3 ,, | 10—0—0 | ,, 3 ,, | 7—0—0 |
| ,, 6 ,, | 20—0—0 | ,, 6 ,, | 12—0—0 |
| ,, 1 வரு | 36—0—0 | ,, 1 வரு | 18—0—0 |

ப. நாராயண அய்யர்,
பத்திராதிபரும் மானேஜரும்.

## புஸ்தகம், துண்டு பத்திரிகைகள் விளம்பரம்.

| | |
|---|---|
| பிராசீந தர்மங்களின் உயர்வும், இக்கால ஆசாரங்களும் | 0-6-0 |
| மனிதனின் வமிசாவளியின் உண்மை | 0-4-0 |
| ஹிந்துமததூஷண பரிகாரம் | 0-4-0 |
| Avvayar's Yoga aphorisms in English | 0-4-0 |
| அவதாரங்களின் உண்மை | 0-8-0 |
| ஏசுகிறீஸ்து என்பார் சரிதம் | 0-0-6 |
| தேவாலயம் | 0-0-3 |
| தர்மசத்திரங்களும் அவைகளின் சீர்திருத்த முறைகளும் | 0-0-3 |
| இந்தியபுத்திரர்களின் சங்கம் | 0-0-3 |
| பிரஹ்மஞாந சபை | 0-0-1 |
| ஷை யந்திரம் | 0-0-2 |
| பிரஹ்மவித்யை | 0-0-2 |
| ஷை ஆங்கிலத்தில் | 0-0-3 |
| அஷ்டபிரதக்ஷிணம் | 0-0-1 |
| ஏசுகிறீஸ்து என்பார் ஒழுகிக்காட்டிய ஒழுக்கமுறைநூல். The Imitation of Christ (in Tamil) | 1-0-0 |
| மௌநவாக்கு | 0-2-0 |
| சந்மார்க்கதீபம் | 0-2-0 |

மேற்கண்டவைகளுக்கு 100-க்கு 10 கமிஷன் கொடுக்கப்படும். தபாற்கூலி பிரத்தியேகம். வேண்டுவோர் அடியிற்கண்டவரிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம்.

ப. நாராயண அய்யர்,
பிரெசிடெண்டு, பிரஹ்மஞாந சபை, மதுரை.

Registered No. M. 878.



# பூர்ணசந்திரோதயம்.

சென்னை ராஜதாநியின் தென்பாகத்திலுள்ள பிராஹ்மணநக் கிளைச்சங்கங்களின் மஹாசபையின் ஆதரவின்மேல் மதுரையில் பிரசுரமாகி நடைபெறும்

## மாதாந்தத் தமிழ்ப்பத்திரிகை.

தொகுதி 2. { 1911ஸு நவம்பர்மீ 15உ / விரோதகிருதுஸு ஐப்பசிமீ 30உ } பகுதி 7.

ப. நாராயண ஐயர், B. A., B. L., F. T. S.
அ. ரங்கஸ்வாமி ஐயர், B. A., B. L., F. T. S. } பத்திராதிபர்.

வருஷ சந்தா ரூ 2 தனிப்பிரதி அணு 4.

மதுரை:

விவேகபாநு அச்சியந்திரசாலையில் பதிப்பிக்கப்பெற்றது.

பொருளடக்கம். பக்கம்.

மோக்ஷம் அல்லது வீடு பெறல்—ப. நா. உகரு

மநுஷ்ய யத்நமும் } ரா. இராகவையங்கார் உசசு
ஈசுவர கிருபையும் }

துறவு—மு. வேங்கடசாமி நாட்டார் உசஅ

ஆகாசக் கப்பல்களுக்கும் புகைக்கூண்டு } ப. நா. உருரு
களுக்கும் விபத்து }

புருக்களின் மூலமாய் போட்டகிராப் எடுத்தல்—ப. நா. உருச

முத்துக்களை ஆக்கி வளர்க்கும் முறை—ப. நா. உருரு

ஓய்வுநேரத்தை ஒழுங்காய்க் கழிக்கும் முறை—சி. வ. உருசு

சுமதி என்னும் உத்தமியின் சரித்திரம்—எஸ். சாமிநாதையர் உருஎ

சமாசாரம்—பத்திராதிபர். உசாரு

பதஞ்சலிமகரிஷி அருளிச்செய்த யோகசூத்திரம்.






# பூர்ணசந்திரோதயம்.


தொகுதி 2. } 1911ஆ நவம்பர்மீ 15உ விரோதகிருதுஆ ஐப்பசிமீ 30உ } பகுதி 7.


## மோக்ஷம், அல்லது வீடு பெறல். *

நன்ருய் ஞானம் கடந்துபோய் நல்லிந்திரியம் எல்லாம் ஈர்த்து
ஒன்ருய்க் கிடந்த அரும்பெரும்பாழ் உலப்பிலதனை உணர்ந்துணர்ந்து
சென்ருங்கு இன்பத் துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்ருல்
அன்றே அப்போதே வீடு அதுவே வீடு வீடாமே.—திருவாய்மொழி.

1. கிறீஸ்து மதத்தின் ஆரம்பகாலத்தில் ஞான முறையில் பயின்ற ஞானிகள் சிறுபான்மையோர் (Gnostics) நடைபெற்ற காலத்தில், புநர் ஜந்மம் உண்டு என்ற கொள்கையானது கிறீஸ்துவர்களுள் இருந்தது. ஒரு பிறப்பில் ஒருவன் செய்யும் நன்மை அல்லது தீமையானது, முறையே நித்திய சுகம், அல்லது நித்திய துக்கமுள்ள கதியை உண்டுபண்ணு மியல்பினது என்ற இப்போது வழங்குகின்ற அறிவில்லாத சித்தாந்தம் அப்போது நடைபெற ஆரம்பிக்கவில்லை; மோக்ஷமும் நரகமும் ஒரு ஜந்மத்தின் வினைப்பயனுக ஏற்படும் என்ற கொள்கை தலைப்படவில்லை. பின்பு, அச்சிறுபான்மையான ஞானிகள் பொய்த்துப்போய், அறிவிலிகளான பெருங்கூட்டத்

* Based upon Mrs. Besant's article on "Liberation or Salvation" in the "Theosophist" Vol. XXXI Part ii.

தார்கள் தலைப்பட, "புநர்ஜந்மம் உண்டு" என்ற கொள்கையானது அம்மதத்தினின்றும் விலகிப்போயிற்று. அந்த ஞாநிகள் இருந்த காலத்தில், மோக்ஷம் என்பதற்கு உயர்நலமமைந்த கம்பீரமான அர்த்தம் ஏற்பட்டிருந்தது. மோக்ஷம் பெற்றவன் என்றால் ஈசுவர ஸாக்ஷாத்காரம் பெற்றவன்; மெய்யுணர்வுள்ளான்; மரணதர்மத்தை ஜயித்தவன்; நித்தியத்வத்தை அடைந்தவன்; ஸ்வர்க்கத்தில் தானும் ஒரு முக்கியஸ்தனானவன்; பிறப்பை அறுத்தவன் என்பதாம். ஆகவே ஆதி கிறிஸ்துமத ஸம்பிரதாயப்படிக்கும், நம்முடைய ஸநாதந தர்மமான ஹிந்துமத ஸம்பிரதாயப்படிக்கும், பௌத்தமத ஸம்பிரதாயப்படிக்கும், மோக்ஷம் என்பது ஒரே பொருளுடையதுதான். யாதொரு வித்தியாசமுமில்லை. ஹிந்து, பௌத்த, கிறிஸ்து மதங்கள் மூன்றிலும் "ஜீவன், விகாச (Evolution) அபிவிருத்தி முறையில், பலபடிகளில் ஏறுகிறான். கடைமுறையில் பூர்ணம் பெறுகிறான்; "நான்" என்ற பிரஞ்ஞாபூமியைத் தாண்டுகிறான்; தன்னை அறிகிறான்; மெய்யுணர்வு பெறுகிறான்; பிரஞ்ஞையுடன் ஈசுவரனில் ஒன்றுபடுகிறான்; மருள் நீக்கம் பெறுகிறான்; தெள்ளிய ஞானம் அடைகிறான்; இவ்வித ஸித்தாந்தம் நிகழ்ந்தது.

2. இக்காலத்திலோவென்றால், ஹிந்துமதத்திலும், கிறிஸ்துமதத்திலும் மேற்கண்ட உயர்நலம் அமைந்தமொழி பெரும்பாலும் இரஸம் அற்றுப்போயிற்று; வெறுமையான வார்த்தையாக மாத்திரம் இப்போது நிகழ்கின்றது. இப்போது, கிறிஸ்துவர்கள் மோக்ஷம் என்றால் நரக அநுபவத்தைத் தப்பி சுவர்க்கலோகம் புகுதல் என்பதாக அர்த்தம் கொள்ளுகின்றார்கள். சாதாரணமாய் ஹிந்துக்களும் மோக்ஷம் என்பது, தன்னைத் தான் அறிதல், மெய்யுணர்வு பெறுதல் என்ற உயர்ந்த லக்ஷியத்தைக் கைவிட்டு இடமாற்றம் பெறுதல் அதாவது பூலோக துக்க நிவிர்த்தி என்பதாக மதிக்கிறார்கள்.

3. ஒரு பெரியார் அடியில் வருமாறு 'மோக்ஷம்' என்பதற்குப் பொருள் கொள்ளுகிறார். "மோக்ஷம் என்றால் இடம்பெயர்தல் அன்று, நிலைமைகளின் (Conditions) மாறுதல் அன்று, அவன் அவன் மநோநிலையின் மாறுதலாம்". உண்மை இவ்விதமாகச் சுருக்கமாக விருக்கிறது. மோக்ஷம் என்றால் நம்முள்ளம் மாறுதல் அடைதலாம். வெளி விஷயங்களின் மாறுதலன்றாம். மோக்ஷம் என்றால் வெளி விலங்கை வெட்டுதலன்று. உள்ளத்தில் நம் சுதந்தரத்தை அறியும் மெய்ஞ்ஞாந ஜோதி அமையுறும் நிலைமையாம். இருட்டான சிறையில் அடைக்கப்பெற்றவன் ஆத்மாவை யறிந்தால், அதாவது, மெய்யுணர்வு பெற்றால் உண்மையில் கைதியல்லன். வீடு (மோக்ஷம்) பெற்றவனாவன். ஏக சக்கிராதிபதியாயினும், தன்னை (ஆத்மாவை) யறியாமல் அநாத்மாவசமாகி மருளில் உழலுவானாகில், உண்மையான கைதியாவன். இதனாலன்றோ ஸ்ரீ கிருஷ்ணபகவான், கீதையில் 'ஒருவன் உலகவாழ்வு எவ்விதமாக நிகழினும், என்மேல் இடையறாத பூர்ணபக்தி யுள்ளவனாயிருப்பானாகில் அவன் என்னிடமே வஸிக்கிறான்" என்று உபதேசித்துள்ளார். அவன் உயர்ந்த அரசனாயிருப்பினும், சிறு குடியானவனாயிருப்பினும், வலியனாயினும், வறுமையனாயினும், வைதிகனாயினும், லௌகிகனாயினும், புரோஹிதனாயினும், வியாபாரியாயினும், இவ்வந்தஸ்துக்கள் எல்லாம் நிலைவரமானவையல்ல, மாறுதல் உடையனவாம் எவன் தன்னிடம் அதாவது ஆத்மாவின்கண் ஜீவிக்கின்றானோ, ஆத்மாவை அறிகிறானோ, அவனே ஸ்வதந்தரமுடையவன்; தன்னிஷ்டமுடையவனாவன். எவன் தன்னை (ஆத்மாவை) அறிகிறானில்லையோ, அவன் பந்தத்திற்குட்பட்டவனே. ஸ்வதந்தரமுடையவன் நித்தியமான வஸ்துவில் ஸ்திரமான பிரஞ்ஞை உள்ளவனாவன். பந்தப்பட்டவனோ காலகதிக் குட்பட்டவனாகி உடைந்த மரக்கலம்போல், சிந்நாபிந்நப்பட்டு ஸம்ஸாரம் என்ற ஸமுத்திரத்தில் தத்தளிக்கிறான்.

4. மோக்ஷம் என்பது, ஆத்மாவை (தன்னை) அறியும் நிலைமை. தன்னை நித்தியன் என்று அறிதல், மெய்யுணர்வு பெறுதலாம். தான் சத்தியம் என்றும், உலகத்தில் சரீரம் பெற்றதினால் ஏற்படும் அத்தோற்றம் அல்லன் என்றும், அறிதல் தான் உண்மையான உணர்வு. மனிதனோ நீடித்தகாலமாய் உலக சம்பந்தமான சரீரத் தோற்றங்களுடன் ஒன்றுபட்டு, அத்தோற்றங்களை 'தான்' என்று மதிமயங்கி ஒழுகுகின்றான். தேஹோஹம் என்ற பாவனை உள்ளவனாக இருக்கிறான். பிரகிருதி என்ற மாயா சமுத்திரத்தின் ஜலத்தில் தன் பிரதிபிம்பத்தைப் பார்த்து மயக்கம்

கொண்டு "அதோ நான்" என்ற விபரீத பாவனை கொண்டு நடைபெற்றிருக்கின்றான் விஷய சுகங்களை நுகர்ந்தான்; ருசி கண்டான்; அதனால் உலக வஸ்துக்களின்மேல் ஆசைகொண்டான்; அவைகள் மூலமாக விஷயாநந்தம் பெற்றான்; அவ்விஷயாநந்தத்தில் பற்றை வைத்தான்; பேராசை அவனை அடிமை கொண்டது; கோபம் அவனை வசப்படுத்திற்று; செல்வம் அவனுக்கு விலங்கிட்டது; உருவங்களின் வனப்பு அவனை அதன் மயக்கத்திற்குள்ளாக்கிற்று; நாநாவிதமான ரூபங்களை நோக்கி அவைகளிடம் ஆசைமேலிட்டு, அவைகளைப்பற்றிப் பிடிக்க முயன்றான்; ஆனால் அவை இவன் பிடிப்பிற்குள் அகப்படவில்லை; அவை வெறுமையான தோற்றங்களாயின; நிழலைக் கட்டியணைத்தல் போலாயிற்று; மருளான இருளில் அலைந்தான்; தங்குமிடம் காணாமல் தயங்கினான்; கடைமுறையில் தன்னுள்ளத்தில் ஞான ஒளி உதயமாயிற்று; நிழல்போன்ற தோற்றங்கள் போயின; ஸ்வதந்தரனானான்; தன்னிஷ்டம் பெற்றான்.

5. அதனால், மோக்ஷம் என்றால் ஒரு குறித்தலோகத்தில் வஸித்தலன்று; அது எவ்வளவு நுண்ணிய திரவியங்களால் அமையப் பெற்றிருப்பினும், அதின்கண் ஜீவித்தலன்று; எவ்வளவு தீர்க்க காலமானாலும், அது கால வரம்புக்குட்பட்டு வஸித்தலன்று; எவ்வளவு ஆநந்தம் பயக்கும் தன்மையதாயினும் அது வெளிநோக்கி நடைபெறும் பிரஞ்ஞா நிலையுமன்று; ஆனால் மோக்ஷமென்பது பிரபஞ்சத்தின் நாநாவிதமான நாமரூபங்களை விட்டு விலகி, அந்தர்முகப்பட்டு ஆத்மாவை ஸாக்ஷாத்கரித்தலாம்; மெய்யுணர்வு பெறுதலாம். "ஈசுவர ராஜ்ஜியம் அதாவது உண்மையான ஸ்வாராஜ்ஜியம் உன்னிடமுள்ளது" என்றார் கிறிஸ்து என்பாரும்.

6. ஆத்மாவை அறியும் முறையில் முதல்படி உபநிஷத்துக்கள் உபதேசிக்கிற பிரகாரம் "தீயவழிகளினின்று விலகுதல்"

நாவிரதோ து³ஶ்சரிதாந்நாஶாந்தோ நாஸமாஹித꞉
நாஶாந்தமாநஸோ வாபி ப்ரஜ்ஞாநேநைநமாப்நுயாத்
—கடஉபநிஷத்.

இதன் பொருள்:—பாப கர்மங்களினின்று ஒழிவடையாதவனும், இந்திரியங்களை அடக்காதவனும், சிதறும் சித்தத்தை ஒருமைப்படுத்தாதவனும், மனச்சாந்தமில்லாதவனும், வெறுமையான விஞ்ஞானப்பயிற்சியால் மட்டும் இந்த ஆத்மாவை அடையமாட்டான்.



'தீமை செய்யாமலிருப்பேன்' எனத் தீவிரமாய்த் தீர்மானம் கொள்ளுதலும் அத்தீர்மானத்தைத் தவறாது அநுஷ்டித்தலும் முக்கியமானது. இஃது இன்றேல் இந்த ஆத்மஞானமுறையில் ஒருவன் அடிவைக்க இயலாது. பாபவழியில் நடைபெற்று பாபச்சேறு பூசின பாதங்கள் இம்மார்க்கத்தில் அடிவைக்கமுடியாது. இந்த மார்க்கத்தின் லக்ஷியமான பரம் என்று சொல்லப்படும் உயர்நிலை பெறுதலுக்கு ஒரேவழி. இந்த ஞானமுறையான ஏணியின் அடிப்படியை அழுக்குள்ள பாதங்களால் மிதிக்காதே. அதில் கவனமாயிரு, அதின் எந்தப்படியையும் அழுக்குள்ள பாதங்களால் மிதிக்கிறவன் கதி அந்தோ! என்ன சொல்லுவேன்! கொடிய துன்பத்திற்குள்ளாவான். இம்மார்க்கத்தை நாடுகிறவன் அநேகம் தடவை தடுமாறுவான்! அநேகம் தடவை பிசகுவான்! அநேகம் தடவை கீழே விழுவான்! ஆயினும் அவன் தைரியமாய் மனம் தளராமல், களங்கமற்ற சுத்தசித்தமுடையவனாக இருத்தல் வேண்டும். * காந்த ஊசியானது எவ்விதமாக அசைப்பிக்கப்பெற்றாலும் எப்போதும் வடக்கையே நோக்கிக் குறித்துநிற்றல்போல, இம்மார்க்கத்தில் நடைபெற விரும்புவோன் ஒரே மனத்தினனாய் † நன்மையையே தன் லக்ஷியமான, கடைப்பிடியாகப் பற்றவேண்டும். ஒருவன் சித்தம் தூய்மையாகவும், நேர்மையாகவும் இருப்பின், அவன் தீயகர்மம் செய்தாலும் சத்திய நெறியில் நிற்பவனாக மதிக்கப்படுவான். "எவ்விதம் தீவிரமாய் நினைப்பானோ உறுதியாக அவ்விதம் ஆவான்" என்பது திண்ணம். "தீயவழிகள்" என்பவை ஸ்தூல சரீரத்தைப்பற்றியவை மாத்திரமல்ல; தீய கர்மங்களும் தீய எண்ணங்களும் இதனுள்வரும். எண்ணங்களைத் தீமைபற்றினின்று விலக்குக. மனமறிந்து தீய விஷயத்தில் ஒரு நிமிஷம் கூட சிந்தனை கொள்ளற்க. நல்ல வாஸனையுள்ள ரோஜாப் புஷ்பங்களிருக்க, அந்தோ! எத்தனை வண்டுகள் துர்நாற்றமுள்ள உச்சிஷ்டங்களை நாடிச்செல்லுகின்றனவே! சுத்தமான விஷயத்தில்

* மௌனவாக்கு, 23-ம் பக்கம், 43-ம் பத்தியைப் பார்க்க.

† ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணுமே
சென்றேபுகும் கதியில்லை, நுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற, நீர்நினைந்து உய்மினே—திருமந்திரம்.

மநம் நிற்குமானால், தீய விஷயங்களின் உற்பத்தி ஸ்தாநம் தானே அடைக்கப்பெறும். தீய எண்ணங்களை உண்டுபண்ணாமலும், தூண்டாமலும், அவைகளை ஆதரவு செய்யாமலும் இருப்பின், அவ்விதமே தீய கர்மங்கள் தாமே அடங்கும்; மநம் சுத்தம் பெறும். அதாவது, மநோமயகோசம் தூய்மையாயின், கர்மங்களும் தூய்மையாகும். இவ்வண்ணம் முமுக்ஷுவானவன் (மோக்ஷத்தை நாடுபவன்) தீவிரமாய்த் தன்னைச் சுத்தம்செய்யற்பாலன்; § "தீவினையகற்று," "நன்மைகடைப்பிடி" என்பவை முதுமொழி.

7. இப்படி முயன்று "நன்றே செய்யப்" பழகவேண்டும். ஆத்ம ஸாக்ஷாத்காரம்பெற விரும்புவோன் தீயவை ஒழித்தல் மாத்திரம் போதாது. எவ்விதம் தீயசெயல் வேற்றுமை பாவத்தை ஸ்திரப்படுத்தவும், விருத்திப்படுத்தவும் இயலுமோ, அவ்விதமே, நன்மைசெய்தல் ஒருமை உணர்வை (ஏகீபாவத்தை) ஸ்திரப்படுத்தவும், விருத்திசெய்யவும் கூடும். தீய செயலுக்கு மூலம் பகைமை. பகைமை வேற்றுமைப்படுத்தும் தன்மையது, பிரிக்கும் இயல்புடையது. நற்செயலுக்கு மூலம் அன்பு. அன்பு சேர்க்கும் இயல்புடையது; ஒருமைப்படுத்தும் தன்மையது. எவ்வளவுக்கெவ்வளவு முமுக்ஷுவானவன் பிறர்க்குநன்மை செய்கிறானோ, பிறர்நலத்தைக் கருதுகிறானோ, பிறர் சுகதுக்கங்களைச் சிந்திக்கின்றானோ, அதனால் தன் சக்திகளைப்பிறர்நிமித்தம் உபயோகிக்கின்றானோ, அவ்வளவுக்கவ்வளவு விவேகம் அவனிடம் உதயமாகிப்பிரகாசிக்கும். (1) விவேகம் என்பது இந்த ஞாந மார்க்கத்துக்கு முதன்மையான ஸாதநம். முமுக்ஷுவானவன் அவனது விவேகத்தினால் தன்னைச் சுற்றுமுள்ளவைகளை யாராய்வான். நித்தியம் இது, அநித்திய மிதுவென, உணர்வான். ஸத் இது, அஸத் இது எனத் தெளிவான். இவன் ஞாநம் தெளிவுபெறவே, அநித்திய வஸ்துவை வெறுப்பான், அஸத்தானதை விரும்பான். தனக்கு முன் ருசியாகவிருந்த உணவு இப்போது வாயிற் கசக்கும். தான் முன் மிகப்பிரியத்துடன் பற்றின விஷயங்கள் இப்போது தன் கைவிட்டு நழுவிவிடும். தான்

§ தன்னைத்தான் காதலனாயின் எனைத்தொன்றும் துன்னற்க தீவினைப்பால்—குறள்.



மிக்க காமத்துடன் முன் தழுவிய ரூபங்கள் நிழல்போல் பொய்யாகிப்போம்; சூந்யமாகிவிடும். இவ்விதமாக அவன் மநத்தின்கண் உபேக்ஷை ஜநிக்கும். பின்பு அதுவே சாந்தமான இனிமையான வைராக்கியமாக அமையும். (2) இதுவே இரண்டாவதான தகைமை. பின்பு வைராக்கியம் பலப்பட, மநத்தைச் சுவாதீநம் செய்கிறான். அது போனவழியில் விடாமல், அதை நேர்மையாக நடத்துகிறான். (3) இதுவே சமம் என்று சொல்லப்படுகிறது. மநம் வசப்படவும், ஆசையையும் செயலையும் நேர்மைப்படுத்தவும், இந்திரிய நிக்கிரஹம் ஏற்படும். (4) இதுவே தமம் எனப்படும். இவ்விதம் நடைபெறவே மநச்சாந்தம் உண்டாகும், அப்போது மெல்லிய மௌந மொழியான (Voice of the Silence) நாதம் கேட்கும். ஆத்மாவின் மஹிமையின் ஓர் அம்சத்தின் க்ஷணிகக் காக்ஷி தோன்றும்.* அவ்வநுபவத்தால் "நான் பந்தமுடையவன்" என்ற உணர்வு நீங்கும். "நான் என்றும் முக்தன்" என்ற உணர்வு உண்டாகும். அதுவே ஆநந்த வுணர்வு. பொய்மை நீங்கித் தீரத்தன்மை எழும். ஒரு க்ஷணமாவது அடியில்வரும் கௌதமபுத்தரின் உபதேசத்தின் உண்மையை அறிவான். "நீவிர் பந்தமுடையவர்களல்லர். விஷயங்களின் கண்ணுள்ள ஆத்மா சுகிர்தமே ஜீவர்களுக்குள் உள்ள ஹிருதயநிலை உபசாந்தமே."

8. பின்பு, முன்போல் இருளான மேகம் மறுபடியும் தன் மநத்தை மூடும். தோன்றின காட்சியும் மறையும். ஸம்ஸாரமான இருள் மூடும். ஆயினும் ஒருகாலத்தில் தன் னுள்ளொளிக் காட்சியைக் கண்டானன்றோ? அது வீண்போகாது. இக்காட்சி கண்டகாலம் முதல், இவனுடைய ஞாந ஒழுக்கமுறை இலகுவாய் நடைபெறும். அவ்வநுபவத்தின் சிந்தனையால் உலக விஷயங்களை விரஸமாய் மதிக்கின்றான்; துச்சமாக நினைக்கின்றான். வைராக்கியம் பலப்படுகிறது; ஸ்திரமாய் அமைகிறது. இது போலி வைராக்கியமன்று, ஒரு சமயம் இருத்தலும், மற்றொரு சமயத்தில் மறைதலுமாக இருப்பதன்று. இப்போது முமுக்ஷுவானவன் பொறு

* கேநோபநிஷத்தில் அந்த போதநிலை மின்னலைப் போன்றது, என உபதேசிக்கப்பட்டிருக்கிறது.

மை என்ற சம்பத்தைத் தன் சீலத்தில் அமையப்பெறுகிறுன். இதுவே (5) உபரதி என்னப்படும். இக்குணத்தால் சகிப்பு கொண்டவனுய்ப் பிறருக்கு உதவி புரிகிறுன். பின்பு (6) திதீக்ஷை என்ற சம்பத்து அவனிடம் அமைகின்றது. அபரிமிதமான சகிப்புள்ளவனுகிறுன். தான் ஈசுவர அம்சமுள்ளவனுகவிருக்கிறுன் என்ற நன்னம்பிக்கை உண்டாகியிருக்கிறமையால், (7) சிரத்தை என்ற சம்பத்தும், இந்நம்பிக்கை உறுதிபெறவே, (8) மநச் சமாதாநம் என்ற உயர்நலமுள்ள சம்பத்தும் அவனுக்கு ஏற்படுகின்றன. இனி அவன் நினைப்பெல்லாம், ஈசுவரனுடன் இரண்டறக்கலத்தல் என்பதேயாம். இப்போதுதான் முமுக்ஷுவாகிறுன். சிரேயஸ் மார்க்கத்தின் உயர் நலம் அமைந்த வாசற்படியில் நிற்கின்றுன். அவ்வாசலுக்கு அப்பால் இன்னும் நாலு படிகளிருக்கின்றன. மோக்ஷம் பெறுமுன், முமுக்ஷுவானவன் இப்படிகளிலேறி ஏறி இவைகளைத் தாண்டவேண்டும்; மனிதனைப் பந்தப்படுத்திக் கடைமுறையில் தங்கிநிற்கின்ற தச (10) க்கட்டுகளான ஹிருதயக்கிரந்திகளை வெட்டி எறிகிறுன்.*

அவையாவன:—(1) தான் என்ற அபிமாநம் (2) சந்தேகம் (3) வீண்பக்தி (4) ஆசை (5) வெறுப்பு (6) ஸ்தூலசரீரம் எடுத்தலின் அவா (7) ஸூக்ஷ்மசரீரம் அமூர்த்தமானசரீரம் எடுத்தலின் அவா (8) கர்வம் (9) மநச்சஞ்சலம் (10) அவித்தை. அவித்தை நீங்கவே, கண்களை மூடிக்கொண்டிருந்த மூட்டம் அவிழ்ந்து விழுந்தாற்போல, பிரமை நீங்கும், மநக்கண் பிரகாசம் பெறும் "நான் ஸ்வதந்தரன்", என அறிகிறுன். எப்போதும் ஸ்வதந்தரனுக இருந்திருக்கிறதாக உணருகிறுன். மோகத்தால், தான் மதிமயங்கி இருந்ததாகத் தெரிந்துகொள்ளுகிறுன். ஒரு மாயாவியானவன் "அசையாமல் நிற்கப்பாலன்" என்று ஒருவனை மயக்கம் பெறும்படி செய்தால் அம்மயக்கச் சொல்லால் கட்டுண்டு தன்னறிவு இழந்து இருப்பவன் போல, (Under the influence of hypnotism) நாம் ஜீவனுக வெளிவந்தகாலமுதற்கொண்டு அநாதியான நம்முடைய ஜீவயாத்திரையில் (Our human pilgrimage) நாம் பந்தமுடையவர் என்ற பிரமை சிந்தனையால் மதிமயக்கம் கொண்டு உழலுகின்றோம். ஆத்மாவான திருஷ்டாவினிடம் ஒருவித மாற்றமுமில்லை. அந்த மயக்கமான மருள் நீங்கவேண்டும். அது நீங்கினுல், நாம் பந்தமுடையராக (பத்தராக) இருந்தவரே முக்தராக ஆகிறேம் எனவும், ஸ்வதந்தர முள்ளவரெனவும் அறிகிறேம். மோக்ஷம் என்ற நிலைமையைப்பெறுதலுக்கு, அவித்தை நீக்கம் ஒன்றுதான் பெறவேண்டியது; வேறு ஒன்றும் வேண்டற்பாலதன்று*. உடனே ஒளியைக் காண்கிறேம்; என்றும் ஸ்வதந்தரனுன ஆத்மாவின் பெருமையை உணருகிறேம். எப்போதும் நாம் ஸ்வதந்தரர்கள், முக்தர்கள், அந்நியர் அந்த நிலைமையை நமக்கு அளிக்கவில்லை. அந்நியர் அந்நிலையை நாமே பெறுதலுக்குத் தடைசெய்யவும் இயலார். ஆனுல் நீடித்த அநுபவத்தாலும், முயற்சியாலும் நாம் பந்தமுடையவரல்லர், கட்டுண்டவர் அல்லர் என்ற உணர்வைப் பெறுகிறேம். கட்டுண்டோம் என்ற மருள் நீங்கும். சுத்திசெய்தல் எல்லாம் ஒளியை மறைக்கின்ற கண்ணுடியைப் பற்றியதேயாம். சுத்தியால் முன்னில்லாத விளக்கு ஏற்றப்படுவதில்லை. என்றும் இருக்கின்ற பிரகாசமே வெளித் தோன்றிடச் செய்தலேயாம். ஆகவே, உண்மையில், முயற்சி மோக்ஷத்திற்கு நேரான காரணமன்று. பந்தப்பட்டவனுக இருக்கின்றேம் என்ற மயக்கத்தை நீக்குதல் தான் அதன் காரியம். எப்பொழுதும், எவ்விடத்திலும், எந்நிலையிலும், ஆத்மா தன்னைத் தானே அறியலாம், தன் ஸ்வதந்தரத்தை நிலைநிறுத்தலாம். உண்

* பி⁴த்³யதே ஹ்ருத³யக்³ரந்தி²ஶ்சி²த்³யந்தே ஸர்வஸம்ஶயா:।
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந்த்³ருஷ்டே பராவரே॥
—முண்டக உபநிஷத்.

இதன் பொருள்:—பரமாயும் அபரமாயுமுள்ள அந்த பரமாத்மாவின் தர்சநத்தால், ஹிருதயபந்தங்கள் பேதித்து விட்டுப்போகின்றன. ஸர்வ சந்தேகங்களும் நாசமாகின்றன. இந்த ஞாநியின் ஸஞ்சித ஆகாமிய கர்மங்கள் நசிக்கின்றன.

* இருள்நீங்கி இன்பம்பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு—குறள்.

மையில், படிகள் வேண்டுவதில்லை; நிலைமைகள் வேண்டுவதில்லை, காலம் வேண்டுவதில்லை. ஆத்மா நித்தியன், என்றும் ஸ்வதந்தரன்.*

9. மோக்ஷம் என்ற பதமும், அதன் பல பரியாய பதங்களும் தற்காலம் நிகழ்கின்ற சமய முறைகளில், நிலைமைகள் மாற்றத்தையும், ஸ்தாந பேதத்தையும், அவஸ்தா பேதத்தையும் குறிக்கும் சொற்களாகக் கொள்ளப்படுகின்றன. கிறீஸ்துவன் விண்ணுலகம் தனக்குக் கிடைக்கும் என்ற நம்பிக்கை கொள்ளுகிறான். அதனால் அவன் மோக்ஷம் பெறுகிறதாக எண்ணுகிறான். ஹிந்துவானவன் உலக ஆசைகளை அறுத்தால், மோக்ஷம் பெறலாமென்று மதிக்கிறான். மேற்கண்ட இருவரும் அவர் அவர் நினைக்கிறபடி ஒருவித ஆநந்தமுள்ள ஸ்தாநத்தைப் பெறலாம். அந்த ஸ்தாநத்தில் நீண்ட காலம் ஆநந்தாநுபவம் அடையலாம். ஆனால், அது மோக்ஷமன்று; வீடு பெறலன்று. பூலோக, புவர்லோக, ஸ்வர்க்கலோக சுகங்களை ஒருவன் விரும்பாமல் இருக்கலாம். அவைகளை வெறுக்கலாம். ஸ்வர்க்கலோக இன்பங்களைத் தள்ளிவிடலாம். ஸ்தூலசரீரத்தை நீத்த மாதிரியாக சூக்ஷ்ம சரீரங்களான காம மாநவிக சரீரத்தையும் நீக்கிவிடலாம். அவைகள் சம்பந்தமான லோகங்களையும் தாண்டலாம். அவைகளின் ஆசைகளையும் துறக்கலாம். இந்நிலையில் அவன் மநத்தைக் கவரும்படியான யாதொரு விஷயங்கள் இல்லைதான்; ஜீவாத்மா என்ற பக்ஷி வேடன் வைத்திருந்த வலையினின்று ஓடிப்போய்விட்டதுதான்; இனி இந்த மூன்று லோகங்களிலும் அது திரும்பக் கூடுகட்டப்போவதில்லைதான்; இம்மாத்திரம் தான், இதுவரையில்தான், இவன் ஸ்வதந்தரம் நிகழ்வதாகும். பிரஹ்மஞானப் புத்தகங்களில் பிரஸ்தாபிக்கப் பெறும் அரூப மாநவிகலோகத்தில் அதாவது மஹர், ஜநோ லோகங்களில் தியாநபரனாய் அநேக கல்பகாலம் தங்கலாம். பின்பு, வெகு கல்பங்களிற்குப் பிறகு, மஹர் ஜநோ லோகங்களுங்கூட ஒரு காலத்தில் போய்விடும், அழியும். அவைகளின்கண்ணுள்ள வாஸிகள் ஒரு நீண்ட தூக்கம் கொள்ளுவார்கள். தம் மநோகல்பித ஈசுவரத்தியாநபரனாகவும் அந்தத் தியாநத்தில் மூழ்கினவனாகவும் இருக்கலாம். பின்பு அந்தத் தபோ லோகமும் சங்கோசம் பெறும், அழியும். இந்நிலைகளில் எல்லாம் ஒருவன் ஆத்மாவை ஸாக்ஷாத்கரிக்காமல் போவானாகில், தன்னைத் தானறியானாகில், மெய்யுணர்வு பெறானாகில், இனி யாதேனும் ஒருவித சூக்ஷ்மத் தன்மையான பிரகிருதி சம்பந்தமான லோகத்தில், சரீரம் எடுப்பான். இது நிச்சயமானது. அந்தந்தப் பிரஞ்ஞாநிலைக்குரிய ஒவ்வொரு மனிதன் பிரஞ்ஞை ஒரு பிரகிருதி சம்பந்தமான உபாதியைப்பற்றி யாதேனுமொரு தொழிலைச் செய்யும். அப்பிரகிருதித் தன்மையின் கட்டுவிட்டுப் பிரளய நிலையைப் பெற்றால், அவ்வுபாதியும் அழியும். அப்போது அப் பிரஞ்ஞாசம்பந்தமான ஜீவன் அதைவிட சூக்ஷ்மமான உபாதியைப் பற்றிக்கொண்டு யாதொரு தொழிலின்றி உறங்கும்; ஒருவித ஸுஷுப்தி அவஸ்தையைப் பெறும். பின்பு வேறு ஒரு பிராகிருதலோகம் தோன்ற, அதில் அந்தப் பிரஞ்ஞைக்கு ஏற்ப ஒரு உபாதி ஏற்படுமாகில், பின்பு அவ்வுபாதியைப் பற்றிக்கொண்டு அஜ்ஜீவன் தொழிற்படும், வேறு ஒரு சரீரம் எடுப்பான். தன்னை ஆத்மாவென்று அறிந்தால்தான், மெய்யுணர்வு பெற்றவனாவன். அதுவரை, திரும்பத் திரும்பச் சரீரமெடுக்கப்பாலனே.

10. இதை வாசிக்கின்ற சிலர் நினைக்கலாம் "மோக்ஷம் என்பது வெகு தூரத்திலுள்ளது; அதைப்பற்றி நாம் இப்போது சிந்தனை கொள்ளவேண்டுவதேன். தினந்தோறும் நடைபெறும் உலக விஷயங்களுக்கும் மோக்ஷத்திற்கும் சம்பந்தமில்லை. மோக்ஷத்தைப் பற்றிய அவ்வுயர்நலமமைந்த எண்ணங்கள் இப்போது உலகயாத்திரையில் உப்புக்காகுமா புளிக்காகுமா? வீணே!" என மதிக்கலாம். இது சரியன்று. ஏனென்றால் உண்மையில் நாம் ஒவ்வொருவரும் ஈசுவராம்சம் உள்ளவர்கள், நாம் ஆத்மா; ஆத்மா நம்மொவ்வொருவரிடமும் இருக்கிறான். எப்போது தீமையை விட்டுத் திரும்புகின்றோமோ, அப்போது ஆத்மாவை அறியும் முறையில் ஒரு படி ஏறுகிறோம்; ஆத்மசூரியனை மூடியிருக்கும் கண்ணாடியைச் சுத்தம் பண்ணுகிறோம். சுயநலம் தவிர்த்துப்பிறர்க்குப் பிரியத்துடன் ஒரு கைங்கரியம் செய்வோமாகில், "ஒரே ஆத்மா உள்ளது" என்ற ஒருமையுணர்வைப் பெறத்தொடங்குகின்றோம். சுயநலத்தைத் துறத்தலினால் ஜநிக்

* அறிவாய் அறியாமை நீங்கி அவனே
பொறிவாய் ஒழிந்து எங்கும்தானான போதன்
அறிவாய் அவற்றினுள் தானாய் அறிவன்
செறிவாகி நின்றஅச் சிவனுமாகுமே—திருமந்திரம்.

கும் ஆநந்தம், ஆத்மாரூபமான ஆநந்தத்தின் ஓர் திவலையாம். கீழான சுகத்தைத் துறந்து மேலான சுகத்தை நாடும்போதெல்லாம் அல்லது, சோம்பலுக்கு அநுகூலமான எளிதான மார்க்கம் இருக்க அதைத் துறந்து, அறமுறையான உத்தரவாதத்தைக் கொண்டுசெலுத்தக் கஷ்டப்படும் போதெல்லாம், ஸத்சங்கற்பம் கொள்ளுகிறோம். சங்கற்பித்த காரியத்திற்கு பங்கம் நேரிட, அதனால் வருத்தமுறாமல் மநம் களிப்புறுமாகில் வைராக்கியம் நம்மிடமமைந்திருக்கிறது என்று அறிவோம். செய்கின்ற காரியத்தில் மநம் சிதறாமல் ஒரே திருஷ்டியாக மநம் நிலைத்து நின்றால் மநத்தைச் சுவாதீநப்படுத்தும் முறையில் பயிலுகின்றோம் என்று நினைப்போம். கோபத்தால் எழும் தீய சொல்லைத் தடுப்போமாகில் கர்மத்தை ஆளும் தன்மையை (Control of action)ப் பெறுகிறோம். பிறரிடம் குற்றம் கண்டுபிடித்தலைத் தவிர்த்தால் நம் பொறுமை(உபரதி)நலம்பெறும். உலக வாழ்க்கையின் இன்றியமையாத கஷ்டநிஷ்டூரங்களைச் சந்தோஷத்துடன் பொறுத்துவரச் சகிப்பு என்ற உயர்ந்தசீலம் (திதீக்ஷை) நமக்கு உண்டாகும். நித்தியதபஸும், தியாநமும், மநச்சாந்தத்தையும், அதனால் மநச்சக்தியையும் வர வர உண்டுபண்ணும்.* அதனால் "நம் உள்ளத்தின் கண் இறைவன் உளன்" என்ற அறிவு உண்டாகும். அதனால் உயர் நலம் அமைந்த மநச்சாந்தகுணத்தை அநுஷ்டாநத்தில் கொண்டுவரப் பல சந்தர்ப்பங்கள் திநந்தோறும் நேரிடும். இச்சந்தர்ப்பங்கள் நம்மைச்சுற்றி நிகழ்வனவாகும். நாம் அவைகளைக் கவநிக்கிறோமில்லை. அவைகளை நழுவவிடுகிறோம். நாம் நடத்தும் ஒவ்வொரு தொழிலிலும், நாம் செய்யும் ஒவ்வொரு உத்தியோக முறையிலும் சுயநலம்துறந்து, பிறர் நலம் பயக்கும் கர்மம் செய்யப் பல சமயங்கள் நேரிடுகின்றன. அவைகள் நம்மை ஈசனை நோக்கிய மார்க்கத்தில் சேர்ப்பிக்கும். ஒரு அறிஞர் அடியில் வருமாறு சொல்லியிருக்கின்றார்.

"உத்தியோகம் செய்யும் சாலையிலும், நியாயஸ்தலத்திலும், கடைத்தெருவிலும், துறைமுகத்திலும், வியாதிஸ்தன் படுக்கையின்

* முத்திக்கு வித்துமுதல்வன் தன்ஞானமே
பத்திக்கு வித்துப் பணிந்துற்றுப் பற்றலே
சித்திக்கு வித்துச் சிவபரம் தானுதல்,
சக்திக்கு வித்துத் தனது சாந்தமே—திருமந்திரம்.



அருகாண்மையிலும், குழந்தைஇருக்கும்தொட்டிலிலும், கிழவர்படுக்கும் கட்டிலிலும், ஆத்ம சாக்ஷாத்காரத்தை அடையலாம்". தன்னைத்தான் அறியலாம். மெய்யுணர்வு பெறலாம். மோக்ஷத்தைப் பெறலாம். இஸ்லாம் மதத்தினரான ஒரு பெரியார் சொல்லியபடி நன்மை செய்தலுக்குப் பெரிய காரியத்தின் வரவை எதிர் பார்க்கவேண்டாம். ஆ! நண்பனே! பெரிய கைங்கரியமாவது நம் சமீபத்தில் உள்ளதுதான். சாதாரணமாய் உலகவாழ்வில் நற்காரியங்கள் செய்தலுக்கு எத்தனையோ அருமையான சமயங்கள் நேரிடுகின்றனவே! சூரியஅஸ்தமநமாகும்சமயத்தில் தோன்றும் கம்பீரமான கண்காட்சியைவிட உலகத்தில் மேலான வைபவம் உண்டோ? ஆயினும் திநந்தோறும் அது நேரிடுவதால் அதிக சாதாரணமாயிற்று; அதனால் அதை கவநிக்கிறோமில்லை. அதை அலக்ஷியம்பண்ணுகிறோம். அதுபோலவே ஆத்மாவும் அதன் நோக்கான மார்க்கங்களும் என்று அறி. "நீயே அம்மார்க்கம்" என்றார் மற்றொரு பெரியார். "உள்ளே நோக்குக, நீ புத்தனாக இருக்கிறாய்" என்றார்.* மற்றொருவர் "அந்த வாக்கு உன் சமீபத்திலிருக்கிறது உன் வாயில் உள்ளது உன்னுள்ளத்தில் உள்ளது" என்றார் வேறொரு ஞாநியார் "என் சகோதரனே! (உன் மநக்) கண்ணைத்திறந்து விழி, நீ பார்ப்பாய்" †

ப. நா.

*பராஞ்சி கா நிவ்யத்ருணத் ஸ்வயம்பூஸ் தஸ்மாத் பராங் பஶ்யதி நாந்தராத்மந்।
கஶ்சித்தீர: ப்ரத்யகாத்மாநமைக்ஷதாவ்ருத்தசக்ஷுரம்ருதத்வமிச்சந்
—கடஉபநிஷத்.

இதன் பொருள்:—பரமேசுவரர் வெளியில் பிரவிர்த்திக்கிற இந்திரியங்களை வெளிநோக்காய்ச் சிருஷ்டித்தார்; அதனால் ஜீவன் வெளிநோக்கியே பார்க்கிறான், அந்தராத்மாவைப் பார்க்கிறானில்லை. அறிஞன் யாதாமொருவன் மரணமற்ற நிலையை விரும்பினவனாய், வெளி விஷயங்களைப் பார்க்காமல் அந்தராத்மாவைப் பார்க்கிறான்.

† முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்—திருமந்திரம்.

## மநுஷ்ய யத்நமும் ஈசுவர கிருபையும். *

——(o)——

இவ்வரியதொடர் இப்பரதகண்டத்திலுள்ள மஹாராஜர் ஒரு வருடைய குலவிருதாகும். அம்மஹாராஜா இக்குலவிருதான தொடருக்குமேல் இதனுண்மைப்பொருளை யாரும் எளிதிற் கண்டுகொள்ளும்படி, ஒரு பெருங்கடலில் ஒரு பாய்மரக்கலம் ஓடுவதாகச் சித்திரித்துத் தம்முடைய சாஸநங்களில் வழங்குகின்றார். இதனால் உலகை ஒரு கடலாகவும், மநுஷ்ய யத்நத்தை ஒரு பாய்மரக்கலமாகவும், அம்மநுஷ்ய யத்நம் பயனெய்துவதை அம்மரக்கலம் கரையடைவதாகவும், மரக்கலம் நன்று செல்லுதற்குக் காரணமான காற்றை ஈச்வரக்ருபையாகவும், ரூபகஞ் செய்துள்ளாரென்று தெளியலாம். இன்னும் பிறவியைக் கடலாகவும் மநுஷ்ய யத்நத்தைப் பாய்மரக்கலமாகவும் மோக்ஷத்தைக் கரையாகவும் அதனை அடைதற்குக் காரணமான ஈச்வர கிருபையை நல்ல காற்றாகவும் வரைந்துள்ளாரென்னு மும் நன்று பொருந்தும். மரக்கலம் இயங்குதற்கும் கரைசேர்தற்கும் காற்று இன்றியமையாததாயினாற்போல, முயற்சி நிகழ்தற்கும் பயனெய்தற்கும் ஈச்வர கிருபையு மின்றியமையாததாம். மரக்கலம்போல மக்கள் முயற்சி அற்பமாய்ப் பிறிதொன்றானியங்க வேண்டிய நிலையிலுள்ளது. காற்றுப்போல ஈச்வரகிருபை வலிதாய் இம்மரக்கலம்போன்ற தொன்றையே யல்லாமலின்னும் பலவகைப் பொருள்களை இயங்கச் செய்வதாயுள்ளது. காற்று எங்ஙனம் மரக்கலத்தாலுண்டாகாததாய் மரக்கலத்துக்கு முன்னே உள்ளதாவதோ, அங்ஙனமே ஈச்வரகிருபையும் மநுஷ்ய யத்நத்தாலுண்டாகாததாய் அதற்கு முன்னரேயுள்ளதாம். மரக்கலம் காற்றானியங்குவதன்றி மரக்கலத்தாற் காற்றியங்காதவாறுபோல, மக்கள் முயற்சியெல்லாம் இறைவன் அருளால் நிகழ்தலன்றி முயற்சியாலருள் நிகழாதென்றுங் கொள்ளப்படும். எப்படி மரக்கலமானது தனது பாய்களால் வியாபகமான காற்றை முகந்துகொண்டு அக்காற்றுச் செல்லும் வழியிலே அக்காற்றாலே செல்லுமியல்பினதாகின்றதோ, அப்படியே மநுஷ்ய யத்நமும் எங்குமொக்க வியாபகமான ஈச்வர கிருபையை நல்ல நினைவுகளால் முகந்துகொண்டு அவ்வருள் வழியிலே அவ்வரு

*இஃது இராமநாதபுரத்தில் சென்ற ஜூலை மாதத்தில் கூடிய பிரஹ்மஞானசபையில் வாசிக்கப்பட்ட உபந்யாஸத்தின் சுருக்கம்.



ளாலே நிகழுமியல்பினதாகின்றது. மரக்கலம் ஓடக்கருதும்போதெல்லாம் அதற்கு அநுகூலமாகக் காற்றுப் பெருகி வீசவேண்டும் நியதியில்லையாயினாற்போல, மக்கள் முயற்சி நிகழும்போதெல்லாம் ஈச்வரகிருபை பெருகி யொழுகவேண்டுமென்றும் நியதியும் இல்லையாம். மரக்கலம் காற்று நன்று வீசும்வரைக் காத்திருக்குமாறு போல, மக்கள் முயற்சியும் ஈச்வர கிருபைக்குக் காத்திருக்கும்படி நேரினும் நேரும். நோயினாற்கண் குருடுபட்டானொருவன் ஔஷத ஸேவைகளால் ஒருநாட் பாதிராத்திரிப் போதிற் குருடு நீங்கினானாயினும், பொருள்களைக்கண்டு தெளிதற்கு சூரியோதயத்தைக் கருதிக் காத்திருக்குமாறுபோல இதனையுங்கொள்க. குருடு நீங்கச் செய்த முயற்சி சூரியோதயத்தை உண்டுபண்ண வியலாது சூரியன் எய்திய பக்கால் அதனாலொளி கோடற்கே இயல்வதுபோல மநுஷ்ய ப்ரயத்நமும் ஈச்வரகிருபையை உண்டுபண்ண வியலாது. கிருபை எய்தியவிடத்து அதனாற் பயன் கோடற்கே இயல்வது என்றவாறாம். இவையும் இவைபோன்ற பல நுணுக்கங்களும் இக்குலவிருதொடுகூடிய சித்திரத்தாலறியலாம். ஈச்வரகிருபைக்கும் மநுஷ்ய ப்ரயத்நத்துக்குமுள்ள ஸம்பந்தத்தை எல்லாரும் எளிதிலுணர்ந்துய்யும் வண்ணம் பூதத்தாழ்வார் என்னும் பிரஹ்மஞாநியார்

"தனக்கடிமைப் பட்டதுதானறியா னேலும்
மனத்தடையவைப்பதாம் மாலை—வனத்திடரை
ஏரியாம்வண்ண மியற்றுமிது வல்லால்
மாரியார் பெய்கிற்பார்மற்று" என்னும்

திருவெண்பாவால் நன்று விளக்கியருளினர். மநுஷ்ய ப்ரயத்நமெல்லாம் காடுமேடான தரையை ஏரியாக்கும் அவ்வளவே யென்றும், ஈச்வரகிருபை அதன்கண் மழைபெய்து நிறைப்பதுபோலும் என்றும் எனத் தெளிக.

ரா. இராகவையங்கார்,

ஸேதுஸம்ஸ்தாந வித்வான்.

# துறவு.

அநாதியே பாசத்தொடக்குடைய ஆன்மகோடிகளெல்லாம் தத்தம் கர்மத்திற்கேற்றவாறு கடவுளின் ஆணையால் சுவர்க்கம், மத்தியம், பாதலம் என்ற மூன்றுலகங்களிலும் தேவர்முதல் ஸ்தாவரம் ஈறுயுள்ள யோநிகளிற் பிறந்திறந்துழன்று கொள்ளிவட்டம் கறங்கெனத்திரிதார நிற்கும். பரிபாகமின்றிச் சிலையாய்க் கிடக்குங் காலமுமுண்டு.

இவ்வுண்மை :—

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிப்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவரசங்கமத்து
ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத் தேனெம்பெருமான்."

என்று ஸ்ரீ மாணிக்கவாசகப்பெருமான் அருளிய வாசகத்தாற்றெள்ளிதினுணரப்படும். அங்ஙனம் தநுகரண புவநபோகங்களைப் பெற்று வினைப்பயன் நுகர்ந்துவருமிடத்தும் அந்நுகர்ச்சி கர்மங்களையறவே ஒழிக்காது ஆகாமியவினையை விளைத்துவிடுதலின் பலகோடி பிறவிகள் செல்லினும் கர்மங்கள் மேலும் மேலும் வளர்ந்துகொண்டேயிருக்கும்.

மரத்திற்கு வித்தும் வித்திற்கு மரமும் அநாதியே காரணங்களாதல் போலச் சரீரத்திற்கு வினையும் வினைக்குச் சரீரமும் காரணங்களாவனவாம். இதனை நல்லிசைப் புலவராகிய கூலவாணிகன் சாத்தனரும்

"வினையின்வந்தது வினைக்கு விளைவாயது
* * * * யாக்கை யெனப் புலப்படுத்தினர்.

அநித்தியமாய் மூவகைத் துன்பத்தையுடையதாயுள்ள சரீரத்தோடுயிர்கள் பிறந்து பிணிப்பட்டு மூத்து இறந்துழலுந் துன்பத்தை யெண்ணுந்தோறும் நெஞ்சங் கலங்குகின்றதே! ஆ! இவ்வல்லல் வாழ்க்கையும் ஓர் வாழ்க்கையோ? அதுபற்றியன்றே,



"நான்படும் பாடு சிவனே யுலகர் நவிலும்பஞ்சு
தான்படு மோசொல்லத் தான்படு மோவெண்ணத் தான்படுமோ."

எனக் கதறுவாராயினர் ஆன்றோருமென்க. இனி அங்ஙனமாய பிறவியினின்றும் நீங்குதற்குரிய உபாயந்தான் யாதென்னுராய்வோம். காரணமாய வினையுள் வழியும் காரியமாய பிறவி நீங்காது. வினைகளும் விருப்பு வெறுப்புக்கள் ஏதுவாக நிகழ்கின்றன. விருப்பு வெறுப்புக்களும் மெய்ப்பொருளல்லாதவற்றை மெய்ப்பொருள்களாகக் கருதி, யான், எனது என்றபிமாநிக்கும் அகங்காரம் மமகாரங்களினால் உண்டாகின்றன. அத்தகைய விபரீத ஞானத்தை யுண்டு பண்ணுவதுதான் அவித்தை அல்லது ஆணவம் என்று கூறப்படும். அதுவே எல்லாத் துன்பங்கட்கும் வித்தாகும். அது செம்பினிற் களிம்புபோல அநாதியாகவே உயிரைப் பந்தித்து அறிவைத் தடை செய்து நிற்கின்றது. இனி மேற்கூறிய அகங்கார மமகாரங்களும் விருப்பு வெறுப்புக்களும் ஒழிந்தாலன்றி இருவினையும் ஜநந மரணங்களும் ஒழியாவாம்.

இவை ஒழியவேண்டின் நல்லாரோடு பழகுதலும் மெய்ந்நூல்களைக் கேட்டலும் சிந்தித்தலும் புரிதல் வேண்டும். அவற்றான் மெய்யுணர்ந்தவழி ஐம்புலவாசைகளையும் அறவே யொழிக்கவேண்டும். விஷயாநுபவத்தின் பொருட்டு வைத்திருந்த பொருள்களெல்லாவற்றையும் ஒருங்கே விட்டுவிடவேண்டும். அங்ஙனம் விடுதலையே துறவு அல்லது சந்நியாசம் என்பர்.

நமது பட்டினத்தடிகள் முதலாயினோரே அப்படித் துறந்தவராவர். எல்லாவற்றையும் ஒருங்கு விடக் கூடாவிடினும்

"யாதனின் யாதனி னீங்கியா னோதல்
அதனி னதனி னிலன்." என்னுந் திருவாக்கினுண்மையைச்

சிந்தித்து ஓரோவொன்றுகவேனும் விட்டுவருவாராயின் அவ்வவற்றான் வருந் துன்பத்தினின்று நீங்குவர்.

"பிறந்தோருறுவதுபெருகியதுன்பம்
பிறவாருறுவதுபெரும்பேரின்பம்
பற்றின்வருவதுமுன்னதுபின்ன
தற்றோருறுவதறிக.

என்னும் மணிமேகலையின் வாக்கையும் சிந்திக்கக்கடவர்.

3

இனி அகத்திற்றுறவாதிருந்தே துறந்தார்போல் வேடந்தாங்கி வஞ்சித்தொழுகுபவர் கதி யென்னெனின், அவர் கதி அதோகதி தான். புலியின்றோலைப் போர்த்துக்கொண்டு பயிரைமேயும் பசுப் போல்வார் அவர். இல்லிலிருந்து தீங்கிழைப்பவரினும் அதிபாதகர் அவரென்க. துறவிற்கு வேடமே பிரதானமன்று. இல்லின்கண் மனைவி மக்களோடிருப்பவரினுள்ளும் துறவோருளர். ஆதி மஹரிஷிகள் ஆசிரியர் அகத்தியனார், திருவள்ளுவனார் முதலியோர் அத்தகைய துறவோரேயாவர். தேவரும் "ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா, னிந்திரனே சாலுங் கரி." என்னுங் குறளில் முனிவரது வலியை யுணர்ந்துகொள்ளுதற்கு, ஐந்தவியாது சாபமெய்திய இந்திரனைச் சான்றுகூறு முகத்தானே கௌதமரை ஐந்தவித்த முனிவராகப் புலப்படுத்தினார். அவர் அகலியை யென்னும் மனைவியையும் சதாநந்தரென்னும் புதல்வரையுமுடைய ராயிருந்தும் ஐம்புலவாசைகளை யொழித்த துறவோராகக் கருதப்பட்டமையால் யாங்கூறியது ஆசிரியர் திருவள்ளுவனார் கருத்தேயாமென்க.

மற்றும் பெரியோர்கள் எவ்விதக் கருமங்களைச் செய்துகொண்டிருப்பினும் தாம் அவற்றில் தாக்கற்று நிற்பார்கள். தமக்கொரு பயன் கருதி யாதொன்றுஞ் செய்யார்கள். யாம் செய்கிறோமென்று மெண்ணார்கள். "அவனன்றியோரணுவுமசையாது" என்பதே அவர்கள் உள்ளக்கிடக்கை. அக்கருமங்கள் அவர்களைப் பந்திக்கும் வலியுடையனவுமல்ல. அக்கருமங்கள் தாமே அவர்களைவிட்டு விலகிப்போம். கண்ணபிரான் அருச்சுனற்குச்செய்த கீதை யுபதேசமுமிதுவே.

இனி ஐம்புலன்களினுஞ் செல்லாது மனம் ஒடுங்கி நிற்றலே யமையும்; அவித்தையுந் தவிர்ந்துவிடும்; அதுவே முக்தியுமாகுமென்னில், கூறுதும்—மனமொடுங்கிய மாத்திரையானே உயிர் அவித்தையினின்றும் நீங்காது. உயிருக்கு யாதானு மொன்றைப் பற்றி நிற்றலேயியல்பு. எல்லாவற்றையும் விட்டுத் தனித்துநில்லாது. இறைவனுவான் பந்தத்தினும் முத்தியினும் தமக்குபகரிக்கு முறைமையையுணர்ந்து அவன் திருவடியையேபற்றிச் சமாதி



யிலிருக்க ஏனைய பற்றுக்களெல்லாம் நீங்கும். சிற்சத்தியின் பிரகாசத்தால் அவித்தை வலிகுன்றி நீங்கும். இறைவனோடு அத்துவிதக்கலப்புண்டாகும். இதனை—

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு." எனத் திருவள்ளுவனாரும்,
"ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ."

என்று சிவஞானச்செல்வராகிய நம் தாயுமானசுவாமிகளும் திருவாய் மலர்ந்தருளினமையாற் றெளிக. உயிரானது யாதேனுமொன்றைச் சார்ந்து எங்ஙனம் பாவிக்கின்றதோ அப்பாவனையின் வண்ணமாய் நிற்குமியல்பினது. இதனையே தாயுமானசுவாமிகள்

"யாதொன்று பாவிக்க நானது வாதலா
லுன்னை நானென்று பாவிக்கினத்துவித
மார்க்கமுறலாம்" என வெளிப்படுத்தினார்.

அருணந்தியாசிரியரும்,

"கண்டவிவையல்லேனா னென்றகன்று காணக்கழிபரமு நானல்லேனைக் கருதிக்கசிந்த, தொண்டினொடு முளத்தவன்றானின்ற கலப்பாலே சோஹமெனப் பாவிக்கத் தோன்றுவன் வேறின்றி, விண்டகலு மலங்களெல்லாங் கருடதியானத்தால் விடமொழியு மதுபோல விமலதையுமடையும், பண்டை மறைகளுமது நானானேனென்று பாவிக்கச்சொல்லுவதிப் பாவகத்தைக்காணே" என அருளிச்செய்வாராயினர்.

இதுகாறுங் கூறியவற்றால், உயிர்கள் அநாதியே பாசத்தொடக்குடையனவென்பதும், அவை நானாவிதமான யோநிகளிலும் மாறி மாறிப் பிறந்திறந்துழலும் என்பதும், பிறவிக்குக் காரணம் இருவினை யென்பதும், அவை யநுபவிக்குந்தோறும் வளர்கின்றன வென்பதும், அதனைச் சகிக்கலாற்றாது ஆன்றோர் கதறுவாராயினரென்பதும், வினையுள்ளவளவும் பிறவி நீங்காதென்பதும், வினைதான் விருப்பு வெறுப்புக்களால் நிகழ்வதென்பதும், அவைகளும் விபரீதவுணர்வினுலுளவாகின்றன வென்பதும், அவித்தையே (ஆணவம்) விபரீதவுணர்விற்குக்காரணமென்பதும், அவித்தையானது அநாதி

யாகவே உயிரைப் பந்தித்துள்ளதென்பதும், மெய்ந்நூற்கேள்வி முதலியவற்றானே விபரீத வுணர்வை யொழிக்கவேண்டுமென்பதும் அதுவே துறவாமென்பதும், பட்டினத்தடிகள் முதலாயினோர் முற்றத் துறந்தவராமென்பதும், எல்லாம் ஒருங்குவிடக் கூடாவிடினும் ஒரோவொன்றாக விடுகவென்பதும், அவற்றால் துன்பங்குறைவுபடுமென்பதும், தவவேடத்தில் மறைந்து வஞ்சித்தொழுகுவது அதிபாதகமென்பதும், துறவிற்கு வேடமே பிரதாநமன்றென்பதும், மனைவிமக்களோடிருப்பவருள்ளும் துறவோருண்டென்பதும், அகத்தியர், திருவள்ளுவர் முதலியோர் அத்தகையரென்பதும், 'ஐந்தவித்தான்' என்னுங் குறளால் அது வள்ளுவனார் கருத்தென்பதும், பகவத்கீதையின் கருத்தின்னதென்பதும், மனமொடுங்குதல் மாத்திரையானே அவித்தைகெடாதென்பதும், உயிர் ஒன்றைப்பற்றியே நிற்குமென்பதும், இறைவனடியைப் பற்றவே அவித்தையின் வலிகுன்றுமென்பதும், இறைவனோடத்துவிதக் கலப்புண்டாமென்பதும், உயிர் பாவனையின் வண்ணமாய் நிற்குமியல்பின தென்பதும், இறைவனே நானென்று பாவித்தல் ஸோஹம் பாவனை யென்பதும், கூறியன வெல்லாம் ஆன்றோர் பலர்க்குங் கருத்தாமென்பதும் பெறப்பட்டமை காண்க.

நல்லா ரிணக்கமும் நின்பூசை நேசமு ஞானமுமே
யல்லாது வேறு நிலையுள தோவக மும்பொருளும்
இல்லாளுஞ் சுற்றமு மைந்தரும் வாழ்வும் எழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக் கேயிறை வாகச்சி யேகம்பனே.

சுபம்.

மு. வேங்கடசாமி நாட்டார்.

## நன்மொழி.

கல்விடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைக ளாலும் இயம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையில் ஒன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சி
பல்பெரும் சமயம் சொல்லும் பொருளும்போல் பரந்த தன்றே.

—பாலகாண்டம் ஆற்றுப்படலம்.

## ஆகாசக்கப்பல்களுக்கும்புகைக்கூண்டுகளுக்கும்விபத்து.

வாயுமண்டலம் பூமியைச்சுற்றி நாற்பத்தைந்துமுதல் 50மைல் வரை பரவியிருக்கின்றது. ஆனால், அதில் அமைந்துள்ள வாயு திரவியம் ஒரே மாதிரியாய்ப் பரவியுள்ளதன்று. பூமிக்குச் சமீபத்தில் நெருக்கமாகவும், உயர உயர மெலிவாகிக்கொண்டும் பரவியுள்ளது. வாயுவானது ஜலத்தைவிட அதிக நெகிழ்ச்சியுள்ளதாகவும் அதனால் லேசான வஸ்துக்களை மிதக்கும்படியாகச் செய்யும் தகைமையானதாகவு மிருக்கிறது. வாயுமண்டலத்தில் ஓட்டைகள் சில சில இடங்களில் காணப்படுகின்றனவாம். சிற்சில மாதங்களில் அதிக வெப்பத்தினால் எவ்விதக் காற்றுமில்லாத சமயத்தில் சுழல் காற்று ஏற்பட்டு வைக்கோல், எச்சிக்கலை, சில சமயத்தில் கோழி முதலிய வைகளைக்கூடச் செங்குத்தாய் ஆகாயத்தில் கொண்டுபோகின்றன. இவ்விதமாகவே சமுத்திரத்திலும் திடீரென, ஜலமானது எழும்பி ஸ்தம்பம்போல் ஆகாசத்தில் கிளம்புவதையும் பார்க்கின்றோம் இதற்கு Water Spout என்று ஆங்கிலத்தில் பெயருள்ளது. இவ்விரண்டிற்கும் காரணம் ஒன்றே. அதாவது அதிக உஷ்ணத்தினாலாவது மற்றெந்தக் காரணத்தினாலாவது சிற்சில விடங்களில் காற்று திரவிய அணுக்கள் விலகி அகன்றுபோகவே, காற்று திரவியங்கள் சூந்நியமான பிரதேசங்கள் (vacuum) உண்டாகின்றன. அப்பிரதேசங்களைச் சுற்றிச் சலித்துக்கொண்டிருக்கும் வாயு திரவியங்கள் லேசான வஸ்துக்களைப் பூமியினின்று கிளப்பி, மேற்கண்ட சூந்நியப் பிரதேசங்களின் வழியாய் மேலே கிளம்பும்படி செய்கின்றன.

இத்தன்மையான சூந்நியப் பிரதேசங்கள் வாயுமண்டலத்தில் உயர்ந்த இடங்களிற் சம்பவிக்கின்றன. ஆகாசக்கப்பல்கள் அல்லது புகைக்கூண்டுகள் அப்பிரதேசங்களைச் சமீபிக்கவே, உயரத்தில் மிதக்கிறதற்கு ஆதாரமாயுள்ள ஆகாசத்திரவியம் பொய்த்துப் போகவே, அக்கப்பல்கள் சூந்நியப் பிரதேசங்களாகிய ஓட்டைகளின் வழியாய்ப் பூமியின் ஆகர்ஷண சக்தியின் கதிநோக்காய் மகாவேகமாய்ப் பூமியில் தாக்கிச் சிந்நாபிந்நமாகும்படி விழுகிறது. எவ்வளவுக் கெவ்வளவு இக்கப்பல்கள் அதிக பாரமுள்ளதாகவும் கனமுள்ளதாகவு மிருக்கின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு பூமியில் விழும் வேகமும் அபாயமும் அதிகம். இச்சூந்நியப் பிரதேசங்களைச் சமீபிக்கிற ஆகாசக் கப்பல்களின் கண்ணுள்ள சாமான்களின் பளுவைக் குறைத்தல் நலம். இச்சூந்நியப் பிரதேசங்களை யணுகுங்காலத்தில் வாயுவின் பாரத்தை யளக்கும் யந்திரத்தில் (Barometer) உள்ள வாலரஸஊசியானது திடீரென்று முன்னிருந்த உயர்ந்த நிலையை விட்டுக் கீழிறங்கிச் சமநிலையைப் பெறுவதாகும்.

வாயுமண்டலத்தை ஜயித்தோமென்று இருமாப்புகொள்வற்க என்று வாயுமண்டலத்திலுள்ள சூந்நியப் பிரதேசங்களான குழற்கம்பங்கள் அறிவுறுத்துகின்றன.

ப. ரா.

## புருக்களின் மூலமாய் போட்டகிராப் எடுத்தல்.

முற்காலத்தில் நமது நாட்டில் அன்னபக்ஷிகளின் காலில் கடிதங்களைக் கட்டித்தூதனுப்புவதுண்டு என நைஷதம்முதலிய காவ்யங்களாலறிகின்றோம். இக்காலத்தில் மேல்நாட்டாரது விசேஷ புத்திக் கூர்மையால் சிருஷ்டிப் பொருள்களின் தத்துவத்தை அறிந்து அவைகளை உபயோகப்படுத்தும் திறமையடைந்திருப்பதில், பின் வரும் செயல் மிக்க ஆச்சர்யத்தை விளைவிக்கக்கூடியதாயிருக்கிறது புருக்களினுதவியைக் கொண்டு போட்டகிராப்படம் எடுக்கும் வல்லமையை அறிந்திருக்கிறார்கள். ஒரு வைத்தியர் நோயாளிகள் இருக்குமிடத்திற்குப் புருக்களைக் கடிதம் கொண்டுபோகும்படிப் பழக்கியுள்ளார். புருக்களை இவ்வாறு வெளியே அனுப்புவதில் அவைகள் இன்ன மார்க்கமாய்ப் போயினவென்ற விவரம் அறியுமாறு அதன் மார்பில் ஒரு சிறு காமிராவை (நிழல்படம் எடுக்கும் கருவியைச்) சேர்த்துக்கட்டியும், அந்தக் காமிராவின் கண்ணுள்ள திராவகம் பூசிய உயிர்ப்புக் கடிதம் (Sensitive film) மேன்மேலும் தானே விரிந்துகொண்டு வரும்படியாக காற்றுள்ள ஒரு ரப்பர்ப் பந்தையமைத்து அதிலுள்ள காற்று வெளிபேற ஏற, மேற்கூறிய உயிர்ப்புக்கடிதம் விரிந்துகொண்டு வரும்படியாக அமைத்தும் அனுப்புகிறார்கள். குறித்த இடத்திற்கு அப் புருக்கள் போகுங்காலத்தில் மார்க்கத்திலுள்ள வஸ்துக்களின் நிழல்படங்கள் அக்காமிராவின் உயிர்ப்புக் கடிதத்தில் அமைகின்றன. பின்பு குப்தமாயுள்ள அப்படங்களை திராவகங்களால் வெளிப்படச் செய்கிறார்கள். இவ்விதமே சண்டை நடக்குங்காலத்தில் எதிரியின் சேனையின் வகுப்பையும் அமைப்பையும் உபாயங்களையும் போட்டகிராப்செய்து அவைகள் மூலமாய் எதிரியின் பலாபலங்களை யறியக்கூடுமென்று தெரிகிறது. இனி வருங்காலத்தில் கப்பல் விமானங்கள் அதிகப்படுவதினாலும் புருக்கள் மூலமாய் நிழல் படங்கள் மேற்கண்டபடி எடுக்கக் கூடுமானதாலும் ஒரு தேசத்தார் மற்ற தேசத்தாருடன் போர் புரிவதில் ரகஸ்யமாய் உபாயங்கள் தேடுவது முடியாததாக விருக்கும். இது நலந்தான். போர்புரியும் மநத்தினவும், பைத்தியமும் வரவரக் குறையும். தீமையிலும் நலமுண்டாம். சண்டைக்கு அநுகூலமான பலவாறான யுக்திகளும் உபாயங்களும் மேன்மேலும் அதிகரிக்கச் சண்டையும் அற்றுப் போகுமாம்.

ப. நா.

## முத்துப்பயிர்ச்சி.

மிகிமோடோவென்ற ஜப்பானியர் ஒருவர் முத்துக்களை உண்டு பண்ணும் முயற்சியில் பலன் பெற்றிருக்கிறார். முத்துச்சிப்பியின் முட்டைகள் ஏராளமாய் அகப்படக்கூடிய விடங்களில் சிறு கற்களைப் போடுவதால் முட்டையிடும் பூச்சிகள் அக்கற்களின்மேல் கருக்களை வைக்கின்றன. பெரும்பாலும் இவ்விதம் முட்டை வைக்கின்றதானது ஆழமில்லாத சமுத்திரத்தில் அதேயிடத்தி லிருக்கும் பக்ஷத்தில் குளிர்காலம் வரும்போது அக்கருக்கள் மரணமாக ஹேதுவாகின்றன. இச்சம்பவத்தை நீக்கற்பொருட்டு கருக்களமைந்த கற்களை எடுத்து ஏற்கனவே ஆயத்தம் செய்யப்பட்டிருக்கின்ற சமுத்திரத்தின் ஆழமான இடத்தில் அவைகள் வைக்கப்படுகின்றன. அவ்விடத்தில் அவைகள் தங்கிக் கருமலர்ந்து பூச்சிப் பருவத்தையடைந்து அபிவிருத்தியாகும்படி அவைகள் அவ்விதம் வைக்கப்படுகின்றன. பின்பு அவைகள் எடுக்கப்பட்டு அந்த ஒவ்வொரு பூச்சிக்குள் முத்துச்சிப்பியின் ஓரோர் சிறுதுண்டு புகட்டப்படுகின்றது. பின்பு அந்தச்சிறு துண்டைச்சுற்றி இனி முத்தாகக்கூடிய திரவியம் அமைகிறது. இதுவே பின்பு முத்தாக ஆகிறது. இம்முத்து உண்டுபண்ணும் தொழிலை ஜப்பான் தேசத்தில் ஸ்திரீகள் நடத்துகின்றார்கள். அவர்கள் சமுத்திரத்தில் குளித்துக் கருக்களமைந்த கற்களை எடுத்தும் அவைகளுக்கு வேண்டிய சிகிச்சைகளை முத்தாகப் பரிணமிக்கிறவரையில் செய்தும் வருகிறார்கள். புருஷரை விட ஸ்திரீகள் சுவாஸபந்தம் அதிககாலம் செய்ய சாமர்த்தியம் உள்ளவர்களாகத் தெரிகிறது. அதனால் ஜலத்தில் அதிககாலம் மூச்சைப்பிடித்துத் தங்குகிறார்கள். இதற்குக் காரணத்தை அடியில் வருமாறு விநோதமாக ஒருவர் வினவுகிறார். ஸ்திரீகள் அதிகப் பேச்சுக்காரிகளானதால் கும்பகம் செய்யும்சக்தி அதிகமாக உண்டாகின்றதோ? அல்லது புருஷர்கள் பலவாறாக மனம்நோகும்படி ஸ்திரீகளை வைதலும் ஹிம்சித்தலும் காரணமாக ஸ்திரீகள் மநச்சாந்தமும், பொறுமையும்பெற்று அதனால் கும்பகம்செய்யும் சக்தி அதிகரிக்கின்றதோ? எவ்விதமாயினும் சரி ஸ்திரீகளின் சக்தி முத்துக்கள் அதிகமா யுண்டுபண்ணுவதில் உதவுகின்றது.

ப. நா.

## ஓய்வு நேரத்தை ஒழுங்காய்க் கழிக்கும் முறை.

—:o:—

இக்காலத்தில் பள்ளிக்கூடங்களுக்கும் நியாயஸ்தலங்களுக்கும், இவைபோன்று தொழிற்படுமிடங்களுக்கும் சில மாதங்கள் அல்லது சில வாரங்கள் ஓய்வுநாட்களாக ஏற்படுகின்றன. இத்தன்மையான ஓய்வுநாள் ஏற்படுத்தல் சரீரம் புத்தி முதலியவைகளுக்கு அநுகூலமானவை. இக்காலத்தில் உத்தியோகத் தொழிற்படுகின்றவர்கள் தொடர்பாய்த் திநம் திநம் செய்ததொழிலையே திரும்பத்திரும்பச் செய்கின்றார்கள். அதனால் மூளைக்குக் களைப்பும் மநத்திற்கு விரஸமும் உண்டாகின்றன. அதனால் உலக வாழ்க்கையில் உற்சாகம் உண்டாகாமல் மநம் மழுங்கி ஆயுளும் குறைவுபடுதற்கு ஏதுவாகின்றது. இவ்வித சம்பவம் நிகழாதிருக்கும் பொருட்டே ஓய்வுநாள் என்ற விவஸ்தை இக்கால நாகரிகத்திற்கேற்ப உண்டாயிருக்கின்றது. இந்த ஓய்வுநாளைத்தான் முன் தொழிற்பட்டிருந்த விடத்திலேயே செலவழிக்காமல், புதிய விடங்களுக்குப் போதலும், புதிய விஷயங்களைப் பார்த்தலும் கேட்டலும், புதிய தொழிற்படுதலும் நலத்தையுண்டாக்கும். தான் இருந்த இடத்தைவிட்டுச் சொற்பகாலமேனும் வெளியேறி இயற்கைப்பொருள்களின் வனப்பையும் இயற்கை சம்பவங்களின் அழகையும் பார்த்தல் மநத்திற்கு உற்சாகத்தையுண்டாக்கும். மலைகளென்ன, அழகான காடுகளென்ன, அருவிகளென்ன, இவைபோன்றவைகளைப் பார்த்தால் தற்சமயமேனும், தன்னைமறத்தலுக்கு அநுகூலமாகும். பார்க்கப்படும் அவை மநத்தைக் கவர்ச்சிக்கும்படியான அழகுள்ளவைகளாக விருக்குமாகில் மெய்ம்மறந்து அவைகளின் அழகையே பாராட்டி மநம் ஒருமைப்பட்டு அந்நிலையில் நிற்பதாகும். இவ்விதமாய்ப் பல முறை ஒருவன் காலங்கழிப்பானுகில், ஏகதேசத்தில் மெய்யுணர்வு பெறுதலும் சம்பவிக்கும். ஒரு பெரியவர் சொல்லுகிறபடி, ஒரு வாரத்துக்கு ஒரு முறையேனும் தானிருக்கும் நகரத்தைவிட்டுப் புறம்பேகி ஏகாந்தம் கொள்க.

சி. வ.

## சுமதி என்னும் உத்தமியின் சரித்திரம்.

(177-ம் பக்கத் தொடர்ச்சி.)

வணிகர் வேந்து சுமதியினிடத்தில் மையல் கொண்டவனாய் அவளை நோக்கி, "பெண்ணே! நீ யேன் வீணில் மநோராஜ்யம் பண்ணுகிறாய். உன் சகோதரன் எங்கே போனானோ, எந்தப் புலியின் வாயில் அகப்பட்டு இறந்தானோ, எந்தப் பள்ளத்தாக்கில் அவனை நாய் நரிகள், பேய் கழுகுகள் பிடுங்கித் தின்றுவிட்டனவோ. இந்நேரமாகியும் வராததைப் பார்த்தால் அவ்வாறே நினைக்கவேண்டியிருக்கிறது. பூவினும் மெல்லிய சரீரத்தை இக்கொடிய கல்லாந்தரையில் வீணில் போட்டு ஏன் துன்புறுகிறாய், என்னுடன் கூடவா; நான் இந்த வணிகர் கூட்டத்துக்கு வேந்தன். இரண்டொரு நாள் பிரயாணத்தில் என்னுடைய அழகிய நகரமிருக்கின்றது. அதில் உந்நத உப்பரிகைகளையுடைய பல அரண்மனைகளும் உத்தியானவனங்களும் அதன்கண் ஸ்படிகம் போன்ற வாவிகளும் உண்டு, பொழுது போக்குக்கு அநேக மான்களும், கிளிகளும், மயில்களும் உண்டு. உன் பிராய மங்கையர்களும் பலருண்டு. அவர்களுடன் கூடிக் குலாவிக்களித்து இன்புற்றிருக்கலாம். வீணில் இந்த நிர்மாநுஷ்யமான காட்டில் ஏன் கிடந்து துன்புறுகிறாய். உனக்கு வேண்டிய சௌக்கியங்களை யெல்லாம் நீ ஆங்கு அடையலாம். உன் பிதாவின் வீட்டிலும் அவ்வாறான சுகவாழ்வைக் கண்டிருக்கமாட்டாய். உன் முகமோ தாமரையைப் பழிக்கின்றது. உன் புருவமோ வில்லைப் பழிக்கின்றது. கண்களோ நீலோற்பலங்களைப் பழிக்கின்றன. அதரமோ பவளத்தைப் பழிக்கின்றது. பற்களோ முத்துக்களின் வரிசையைப் பழிக்கின்றன. கழுத்தோ சங்கத்தைப் பழிக்கின்றது. கூந்தலோ கருமேகத்தையும் கடலின் கருமணலையும் பழிக்கின்றது. உன் வடிவோ சுவர்ணத்தை உருக்கி வார்த்தாற்போ லிருக்கின்றது." என்று இச்சக மொழிகளைக் கூறவே, சுமதி தன் துக்கத்தைச் சிறிது மறந்தவளாய்ப் பகவத்தியாநம் செய்து எழுந்திருந்து. "அடா, பதரே! நீ நற்குடிப் பிறந்தவனாகத் தோற்றவில்லை. துர்ப்புத்தியால் ஏதோ பைத்தியங்கொண்டு பிதற்றுகிறாய். வீணில் பழி பாவத்துக்கு உள்ளாகாதே. பிற மாதர்களைத் தாய்போலவும் சகோதரிபோலவும் கருதவேண்டியிருக்க, ஏதோ கர்ண கடூரமான மொழிகளைக் கூறுகின்

ருய். ஏதோ அநாதையாய் இக்காட்டில் யான் இருப்பதாக நினைத்து இக்கடுமையான மொழிகளைச் சொல்லத் துணிந்தாய். ஆதியில் தனிமையாய் என்போல் வநத்தில் வழிதப்பிச் சென்ற தமயந்தியை ஒரு வேடன் காதலித்துச் சாம்பராய் அழிந்ததை அறியாயோ. கபட சந்நியாசி வேஷம் பூண்டு திருட்டுத்தனமாய் ஒருவருமில்லாத சமயத்தில் ஆச்சிரமத்தில் நுழைந்து சீதாதேவியைத் தூக்கிச் சென்ற இராவணன் பட்டபாட்டைக் கேட்டதில்லையோ. திரௌபதையின் மாநத்தைக் குலைக்க முயற்சித்த துரியோதநாதிகள் அடியோடே மாண்டதை அறியாயோ. பெண் மோகத்தால் இந்திர சந்திராதிகள் உலகமுள்ளளவும் அடைந்த பழியை மறந்தனையோ. துர்ப் புத்தியால் வீணில் கெட்டழிய வேண்டாம். பிராணனை விட்டாகிலும் மாநத்தைக் காப்பாற்றுவதே உத்தம குலப் பெண்களின் விருது. இக்காட்டில் என் சகோதரன் திரும்பி வந்தாலும் சரி, வராவிடினும் சரி, வந விலங்குகளுக்கு மத்தியில் என் பிராணனைக் கொடுக்கச் சித்தமா யிருக்கிறேன். உன் உதவி எனக்குச் சிறிதும் வேண்டுவதில்லை, நீ உன் பாட்டைப் பார்த்துக்கொண்டு போ. வீணில் துர் எண்ணத்தால் பழிக்குள்ளாகாதே" என்று அக்கொடியவனைக் கண்ணால் பார்க்கவும் கூசித் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டனள். அந்தத் துராத்துமாவோ மதிமயக்கம் நீங்காதவனாய் அவளது பின்னழகைக் கண்டு தேன்வீழ் ஈயை ஒத்து நின்றான். தன்னால் கூடிய சாமர்த்தியத்துடன் அவள் மநத்தைத் திருப்ப முயன்றான். அவள் மநமோ வைரத்தினும் உறுதியாயிருந்தது. "காவல்தானே பாவையர்க்கழகு" என்ற வண்ணம் தன் மநோதைரியமே தன் காவலாகச் செய்துகொண்டு அத்துஷ்டனைக் கண்ணேறிட்டுப் பாராமல் நிலத்தை நோக்கிய வண்ணமாய் நின்றாள். அத்துஷ்டனோ மன்மதனால் பீடிக்கப்பட்டுப் பின்னும் பேசத் தொடங்கினான். "நங்காய்! உன் புஷ்பம்போன்ற சரீரத்தை நீ வீணில் கெடுத்துக்கொள்ளுகிறாய். மானுடர் வாழ்வோ சொற்ப காலமுள்ளது, அதில் இளமைப்பருவமோ மிகவும் சொற்பம், அதிலும் பிணி முதலிய துன்பங்கள் நேரிடின் யாதொரு சுகமும் கிட்டுவதரிது. "காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ளல் வேண்டும்" யௌவநம் எல்லாம் வீணில் விரயம் செய்வதில் யாது பயன்? "நாளல்லா



நாள் பூத்த நன்மலரும் போலுமே, ஆளில்லா மங்கைக் கழகு" என்பதை நீ வாசித்ததில்லையா. நீ காட்டு ரோஜாவாக நின்று ஏன் வீணில் காற்றில் உன் வாசனையை எல்லாம் பயனற்றதாகச் செய்கிறாய். பெண்கள் என்றும் தனியே வசித்தல் தகாது. "துணையோடன்றி நெடுவழி யேகேல்" என்றும் நீதியுண்டு. நாங்கள் போய்விடும் பக்ஷத்தில் உனக்குத் துணை யார்? நீயோ தாய் தகப்பனையும் சகோதரனையும் இழந்தவளாகிறாய்; நான் இனி உனக்கு அருந்துணையாய் நிற்பேன். நற்குலத்துப் பெண்கள் யௌவந காலத்தைக் கணவனின்றிக் கழிக்கலாகாது. கடவுள் இந்த லோகத்தில் எல்லாப் பதார்த்தங்களையும் மனுஷனுடைய சுகத்துக்காகவே படைத்திருக்கின்றனர். ஸ்திரீபுருஷர்கள் இவ்வுலகிலுள்ள சுகங்களை அநுபவியாமல் வீண் தர்க்கங்கள் பேசி அச்சுகங்களை அநியாயமாய் இழக்கிறார்கள். அது முற்றிலும் மூடத்தனமே. புருஷனாவது கல்யாணமின்றி இருக்கலாம், ஸ்திரீகள் விவாகம் இல்லாமல் ஒரு நிமிஷமாவது இருக்கலாகாது. வீண் யோசனை செய்யாதே. என்னுடன் கூடவா, உன்னை என் பட்ட மகிஷியாக்கி உயர்ந்த சுகத்தில் வைத்துக் காப்பேன், மாந்தளிர்போன்ற அழகிய சரீரத்தை வீணில் வாடச் செய்யாதே. சிறு பெண்ணானதால் உனக்கு லோகாநுபவம் போதாது, நன்றாய் ஆலோசித்துப் பார், கைக்கெட்டிய பழத்தை விட்டுவிடாதே. யாதொரு கவலையுமின்றி வாழும்படி உன்னை உயர்ந்த சுகத்தில் வைப்பேன். உனக்கு அடிமையாய் நின்று நீ காலாலிட்ட வேலையைத் தலையால் முடிப்பேன். இது சத்தியம். பெண்ணணங்கே! நீ சிறிது கருணைசெய், நான் உன்னை மணம்புரிந்து கொள்வேன். நீயே என் ஆஸ்திக்கெல்லாம் தலைமையாயிருந்து வேண்டிய வண்ணம் சகல போக போக்கியங்களையும் அநுபவி" என்று இன்னோரன்ன பசப்பான வார்த்தைகளைப் பேசி மயக்கத் தன் சாமர்த்தியத்தை எல்லாம் காட்டினான்.

சுமதியோ உத்தம ராஜபுத்திரவமிசப்பெண். இம்மொழிகள் எல்லாம் அவள்காதில் நாராசம் காய்ச்சிவிட்டதுபோலிருந்தன. அவள் அத்துஷ்டனைக் குறித்துப் பின்வருமாறு பேசலானாள்:—"துஷ்டா! ஏன் துஷ்டவார்த்தைகளைப் பிதற்றுகின்றாய்" விநாசகாலத்தில் விபரீதபுத்தி தோன்றுகிறதுபோலும், என்ன கஷ்டப்பட்டபோதிலும்,

நற்குடிப்பிறந்த பெண்கள் குலதர்மத்தைக் காப்பாற்றவேண்டியது. அவர்களுக்கு அதனினும் பூஷணம் வேறு கிடையாது. பெரியோர்களது வரைக்கு உட்பட்டு நடத்தலே அவர்கள் கடமை. மநம் போன போக்கெல்லாம் போதல்கூடாது. புருஷன் கெட்டுப்போனால் அவனுடன் அக்கேடு நிற்கும். குடும்பகௌரவத்தைக்கெடுக்காது. பெண்ணோ தவறி நடக்கும்பக்ஷத்தில் குல ஒழுக்கத்தை முற்றிலும் கெடுத்தவளாவாள். நான் க்ஷத்திரியகுலம். நீயோ வணிகக்குலம். உத்தம குலத்துக்குரிய நடத்தை உன்னிடத்தில் கிடையாது.வீணில் வார்த்தையைச் சிதறவேண்டாம். விவாகம் என்பது தெய்வசங்கற்பமான ஓர் உயர்ந்த புண்ணிய கர்மம்.அதனை நீ இவ்வாறு காமமயக்கத்தால் இலேசாக நினைக்கவொண்ணாது.தாய் தகப்பன், சகோதரர், உற்றார் பெற்றார் முதலியோருடைய அநுமதியின்றிப் புருஷனுவது, பெண்ணுவது விவாகத்துக்கிசைதல் அழகன்று. க்ஷத்திரியர்களுக்குள் காந்தர்வ விவாகம் ஏற்பட்டிருப்பினும் அது கடைமுறையேயாகும். காதலன் காதலி இருவருடைய மனவொற்றுமையுடன் ஒத்த குலமும் ஒத்த பருவமும் ஒத்த அழகும் சேர்ந்திருந்தாலொழிய அதுவும் குற்றமேயாகும். எந்த விஷயத்திலும் நம்மிருவருக்கும் ஒற்றுமையில்லை, ஆகையால் நீ வீணிற் கெட்டுப்போகாதே. உன் வழியை நோக்கிச்செல். தெய்வம் எனக்குத் துணைநிற்கும் என்னைப்பற்றிச் சிறிதும் கவலையுறல் வேண்டாம் என்று திக்காரம் செய்தனள்.

அவ்வுத்தமி இவ்வாறு கூறவே அவ்வணிகன் காமவெறிகொண்டவனுய்த் தான்செய்யும் காரியம் இன்னதென்று சிறிதுஞ் சிந்தியாமல் அவ்வணங்கைத்தூக்கிப் பல்லக்கில் வைத்துக்கொண்டு தன் ஊருக்குக் கொண்டுபோய் விட்டான். சுமதியோ கண்ணுங்கண்ணீருமாய் அலறியும் புரண்டுவிழுந்தும் பயனில்லை. அச்சமயத்தில் அவள் தன் குலதெய்வத்தைப் பிரார்த்தித்துக்கொண்டு கூட்டில் அகப்பட்ட கிளிபோலவும் வலையில் அகப்பட்ட மான்போலவும் துன்பப்பட்டுக் கொண்டுபோயினள்.

தன்னூர்போய்ச்சேர்ந்த வணிகன் சுமதியை ஓர் உத்தியாநவநத்தின் மத்தியிலுள்ள ஒரு மாளிகையிற்கொண்டு சிறைவைத்தான். ஒவ்வொரு நாளும் அவ்வுத்தியாந வநஞ்சென்று அவளைப் பலவிதமாய் இணக்கமுயன்றும் முடியவில்லை. வைரத்தை இரும்பு பிளக்குமா? உத்தமகுலத்துப்பெண்களை மூடர்கள் எவ்வித உபாயத்தாலும் மேற்கொள்ளமுடியாது. சந்திரகாந்தக்கல் உருகச் சந்திரபிம்பம் அன்றோ வேண்டியது. இவ்வியற்கை உண்மையையறியாத வணிகன்பலபாடுபட்டும் எல்லாம் விழலுக்கிறைத்ததாயிற்று. அவன் வேறொரு உபாயம் செய்யக்கருதினன்.

அவ்வூரில் ஒரு கணிகையுண்டு. அவள் அநாதைகளான குலப்பெண்களைத் தேடிக் கண்டுபிடித்துச் சிறு பிராயத்திலேயே அவர்களைத் தன் கணிகைத்தொழிலுக்குப் பழக்குவது வழக்கம். அவ்வேலையில் அவளினும் சாமர்த்தியமுள்ளவள் ஒருவரும் கிடையாது. ஆகையால் அவ்வணிகர்வேந்து அக்கணிகையைத் தருவித்து அவளிடம் நம் சுமதியை ஒப்புவித்துத் தன் நோக்கத்துக்கு இணங்கச்செய்யப் பழக்கும்படிக்கும், அவ்வாறு பழக்கி இணங்கச்செய்யும் பக்ஷத்தில் வேண்டிய பொருள்கொடுப்பதாகவும் சொன்னன். பணத்துக்கு ஆசைப்பட்ட அக்கணிகை அவ்வாறே செய்வதாக வாக்களித்து அடிக்கடி அவ்வுத்தியாந வநத்துக்குப்போய்ச் சுமதியுடன் பேசிக்கொண்டிருப்பது வழக்கம். சுமதி அவளைக் கணிகையென்று அறியாள். அவளுடைய நடையுடைபாவனையும் சுமதிக்குப்பிடிக்கவில்லை. தன்னந்தனியாய் உத்தியாந வநத்திலிருந்தபடியால் பொழுது போக்குக்காக வலுவில் வந்துபோகும் அக்கணிகையினிடம் பொதுவாக ஏதாவது பேசுவாள். அநேகமாய் அக்கணிகை சொல்லும் விசித்திர கதைகளைக் கேட்கப் பிரியப்படுவாள். சிற்சில சமயங்களில் அவள் பாடுவதைக்கேட்டுச் சுமதி அவளிடம் பிரியங்காட்டுவாள். சங்கீதத்தில் சுமதிக்கு நல்ல ஞானமிருந்ததாலும் அக்கணிகையும் நன்ருய்ப் பாடினபடியாலும், இருவருக்கும் சிநேகம் சிறிது அதிகரித்தது. இவ்வாறு சில நாட்கள் சென்றபின்னர் அக்கணிகை சுமதியைப் பார்த்துப் பின் வருமாறு உபந்நியஸிக்கத் தொடங்கினள்.

"நங்காய், சுமதி! நீ நற்குணமுள்ளவளாயிருக்கிருய். உன் குணஅழகுமேலோ, உன் வடிவழகுமேலோ, என்று சந்தேகப்படவேண்டியிருக்கிறது. உன்னுடைய பருவமோ மிகவும் இளமை. உனக்கு சங்கீதத்தில் இருக்கிற ஞானமோ கந்தர்வ ஸ்திரீகளுக்கும்

இல்லை. எல்லாவிதத்திலும் நீ மேன்மையடைந்திருக்கிறாய். ஸ்திரீகள் யௌவனத்தை வீணில் வாடிப்போகும்படி விடலாமா? உனக்கோ ஒரு நாதனையும் காணோம். நீ விவாகமில்லாமலிருப்பது எனக்குப்பரிதாபமாயிருக்கிறது. உன் மனத்தின்கண் உண்டாகும் விகாரங்களையெல்லாம் நீ வாய்விடாமல் மறைத்துவைப்பதிற் பயனென்ன? நான் உனக்கு உற்ற தோழி, என்னிடம் நீ தாராளமாய் எதையும் சொல்லலாம். நான் உனக்கு வேண்டிய உதவிசெய்து உன்னை ஒரு தநவானுக்கு மணம்புரிவிப்பேன். இந்த உத்தியாநவநத்துக்குரிய வணிகன் மகா தநிகன். அவன் உன்னைக் கொணர்ந்து இவ்விடம் வைத்து எத்தனையோ அன்போடும் சிரத்தையோடும் காப்பாற்றி வருகிறான். உன் மநம் கோணுமல் நடக்கும் அவனுக்கு நீ யாது கைம்மாறு செய்யப்போகிறாய்? அவனே மகா செல்வாக்குள்ளவன். உன் இஷ்டப்படி நடக்க எதையும் செய்யச் சித்தனயிருக்கிறான். அவனிலும் அழகும் இடம் பொருள் ஏவலும் படைத்தவர்கள் உனக்கு யார் கிடைக்கப்போகிறார்கள்? நான் சொல்வதைச் சற்றுச் செவி சாய்த்துக்கேளம்மா! நீ சிறு பெண், உனக்கு அநுபவம் சிறிதும் கிடையாது, பின்னால் நீ மிகவும் வருந்தநேரிடும். ஆகையால் சிறிதும் தாமதியாதே, "காற்றுள்ளபோதே தூற்றிக்கொள், கரும்புள்ளபோதே ஆலையாடிக்கொள்" வீண் மனோராஜ்யம் பண்ணாதே. உன் உற்றார் பெற்றாரை நீ ஒருபோதும் காணமுடியாது, உன் தமையன் இதுவரையிலும் உன்னைத்தேடி வராததால் கட்டாயம் இறந்தே இருக்கவேண்டும். ஏன் வீணில் இந்த அழகிய தேகத்தை வாட்டிவதக்குகிறாய்? மன்மதனும் உன்னைக்கண்டு மயங்குவானே. இந்த வணிகர் வேந்து இத்தனை நாளாக உன்னைச் சும்மா விட்டிருப்பது ஆச்சரியமாக இருக்கிறது. பெண் ஜன்மமாகிய நானும் உன்னைக் கண்டவுடன் மயங்கினேன் என்றால், பிறர் மயங்கக்கேட்பானேன். சற்று நிதானித்து யோசித்துப்பார். இளமைப்பருவத்திலேயே இவ்வாறு விரதங்கள் கொண்டால் பயனென்ன. அப்பருவம் இன்பம் அநுபவிக்கவே ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. என் போன்றவர்கள் நினைத்த வண்ணம் இன்பங்களை அநுபவித்தும் இன்னும் தெவிட்டவில்லை. எங்கள் குலம் கணிகையர் குலம், அவ்வாறு நீ இருக்கவேண்டுவதில்லை.

(இன்னும் வரும்.)

எஸ். சாமிநாதையர்.

# சமாசாரம்.

---

வேயிலில் அலைகிறவர்களுக்கு சூரிய ரஸ்மியால் காய்ப்புண்டு மூளை மயங்கியும் சிற்சில சமயங்களில் அவர்களுக்குப் பிராண ஹாநியும் சம்பவிக்கக் கூடியதாயிருக்கிறது. நல்ல குதிரைகள் சூரியவெப்பம் தாங்காமல் சுருண்டு விழுந்து மாய்கிறது முண்டு. இதைத் தடுக்கச் சிவப்பு உருமால் கட்டுதலும், சிவப்புத் தொப்பி போடுதலும், நலமென்று ஒரு அறிஞர் கண்டுபிடித்து அநுபவவித்தமாய் ருசுப்படுத்தி யிருக்கிறார்.

---

"சுவர்ணமணிமாலை" என்ற சங்கம்:—இது குழந்தைகள் அன்பின் வழியில் அமைதலுக்கு உற்ற சங்கம்.

வாழி, நேசி, சுகி.

ஒவ்வொரு குழந்தையும் அடியில்வருமாறு திநம் ஒருமுறை சிந்தனை செய்யவேண்டுவது.

(1) இவ்வுலகத்தைச் சூழ்ந்திருக்கும் அன்பாகிய சுவர்ணமணிமாலையில் நான் ஒரு மணியாய் உள்ளேன், என் மணி பளபளப்பாயும் உறுதியாயும் இருக்கற்பாலது.

(2) அதனால் எனக்கு எதிர்ப்படும் எவ்வுயிரையும் அன்பாகவும் ஆதரவாகவும் நடத்த முயலுவேன். என்னின் மெலியாரைக் காப்பாற்றவும் அவர்க்கு உதவிபுரியவும் முயலுவேன்.

(3) மாசற்றவும் அழகானவுமான சிந்தனைகளைச் சிந்திக்கவும், மாசற்றவும் அழகானவுமான சொற்களை வசனிக்கவும், மாசற்றவும் அழகானவுமான கர்மங்களைச் செய்யவும், நான் முயலுவேன்.

(4) நல்லவனாய் ஒழுகுவேன். பிறர் நலம்பெற வாழ்வேன்.

(5) இம்மாலையின்கண் உள்ள ஒவ்வொரு மணியும் என்றும் பளபளப்பாயும், உறுதியாயும் ஆகவேண்டுமென விரும்புவேன்.

---

கே. எம். ராமஸ்வாமி அய்யர் B. A. என்பார் மரணம். நமது ஞாந சகோதரர் பிரஹ்மஸ்ரீ இராமஸ்வாமி அய்யர் அவர்கள், சென்றமீ 15உ சாயங்காலம் $6\frac{1}{2}$மணிக்கு தேகவியோகமானார். மரணத்திற்கு இரண்டுநாள் முன்வரை பிரஞ்ஞையுடன் பேசிக்கொண்டிருந்தார். அவர் கடைமுறையில் வசனித்த வார்த்தைகள் மிகவும் நலமுள்ளன. "நான் பிரஹ்மஞாந சபையின் புத்தகங்களைப் படித்து அறிந்ததினால், எனக்கு மரணபயம் இல்லை. மரணம் என்பது ஒரு ஊரினின்று மறு ஊருக்குப் போவது போன்றதாம். நான் திருப்தியாக இருக்கிறேன், கவலை எனக்கில்லை. சென்ற வருஷத்தின் ஜனவரிமீ 1உயின் கிரகங்களின் அமைப்பால், ஒரு மஹாபுருஷன் அவ

தாரம் ஆகவேண்டியகாலம் சம்பவித்திருக்கிறது. அவர் வெளித்தோன்றுவர். அவரை வழிபட ஜநங்கள் ஆயத்தம் செய்துகொள்ளவேண்டும்." தன் ஜேஷ்ட புத்திரனையும், மாப்பிள்ளைகளையும் பார்த்து, "நீங்கள், பிரஹ்மஞான சபையைச் சேருங்கள். அதன் இலக்கியங்களைப் படியுங்கள். அவைகள் மிகப் பயன்படும்." சுமார் 20 வருடத்திற்கு மேலாக டிஸ்டிரிக்கட்டு கோர்ட்டு வைக்கிலாக இருந்து திரவியம் சம்பாதித்தார். பெருகிய சந்தானமுள்ளவர். ஈகையுள்ளவர். பொதுநலப்பிரியர். மதுரை பிரஹ்மஞான கிளைச்சபையின் அதிக அபிமானமுள்ளவர். மரணகாலத்தில் அவருக்கு வயது 51. புவர்லோக சுவர்க்கலோக அநுபவங்கள் முடிந்து சீக்கிரம் சபையின் தொழிலை இனி அதிக தீவிரமாக நடத்த மறுபடி திரும்புவர். மறுமையின் அநுபவங்கள் அவருக்குச் சுகமாக நடைபெறுவனவாக.

---

பழைய கவர்னர் போதல், புது கவர்னர் வருதல்:—கனம் தங்கிய ஸர். ஆ. லாலி அவர்களான நமது சென்னை இராஜதானி கவர்னர் நாளிது மீ 3வ தம்முடைய ஆளுகை முடிந்தமையால், சென்னையை விட்டு தம் தேசத்திற்கு பிரயாணமானர். நாளிது மீ 1வ புது கவர்னரான கனம் தங்கிய ஸர். ஜெ. ஜிப்ஸன் கார்மிக்கேபல் அவர்கள் சென்னைக்கு விஜயமாகி, நாளிது மீ 3வ இந்த ராஜதாநியின் அதிகாரத்தை வகித்தார்.

---

ஹிந்து ஸர்வகலாசாலை:—மாதுஸ்ரீ அந்நிபெஸண்டு அம்மையார் சென்றமீ 6வ சீமையிலிருந்து சென்னைக்கு வந்தார்கள். சொற்பகாலம் அவ்விடம் தங்கியிருந்து, சென்றமீ 12வ காசிமாநகரத்திற்குச் சென்றார்கள். காசிநகரத்தின்கண்ணுள்ள ஹிந்து வித்தியாசாலையை நடுநாயகமாக வைத்து, ஹிந்து ஸர்வகலாசாலையை ஏற்படுத்துவதாக, பிரஹ்மஸ்ரீ மதன்மோகன் மாளவ்வியர் அவர்களும், பிரஹ்மஸ்ரீ தர்பங்க மகாராஜாவும், மாதுஸ்ரீ பெஸண்டு அம்மையாரும், ஏகோபித்துத் தீர்மாநம் செய்திருக்கிறார்கள். சீக்கிரம் இறைவன் அருளால் இந்த விஷயம் உறுதிப்படுமென்று நாம் நம்புகிறோம்.

---

விக்டோரியா எட்வார்டு சரஸ்வதீ விலாஸம்:—இப்பெயர்கொண்ட புத்தகசாலையும், பொதுஜந சபாமண்டபமும், நம்மதுரைமாநகர்க்கு நிர்மாணம் செய்கிறதாக, தீர்மானம் செய்யப்பெற்று அதன் சங்கஸ்தாபநம் நாளிது மீ 11வ சாயங்காலம் 5 மணி, 30 நிமிஷமான நல்லவேளையில் கனம் தங்கிய பிரஹ்மஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்கள் செய்திருக்கிறார்கள். மேற்படி கட்டிடம் சீக்கிரம் முடிவுபெற்று, ஜநங்களுக்கு உபகாரமானதாக அமைய வேண்டுமென பிரார்த்திக்கின்றோம்.

பத்திராதிபர்.

# பூர்ணசந்திரோதய அநுபந்தம்.

பகவான் பதஞ்சலி மஹரிஷி அருளிச்செய்த

## யோகசூத்திரம்.

(தமிழ் மொழிபெயர்ப்பு.)

☞ பிறர் இதை அநுமதியின்றி பிரசுரம் செய்யக்கூடாது.

ப. நா.

குறிப்பு:—ராகத் துவேஷாதிகள், அகங்காரம், அசூயை, ஈரிஷை, கோபம் முதலிய துர்க்குணங்கள் நீங்கி மநம் நிர்மலமாகவேண்டியதற்கு உபாயம் சொல்லுகின்றார். சுகமாயிருப்பவரைப் பார்த்தால் ஈரிஷை உண்டாகும். அதனால் மநத்திற்குக் கல்மஷம் உண்டாகும். அப்படி உண்டாகாமல் இருத்தற் பொருட்டு அவர்பால் ஸ்நேஹபாவத்தையும், துக்கத்திற்குள்ளானவர்களிடம் தயை, காருண்ணியத்தையும்* புண்ணியம் செய்பவர்களிடம் சந்தோஷத்தையும், பாபம் செய்பவரிடத்தில், அவரையும் அவர் செய்யும் பாபத்தொழிலையும்பற்றிக் கவநியாதிருத்தலையும், நம் மநத்தில் உண்டுபண்ணிக்கொளல் வேண்டும்†. அப்படிச் செய்வதினால் மநத்தின் சாஞ்சல்லியம் நீங்கும். பரிசுத்தமாகவும், ரஜஸ், தமோகுணங்கள் நீங்கப்பெற்று, மநம் சுத்த ஸாத்விக குணமுடையதாகும் அதனால் சித்தம் ஐகாக்ரியம் அடையும், மநம் ஒருநிலைப்பெறும்.

இந்த சூத்திரம் தியாநகாலங்களில் தவிர, மற்ற காலங்களில், அதாவது உலகத்தில் நடைபெறுங் காலத்தில், யோகி ஒழுகவேண்டிய முறையை உபதேசிக்கின்றது.

34. ப்ரச்சர்தநவிதாரணாப்யாம் வா ப்ராணஸ்ய॥

பிராணனைப் பிரயத்நத்தால் (யோக முறைப்படி) வெளியே விடுதலும், உள்ளே நிறுத்தலும், என்ற பயிற்சியாலாவது (மநத்தை ஒருநிலைப் படுத்தல் வேண்டும்.)

குறிப்பு:—முந்திய சூத்திரத்திற் சொல்லியிருக்கிறபடி "மைத்ரீகருணை" முதலிய தன்மைகள் ஏற்படாவிடில், மநத்தை ஒரு நிலையில் இருக்கும்படி செய்தலுக்குச் சாதநங்களைச் சொல்லுகிறார், இந்த சூத்திரத்தில் ஒரு உபாயம் சொல்லுகிறார். அதுதான் பிராணாயாமம். வா என்பது இனிவரும் மற்ற சாதநங்களை உத்தேசித்தது.

பிராணாயாமம் செய்தலினால் மநத்தின்கண் உண்டாம் விர்த்திகள் ஒடுங்கும்.

---

* அதனால் பிறர்க்கு அபகாரம் செய்தலை நிவிர்த்தித்து, உபகாரம் செய்தலே நலம் என்ற எண்ணம் உண்டாகும்.

† அப்படிச் செய்வதினால், உண்டாகும் கோபம் விலகும்.

மன்மன மெங்குண்டு வாயுவு மங்குண்டு
மன்மன மெங்கில்லே வாயுவு மங்கில்லே
மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க்கு
மன்மனத் துள்ளே மனேலய மாமே—திருமந்திரம்.

வெளியே விடுதல் (ரேசகம் செய்தல்) உள்ளே நிறுத்தல் (கும்பகம் செய்தல்) என்ற முறை இந்த சூத்திரத்தில் சொல்லியிருக்கின்றது. அதாவது பூரகம் செய்யாமல் கும்பகம் செய்தலாம். இம்முறையில் வெளியேறின வாயுவை வெளியிலேயே இருக்கும்படி செய்தல் கும்பகமாம். இவ்விதம் செய்வதால், சரீரம் லகுத்துவத்தை அடைகிறது. அதன்மேல் மநம் ஸ்திரப்படுகிறது.

பூரகம், கும்பகம், பின்பு ரேசகம் என்ற முறை மற்றொன்று. அது இந்த விடத்திற் சொல்லவில்லை. கீதை 6-ம் அத்தியாயம் பார்க்க.

35. விஷயவதீ வா ப்ரவ்ருத்திருத்பந்நா மநஸஃ ஸ்திதிநிபந்தநீ॥

அல்லது விஷயங்களை ஆசிரயித்த பிரவிர்த்தியானது மநத்தை அசையாமல் கட்டுப்படுத்தும்.

குறிப்பு:—விசேஷமான இந்திரிய சக்திகளை உண்டுபண்ணக்கூடிய மூக்கு நுனிமுதலிய ஸ்தாநங்களில் சித்த ஐகாக்ரிய முறைகளை நாடுதல், யோகமுறையில் நன்னம்பிக்கையை யுண்டுபண்ணும். அப்படிச் செய்வதால், தூரதிருஷ்டி, தூரக்கேள்வி, வாசனைப் பொருளின்றி நல்ல வாசனைகளின் அநுபவம் இவைபோன்ற சித்திகள் உண்டாகிறதினுல், யோகாப்பியாசத்தில் உண்மையான நம்பிக்கை ஏற்படும். அதனுல், தீவிரமான யோகமுயற்சி உண்டாகும்.

நாஸிகாக்கிரத்தில் மநத்தை நிறுத்தினுல் திவ்விய (சூக்ஷ்மமான) கந்தங்களின் அநுபவமும், நாக்கின் நுனியில் மநத்தைநிறுத்தித் தியாநம் பண்ணினுல் தாரணை, தியாநம், சமாதிமுறைகளை அப்பியஸித்தால் (இதுவே ஸம்யமம் என்றும் பெயர்பெறும்), திவ்விய ரசங்களின் அநுபவமும், தாலுவில் தியாநம்செய்தால் திவ்விய ரூபங்களின் அநுபவமும், நாவின் மத்தியில் தியாநம் செய்தால் திவ்விய ஸ்பரிசங்களின் அநுபவமும், நாவின் அடிமூலத்தில் தியாநம் செய்



தால் திவ்விய சப்தங்களின் அநுபவமும் உண்டாகும். இவ்விதமான அநுபவம் ஏற்பட்டால் ஸம்சயம் நீங்கி ஸ்தைர்யம் உண்டாகி சமாதிப்பிரஞ்ஞைக்கு துவாரம் (வழி) உண்டாகும். முன் சொன்ன தியாந மானது சந்திரன், சூரியன், கிரகங்கள், ரத்நங்கள், தீபம், மணி, முதலியவைகள் மேலும் நிகழலாம். அதனுல் மேற்கண்டபடி சமாதி பிரஞ்ஞைக்கு வழி ஏற்படும்.

சாஸ்திரததினுலும், அநுமாநத்தினுலும், குருஉபதேசத்தாலும் தெரிந்த விஷயம் அவன் அவன் ஸ்வந்த அநுபவமில்லாவிடில் பரோக்ஷமாகவேயிருக்கும். அதனுல் மோக்ஷம் முதலிய சூக்ஷ்ம விஷயங்களில், உண்மையான ஸ்திரமான நம்பிக்கை உண்டாகிறதில்லை. யாதேனும் ஒரு சூக்ஷ்மமான விஷயத்தில் பிரத்தியக்ஷமான அநுபவம் ஏற்படுமாகில் சாஸ்திரம், அநுமாநம், குருஉபதேசம் இவைகளால் தெரிந்துகொண்ட ஞாநம் ஸ்திரப்படுகிறது. அதனுல் மோக்ஷம் வரையுள்ள மற்ற சூக்ஷ்மமான விஷயங்கள் உண்மையென நம்பிக்கை உண்டாகிறது. இதனுல் தான் மநத்திற்கு ஸம்ஸ்கார அப்பியாஸ முறைகள் சொல்லப்படுகின்றன. விர்த்திகள் நாநாவிதமாக மாறிக்கொண்டிருக்கின்றமையால் விர்த்திகள் ஓடுங்கும் பொருட்டு அநேக அப்பியாஸங்கள் இப்போது சொல்லப்படுகின்றன. அந்த அப்பியாஸம் பிரயோஜநப்படவேண்டுமானுல், அதாவது மநத்தின் ஸ்திரமான நிலை உண்டாகவேண்டுமானுல், அப்பியஸிக்கப்படும் முறையைத்தவிர மற்ற விஷயங்களில் வைராக்கியம் வேண்டும். அந்த வைராக்கியத்தை வசீகாரம் எனச் சொல்லுகிறது.

36. விஶோகா வா ஜ்யோதிஷ்மதீ॥

அல்லது, துக்கமில்லாமல், ஜோதிஸை (மநத்தின் ஸ்த்வ பாவத்தை) ஆசிரயித்த பிரவிர்த்தி (மநத்தை அசையாமல் கட்டுப்படுத்தும்.)

குறிப்பு:—ஹிருதய புண்டரீகத்தில் மநத்தை நிறுத்தி, தாரணை தியாநம், ஸமாதி கொள்ளுகிறவனுக்கு புத்தி நிர்மலமாகவும் ஆகாசம் போல் எல்லாவற்றிலும் வியாபிக்கும் இயல்பினதாகவும் ஆகிறது.

ஹிருதய புண்டரீகத்தில் ஒரு சக்ரம் உள்ளது. அது 8 தளமுள்ளது. அது அதோமுகமானதாக இருக்கிறது. பிராணுயாமத்திஞல் ஊர்த்துவமுகமாகத் திருப்பி, அதில் மநத்தை நிறுத்தவேண்டும். அதன் மத்தியில் சூரியமண்டலம் ஜாக்கிரதாவஸ்தையின் இருப்பிடமும் அகாரம் என்ற அக்ஷரமும், அதன் மேல் சந்திரமண்டலம் ஸ்வப்நாவஸ்தையின் இருப்பிடமும் உகாரம் என்ற அக்ஷரமும், அதற்கும் மேல் அக்நிமண்டலம் சுஷுப்தி அவஸ்தையின் இருப்பிடமும் மகாரம் என்ற அக்ஷரமும், அதற்கும் மேல், பரவியோம ஸ்வரூபம் துரீய அவஸ்தை பிரஹ்ம நாதம் என்று சொல்லப்படும் அர்த்த மாத்திரையும் இருக்கின்றன. அந்தத் தாமரையின் கர்ணிகையில் ஊர்த்துவமுகமான பிரஹ்ம நாடி இருக்கின்றது. அது சூரியாதி மண்டலங்களின் மத்தியில் பிரவேசிக்கிறது. அதற்கு மேல் போய்க்கொண்டிருக்கிறது ஸுஷும்நா நாடி. அது வெளியிலுள்ள சூரியமண்டலங்களைத் தாண்டிப்போகின்றது. அது தான் மநத்தின் ஸரியான ஸ்தாநம். அதில் தாரணை, தியாநம் செய்தால், சித்தஸம்வித் உண்டாகிறது. வஸ்துக்களின் உண்மையான நிலை(Thought Forms)யின் சாக்ஷாத்காரம் பெறுகிருன். அந்த ஸ்தாநத்தில் மநம் நிற்பதிஞல் சூரியன், சந்திரன், கிரகங்கள், ரத்நங்கள் இவைகளின் தேஜோரூபங்களாக நாநாவிதமாகத் தோன்றுகிறது. அதாவது அந்த மநம் அந்த ரூபங்களாக ஆகிறது. ஸுஷும்நா நாடியை ஆசிரயித்திருக்கின்றமையால், இந்த மநஸ் ரஜஸ், தமஸ் இரண்டும் குறைந்தும் சத்வம் மேலிட்டும் இருக்கின்றது. அதஞல் அந்த நிலை ஜோதிஷ்மதீ (ஜோதிஸை உடையது) என்று சூத்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

முன்னே சொல்லியபடி விஷயங்களில் சம்பந்தம் பெற்றது போல, அஸ்மிதையில் (நான் இருக்கிறேன் என்ற பாவம்) ஏகாக்கிரதை பெற்ற மநஸ் ஆனது அலையற்ற சமுத்திரம் போலவும், சாந்தமாயும், (ரஜஸ், தமஸ் அற்றதாயும்) எங்கும் வியாபகமுள்ளதாயும், நான் என்ற சுத்தப் பிரஞ்ஞைமாத்திரம் உள்ளதாயுமிருக்கின்றது. இவ்விதமாகவே சாங்கிய சூத்திர வியாக்கியாதாவான பஞ்சசிகாசாரியாரும் சொல்லுகின்ருர்.



விஷயங்களை ஆசிரயித்து நிகழும் பிரவிர்த்தியும், அஸ்மிதையை ஆசிரயித்த மநப் பிரவிர்த்தியும் ஜோதிஷ்மதீ எனப் பெயர் பெறும். இதஞல் யோகியின் மநம் ஸ்திரமான நிலையை யடைகின்றது.

37. வீதராகவிஷயம் வா சித்தம்॥

அல்லது ஆசைவிட்ட மஹா புருஷர்களை மநம் விஷயீகரித்தலிஞல் (அது ஸ்தைர்யம் பெறும்.)

குறிப்பு:—ஆசைவிட்டவர்களான வியாஸர் முதலிய மஹர்ஷிகளின் குணங்களைத் தியாநித்தல் வேண்டும். அவர்களின் மநோநிலையைத் தியாநித்தலால் அந்நிலையை, அப்பியாஸம் செய்கிற யோகி பெறுகிருன்.

38. ஸ்வப்நநித்ராஜ்ஞாநாலம்பநம் வா॥

அல்லது ஸ்வப்நத்திலும் நித்திரையிலும் ஏற்படும் ஞாநத்தை ஆசிரயித்துத் தியாநிப்பதால் மநம் நிலை பெறும்.

குறிப்பு:—(1) வேறு ஒரு அர்த்தம் "அல்லது ஸ்வப்நத்திலும் நித்திரையிலும் ஞாநம் நழுவாது வைத்துக்கொளல்." என்பதாம். ஜாக்கிரதையினின்று ஸ்வப்நத்திற்குப் போகும்போதும், ஸ்வப்நத்தினின்று சுஷுப்திக்குப் போகும்போதும் நான் என்ற பிரஞ்ஞையின் தொடர்பு அற்றுப்போகிறது. அத்தொடர்பு அருமல், பிரஞ்ஞை நிலைத்தல் வேண்டும். அற்றுப்போகும் நிலையை பாழ் என்று சொல்லுகிறது. அப் பாழைத் தாண்டுதலுக்கு முயலவேண்டும். இது தான் இந்த சூத்திரத்தின் தாத்பரியம். நினைவிற்கும் கனவிற்கும் மத்தியில் ஒரு பாழ், கனவிற்கும் சுஷுப்திக்கும் மத்தியில் ஒரு பாழ், சுஷுப்திக்கும் துரியத்துக்கும் மத்தியில் ஒரு பாழ், ஆக முப்பாழ்கள், அதாவது லய ஸ்தாநங்கள் உண்டு.

(2) இந்திரியங்களுக்கு விஷயங்கள் இல்லாமலும், மநஸ் ஆனது வாஸநாரூபமான விஷயங்களை அநுபவிக்கும் ஸமயம் ஸ்வப்

நமாம். நித்திரையின் லக்ஷணம் முன் 10-ம் சூத்திரத்திற் கண்டு கொள்க.

(3) ஸ்வப்நத்தில் யாதேனும் ஒரு தேவதை அல்லது மஹா புருஷர் அல்லது உயர்ந்த பாவம் தோன்றும் பக்ஷத்தில் நினைவில் அந்த தேவதை, அந்த புருஷன், அந்த உயர்ந்த பாவம் இவைக ளின்மேல் மநத்தை நிறுத்தினால், மநம் ஒருமுகப்படும். யோகி ஸ்தைர்யம் பெறுவான்.

(4) ஸுஷுப்தியின் ஞானம்:—ஸாத்விக ஸுஷுப்தியின் ஞானம், "சுகமாய்த் தூங்கினேன்" என்ற மட்டில்தான் ஸ்மிருதி நினைவில் உண்டாகும். அந்நிலையில் (சுகம் அநுபவித்த நித்திரை சமயத்தில்) மநம் தன் நிலையிலிருக்கும். அதுவே ஏகாக்ரமான நிலை. பிரஹ்மவித்துக்கள் அந்த ஸுஷுப்தி சுகத்தையே பிரஹ்ம ஸ்வரூபம் என்கின்றார்கள், சாந்தோக்கிய உபநிஷத்தில் ஸுஷுப்தியின் விசாரணையைப்பற்றிய விஷயம் இங்கு கவநிக்கத்தக்கது.

39. யதாபிமதத்யாநாத்வா॥

அல்லது எது உனக்கு நலமெனப்படுகிறதோ, அதின் மேல் தியாநித்தலினால்.

குறிப்பு:—எது பிரியமாகவிருக்கிறதோ, அதன்மேல் மநம் நிற்பதாகும். அதனால் ஐகாக்ரியம் சித்திக்கும். தேவதையைத் தனக்குப் பிரியமான ரூபமாகத் தியாநித்தலினால், மநம் ஸ்தைர்யம் பெறும்.

40. பரமாணு பரமமஹத்த்வாந்தோऽஸ்ய வஶீகார:॥

(இவ்விதமாய்த் தியாநிக்கின்ற யோகிக்கு) பரம அணு முதல் பரம மஹத் வரையில் உள்ள எல்லாம் ஸ்வாதீநப்படும்.

குறிப்பு:—மேற்கண்ட உபாயங்களினால், யோகியானவன் ஸ்தூலவஸ்து முதல் வர வர மஹா ஸூக்ஷ்மவஸ்து வரை தியாநம் செய்யும்படியான திறமையும் சூக்ஷ்ம வஸ்து முதல் மஹா ஸ்தூல



வஸ்து வரை தியாநம் செய்யும்படியான திறமையும் பெறுதல் கூடும். இதில் எவ்விதத் தடையும் கிடையாது. இந்நிலையைப் பெற்ற யோகியானவன், ஐகாக்ரியத்தின் பூர்ணத்திறமையைப் பெறுகிறான். இனி அவ்விஷயத்தில் பழக்கம் வேண்டுவதில்லை.

41. க்ஷீணவ்ருத்தேரபிஜாதஸ்யேவ மணேர்க்ரஹீத்ருக்ரஹணக்ராஹ்யேஷு தத்ஸ்ததஞ்ஜநதா ஸமாபத்தி:॥

இவ்வித அப்பியாசத்தால், மநோவிர்த்திகள் க்ஷீணமாகியிருக்கின்ற யோகியின் மநஸ் அஸ்மிதையையும் இந்திரியங்கள், விஷயங்கள் இவைகளுடன் ஏகீ பாவத்தையும் அடையும். நிர்மலமான ஸ்படிக மணியைப் போன்றதாகும்.

குறிப்பு:—ஸ்படிக மணியின் ஸமீபத்தில் செம்பருத்தியின் புஷ்பத்தை வைத்தால் அதன் நிறம் அம் மணியில் தோன்றிடும். அது போல யோகியின் மநம் நிகழும். விர்த்திகள், சாத்விக, ராஜஸ, தாமஸம் என மூன்று விதங்கள். ராஜஸ, தாமஸ விர்த்திகள் மாத்திரம் க்ஷயத்தை அடைகின்றன. சாத்விக விர்த்தி இருக்கின்றது. சாத்விக விர்த்தி நிகழ்நிலைத்தான் மநம் அந்தர்முகப்படுகிறது என்று சொல்லுகிறது. மற்ற இரண்டு விர்த்திகள் (ராஜஸ, தாமஸம்) பகிர்முகமானவை. முதன்மையில் இவ்விரண்டு வித விர்த்திகள் அடங்கி, மநம் அந்தர்முகப்படும், சாத்விக விர்த்தி மாத்திரம் நிகழும். பின்பு, இவ்விர்த்தியும் ஒடுங்கும். ராஜஸ தாமஸ விர்த்திகள் நிகழும் காலத்தில் மநம் மலிநமாக விருக்கும். இவை நீங்கி ஸாத்விக விர்த்தி அதிகப்படவே, மநம் ஸ்படிகம்போல் நிர்மலமாக இருக்கும். அப்போது எந்த வஸ்துவுடன் மநம் ஸம்பந்தப்படுகிறதோ, அந்த வஸ்துவின் தன்மையாக ஆகிவிடுகிறது.* அது ஓர் நிலைமை. மநஸ் ஆனது விஷயங்களுடன் சம்பந்திக்காமல், இந்திரியங்களுடன் மாத்திரம் சம்பந்தித்து, இந்திரியங்களை விஷயமாகக்கொள்ளும் நிலைமை இரண்டாவது. † மநம் பிரமாதாவுடன் (ஆத்மாவுடன்) சம்பந்தித்தல் மூன்றும் நிலைமை. இதற்கு கிரஹீதிருஸமாபத்தி என்று பெயர்.

* இதற்கு கிராஹ்யஸமாபத்தி என்று பெயர்.

† இதற்கு கிரஹணஸமாபத்தி என்று பெயர். கிரஹணம் என்றால் இந்திரியங்களுக்குப் பெயர்.

கிரஹீதிரு என்ருல் கிரஹிக்கிறவன், அதாவது ஆத்மா என்றர்த்தம் ஸமாபத்தி=தந்மயமான பரிணமம். தன்னிடத்தில் உள்ள ஆத்மா வினிடம் தந்மயப்படுதலைத் தவிர, முக்தர்களான சுகர், பிரஹ்லாதர் முதலானவர்களிடம் மநத்தை ஒரேபிடியாய் நிறுத்தலும் இந்த ஸமா பத்தியிலடங்கும்.

42. தத்ர ஶப்தார்த்தஜ்ஞாநவிகல்பை:
ஸங்கீர்ணா ஸவிதர்கா ஸமாபத்தி:॥

மேற்கண்ட ஸமாபத்திகளுக்குள், சப்தம், அர்த்தம், ஞாநம் இவை களுடன் கலந்து நிகழும் ஸமாபத்தியானது ஸவிதர்க்க ஸமாபத்தி என்று பெயர் பெறும்.

குறிப்பு:—41-ம் சூத்திரத்தில் ஸமாபத்தியின் பொதுவான லக்ஷணம் சொன்னர். இந்த சூத்திரம் முதல் 44-ம் சூத்திரம் வரை யில், ஸமாபத்தியின் விசேஷ லக்ஷணங்கள் சொல்லப்படுகின்றன. உதாரணமாக இந்த ஸமாபத்தியில் "பசு" என்ற பதம், அதன் பொருள், அதன் ஞாநம், இவை தியாநத்தில் கலந்து நிற்றலாகும். இது திரிபுடி நிகழும் நிலை. அதாவது மநோவிர்த்தியானது மேற்கண்ட மூன்றிலும் சம்பந்தப்பட்டிருக்கும். பதத்தையும் ஞாநத்தையும் விட்டு பொருள்மாத்திரத்தில் மநம் தனித்து நின்ருல், அத்துடன் ஒன்றுபட்டால், அது நிர்விதர்க்க ஸமாபத்தி என்று சொல்லப்படும். அதாவது இதில் சப்தத்தினுடைய ஸங்கேத ஞாநமும், அநுமாநத் திற்கு ஸாதநமான ஸ்மரணமும் விலகும்போது, மநம் அர்த்தத்தில் மாத்திரம் நிற்கும். இந்த நிர்விதர்க்க ஸமாபத்தியில் உண்டாகின்ற வஸ்து ஞாநமானது யோகிக்கு உண்மையான பிரத்தியக்ஷப் பிரமா ணமாகிறது, இப்பிரமாணம், சப்தம், அநுமாநம் என்ற பிரமாணங் களுக்குக் காரணமாக இருக்கின்றது.

43. ஸ்ம்ருதிபரிஶுத்தௌ ஸ்வரூபஶூந்யேவார்த்தமாத்ர
நிர்பாஸா நிர்விதர்கா ॥

ஸ்மிருதி போயும், நான் என்ற பிரஜ்ஞை அற்று இருக்கிறது போல வும் (தியாநம் பண்ணப்படும்) வஸ்து மாத்திரமாக மநம் நிற்கும் நிலைமை யானது, நிர்விதர்க்க ஸமாபத்தி எனச் சொல்லப்படும்.

---


**Registered No M. 878.**


# பூர்ணசந்திரோதயம்.

சென்னை ராஜதானியின் தென்பாகத்திலுள்ள
பிரஹ்மஞானக் கிளைச்சங்கங்களின் மஹாசபையின்
ஆதரவின்மேல் மதுரையில் பிரசுரமாகி நடைபெறும்

**மாதாந்தத் தமிழ்ப்பத்திரிகை.**


தொகுதி 2 } 1911ளு டிசம்பர்மீ 15உ
விரோதகிருதுளு கார்த்திகைமீ 30உ } பகுதி 8.



ப. நாராயண ஐயர், B. A., B. L., F. T. S.
அ. ரங்கஸ்வாமி ஐயர், B. A., B. L., F. T. S. } பத்திராதிபர்.



வருஷ சந்தா ரூ. 2. தனிப்பிரதி அணா 4.

மதுரை:
விவேகபாநு அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றது.

## பொருளடக்கம்.


| | | பக்கம். |
|---|---|---|
| டில்லிமாநகரில் மாட்சிமைதங்கியசக்கரவர்த்தி அவர்களின் பட்டாபிஷேகம். | பத்திராதிபர். | உ௬௫ |
| மாட்சிமைதங்கிய ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் பட்டாபிஷேகமும், டில்லிதர்பாரும் | பி எஸ். சுப்பிரமணிய ஐயர். | |
| முடிசூட்டு வாழ்த்து—எஸ். சாமிநாதையர். | | உ௬௮ |
| சீக் மடங்கள்—ஆர். வ. சாஸ்திரி. | | உ௭௩ |
| 'ஹிந்து' என்பவன் எவன்?—ப. நா. | | உ௭௭ |
| ஸங்மார்க்கமுறையும் ஸம்ஸாரியும்—ப. நா. | | உ௮௦ |
| புத்தக வரவு, | பத்திராதிபர். | உ௯௦ |
| சமாசாரம் | | உ௯௪ |
| பதஞ்சலிமகரிஷி அருளிச்செய்த யோகசூத்திரம். | | |


---

*Supplement to the " Poorna Chandrodayam "*



மாக்ஷிமை தங்கிய
ஐந்தாம் ஜார்ஜு சக்கரவர்த்தி.



அன்பின் வழியது
என் அரசியல்



மாக்ஷிமை தங்கிய
மேரி சக்கரவர்த்தினி.

MADRAS : THE GUARDIAN PRESS, MOUNT ROAD




# பூர்ணசந்திரோதயம்.

தொகுதி 2 { 1911ஞ டிசம்பர்மீ 15௳ / விரோதகிருதுஞ கார்த்திகைமீ 30௳ } பகுதி 8.

## டில்லிமாநகரில் மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியவர்களின் பட்டாபிஷேகம்.

மாட்சிமை தங்கிய ஐந்தாம் ஜார்ஜு சக்கரவர்த்தி அவர்களும், சக்கரவர்த்திநீ மேரி அம்மை அவர்களும் நாளிது டிசம்பர்மீ 12௳யில் டில்லிமாநகரில் மகுடாபிஷேகம் பெற்றார்கள். இந்த வைபவம் விமரிசையாயும், குதூகலத்துடனும், பரமேசுவரனின் பூர்ணமான கடாக்ஷவீக்ஷணத்தின் அருளால் சூக்ஷ்மபூமிகளில் தேவர்கள் சாந்நித்தியத்துடனேயும் பலதேச முடிமன்னர்களும் அவர்கள் பிரதிநிதிகளும் சூழவும், அளவிறந்த பிரஜைகள் நிற்கவும், நடைபெற்றது. இந்த உயர்நலம் அமைந்த உத்ஸவத்தின் விவரணங்களை வெளியிட வார்த்தைகள் சக்தியற்றன; மாற்றம்கடந்த காட்சி இது. இதுகாறும், உலகம் தோன்றிய காலமுதல், புராண வாயிலாகவும், சரித்திர வாயிலாகவும் நாம் தெரிந்துகொண்டமட்டில், நடைபெறாத ஸம்பவம் இது. இந்தியா தேசம் முழுமையும் ஒரே குடையின் கீழ் இதுவரை ஒருங்கே சேர்க்கப்பெற்று இருந்திருப்பதில்லை. இப்போது மகுடாபிஷேகம் பெறும் நமது சக்கரவர்த்தியின் ராஜ்யம், மிகப்பெரிதானது. இதற்கு முன்னர் இவ்விஸ்தீரணமான ராஜ்யத்தைப் பரிபாலநம் செய்யும்படியான பாக்கியத்தை ஒரு சக்கர

வர்த்தியும் பெற்றூர் இல்லை. ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியும், ஸ்ரீ தர்ம புத்திரரும் அரசாண்ட ராஜ்யம் நம்முடைய இந்தியா தேசத்தின் ஒரு பாகம்தான். பெரும்பான்மையான பாகம் பல தனியான சிற்றரசர்களுடைய சுவாதீநத்தில் இருந்தது. கார்தேஜ் ராஜ்யம் என்ன, கிரேக் ராஜ்யம் என்ன, ரோமாபுரி ராஜ்யம் என்ன, பின்னர் சமீபகாலத்தில் நடைபெற்ற, ஸ்பானியா ராஜ்ய மென்ன, இவை எல்லாம், பிரகிருத பிரிடிஷ் ராஜ்யத்தை நோக்க, அற்பமானவைகளாகவே தோன்றும். இந்த ராஜ்யம் சூரிய அஸ்தமநமே நேரிடாதபடி உலகம் முழுமையும் பரவியிருக்கின்றது. உத்தர துருவத்திலும், தக்ஷிண துருவத்திலும் கூட இந்த ராஜ்யத்தின் தீபங்கள் இருக்கின்றன. இந்த இராஜ்யத்தினது விஸ்தீரணம் பூமியின் மேற்பரப்பின் ஐந்தில் ஒரு பாகத்திற்கு அதிகமானது; ஒரு கோடியே பன்னிரண்டு லக்ஷம் சதுரமைல் அளவுள்ள ராஜ்யம் இது. நிலவளம், மழைவளம், மலைவளம், நீர்வளம், பொருள்வளம், எல்லாம் பூர்ணமாய் அமையப் பெற்றதாய் உள்ளது. உலகத்தில் 180 கோடி ஜநங்கள் வஸிக்கின்றூர்கள். இந்த பிரிடிஷ் ராஜ்யத்தில் மட்டும் 41 கோடி ஜநங்கள் வஸிக்கின்றூர்கள். அவர்களில், 31 கோடி ஜநங்கள் நம்முடைய இந்தியா தேசத்தில் வஸிக்கின்றூர்கள். உலகில் உலாவும் எல்லாப் பாஷைகளும், இந்த ராஜ்யத்தில் நடைபெறுகின்றன. நமது இந்தியா தேசத்தில் மாத்திரம் 147, வித்தியாஸமான பாஷைகள் வழங்கிவருகின்றன. அவைகள் எல்லாம் பெரும்பாலும் இரண்டு பெரிய பாஷை வர்க்கங்களில் அடங்கும். ஸம்ஸ்கிருதத்தினின்று உண்டானவை எல்லாம் வட இந்தியாவிலும் மேற்கு இந்தியாவிலும், திராவிட பாஷைகள் எல்லாம் தென்னிந்தியா கிழ் இந்தியாவிலும் வழங்கி வருகின்றன.

இவ்விதமான ஐசுவரியம் பொருந்திய ராஜ்யத்திற்குப் பிரதாந பட்டணம் லண்டன்மாநகர். இது நமது இராஜ்யமாகிற லக்ஷ்மிக்கு ஒரு நேத்திரமாக விளங்குகிறது. அதற்கு மற்றொரு கண் இன்றியமையாதது. இதுகாறும் மங்கலாக விருந்தது. இப்போதுதான் அது பிரகாசித்தது. அஃது ஆதி குருக்ஷேத்ரமாகிய ஹஸ்திநாபுரம் என்ற டில்லிமாநகரம். "தர்ம க்ஷேத்திரம் இது."



மஹாத்மாக்களின் அநுக்கிரகம்பெற்ற ஸ்தாநம் இது. இப்புண்ணிய பூமியில் மாட்சிமை தங்கிய ஜார்ஜ் ௫ என்பார் பட்டாபிஷேகம் பெற்றூர். இது நம் தேசத்தின் இனிவரும் நற்காலத்தைச் சூசிப்பிக்கின்றது. இந்த உத்ஸவத்தின் மூலமாய், நம் தேசம் நலம் பெறுவதுடன், உலகமெங்கும் எல்லா நலமும் உண்டாகும்.

நமது சக்கரவர்த்தி அவர்கள் "அன்பின்வழியது அரசுமுறை" என்பதாக ஒரு சபையில் பிரஸ்தாபித்தார்கள். அதுவே அவரது குலவிருதாம். இவர்களுடைய பிதாமகியாகிய நம்முடைய உலகமாதாவாகிய விக்டோரியா மஹாராணி அவர்கள் இத்தேசத்தின் நேரான ஆளுகையைத் தாம் வகிக்கப் புகுங்காலத்தில் சொன்ன திவ்வியமான உயர்நலம் அமைந்த மொழிகள் சந்திர சூரியர்கள் உள்ளமட்டும் உலகில் தங்கும் இயல்பின. "நம்முடைய பிரஜைகளின் சுகிருதமே நமது பாக்கியம்." என்றூர். அவர்களின் திருக்குமாரரான எட்வார்டு சக்கரவர்த்தி அவர்களும், தம் தாயாரின் அத்திருவாய்மொழிகளைச் சிரமேற்கொண்டு நம் தேசத்திற்கு அன்பும் ஆதரவுமாக இருந்தனர். அவர்களின் புதல்வராகிய மாட்சிமை தங்கிய நம்முடைய ஜார்ஜ் ௫ சக்கரவர்த்தி அவர்களும் குல தர்மத்தை அநுஸரித்தவராக "அன்பின்வழியது அரசியல்" என்ற செங்கோல் முறைமை நடத்துவார். அவ்விதம் நடத்த வலிமையையும் குறைவில்லாத சக்தியையும், தீர்க்க ஆயுளையும், அவர்களுக்கு எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக.* எல்லா மங்களங்களும் உண்டாவதாக. இவருடைய ராஜ்யத்தில்,

"வன்பெரு வானக முய்ய அமரருய்ய
மண்ணுய்ய, மண்ணுலகில் மனிதருய்ய,
துன்பமிகு துயரகல, அயர்வொன்றில்லாச்
சுகம்வளர அகமகிழும் தொண்டர் வாழ".—பெருமாள் திருமொழி.

என இறைவனைப் போற்றுவாம்.

வாழ்க அந்தணர், வானவர் ஆனினம்,
வீழ்க தண்புனல், வேந்தனும் ஓங்குக,
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.—ஸ்ரீ ஞானசம்பந்தர்.

பத்திராதிபர்.

---

* இந்தப் பத்திரிகை ஜநித்த காலமும் நமது சக்கரவர்த்தியின் ஆளுகை ஆரம்பித்த காலமும் ஒன்றே.

# மாட்சிமைதங்கிய ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் பட்டாபிஷேகமும், டில்லி தர்பாரும்.

பூமேவு பல்லுயிர்க ளூனமற மேன்மையொடு பொருந்தி வாழ
நாம்வாழ நாடனைத்தும் வாழவுல கெங்குமுயர் நடுவு வாழ
மாமாது மகிழ்ந்தொருகாற் றிங்கள்குல மன்னர்முடி மருவி வாழ்ந்த
சீமேவு மத்தினமா நன்னகரிந் நாள்வாய்ந்த சிறப்பைக் கேண்மின். (1)

தேவகியும் கோசலையும் போன்றமர்ந்த விக்டோரியாச் செல்வி யீன்ற
பூவலனே ழாம்எட்வர்ட் புண்ணியவான் பெற்றவரும் புதல்வ னிந்நாட்
காவலனைந் தாம்ஜார்ஜென் கண்மணிவிண் ணோர்வியந்து களிக்க வன்பாய்
மேவிடில்லி மாநகரில் பொன்மகுடம் பூண்டவுயர் விந்தை யென்னே. (2)

ஞாலமிசை வெற்றிபுனை மன்னரெலாம் கைகூப்பி நயந்து போற்றச்
சாலநிதி யம்பெருகும் செல்வரும்வந் தானவுயர் சபைமீ தார்ந்த
சீலமுடை னைந்தாம்ஜார்ஜ் மன்னர்மணி பட்டாபி ஷேகம் பூண்ட
கோலமதைக் கண்ணுறவா யிரம்விழிபோ தாவெனவே கூறல் நேராம். (3)

நம்மரசன் முடிபூண்ட நாட்புனித நாட்குருதன் நட்பு வீடாம்
செம்மைநிறை விருச்சிகத்தி லேபரிதி புந்தியுடன் சேர்ந்து லாவ [கப்
விம்முமிட பத்திருந்தன் ஞேரையும்சிங் கத்தையுஞ்சேய் விரைந்து நோக்
பம்மலறு மாதிரைசேர்ந் திவ்வுலகம் மோதமுறப் பலித்த நாளே. (4)

அந்தநா ளேசுபிறந் திருபத்தாம் நூற்றுண்டி லேந்தோ டாறாய்
வந்தவரு டம்டிசம்பர் மாதமதில் ஏழாநாள் மற்று மீரா
றுந்துதினம் கூடுவிரோ திகிர்தாண்டில் தேளிலினன் உலவு மாதத்
தந்தமொடு குருவாரம் சேய்வார மிருநாளி லமர்ந்த தன்றோ. (5)

வேறு.

இம்முறை நிகழ்ந்த வண்ணம் இனிஇந்த நாட்டிற் கெல்லாம்
உய்ம்முறை யல்லால் மற்றோர் துயர்முறை யுறுவ துண்டோ
நம்முயி ரெல்லா மோம்ப நாடிநந் நாடு வந்து
செம்மையாய் ஜார்ஜ் மன்னன் திகழ்முடி தரித்த லாலே. (6)

பண்டைநாட் பெருமை மிக்க படர்குருட் சேத்ரந் தன்னில்
மண்டலம் புகழும் அத்தி னபுரி மகிழ்வுற் றோங்கக்
கண்டகண் களிக்க ஜார்ஜென் காவலன் மகுட மங்கு
கொண்டதிந் நாட்டின் க்ஷேமக் குறியெனத் துணிந்து சொல்வாம். (7)



மன்னவ ராணை போற்றும் மாண்புளார் நிறையும் பண்பால்
முன்னுயர் அரச நீதி முதிர்ந்தநன் னுடீ தென்று
மன்னிஅன் பாக டில்லி மாநகர் தன்னில் மன்னன்
துன்னுநன் மகுடம் சென்னி சூடிய தவற்கும் மேலாம். (8)

கதிரவன் மறையா தோம்பும் கண்ணகல் புவனம் தாங்கித்
துதிபெறு மாங்கி லேயத் துரைத்தனத் தார்க்கிந் நாடு
மதியிலை யொன்றில் லாத மாமணி யாதல் பற்றிப்
பதிபுனை முடிமேற் சூடும் அணியெனப் பலித்த தன்றே. (9)

ஒய்விலாத் திரிதல் வாய்ந்த உலகினில் முன்னாள் தொட்டுப்
பாயுநீர் நிறைந்த மத்யத் தரைக்கடல் பதவி மேலாய்த்
தாயவோர் பினிஷி யாக்ரீஸ் துலங்குரோம் ஒன்றின் பின்னென்
றுயுல காண்ட காலம் ஆனதிங் கறிவர் ஆரும் (10)

பின்னகல் அத்தி லாண்டிக் பெரியசா கரம்மாண் புற்றுப்
பன்னுயர், ஸ்பெயின், போர்ச்சுக்கல் பரிவுசேர் அமெரிக் காவின்
துன்னுயர் ஐக்ய நாடு தூயவங் கிலநா டோர்கால்
உன்னியொன் றோடொன் றோர்ப்பாய் உயர்வுற முயன்ற காலம். (11)

சென்றிட ஸ்பெயின், போர்ச்சுக்கல் தேய்வுற ஸ்பெயினு மந்நாள்
வென்றிடத் தொகுத்த ஆர்மே டாப்படை மெலிந்து வீய
இன்றுயர் ஐக்ய நாடும் இங்கிலாந் தரசும் வெற்றி
ஒன்றிடப் பொருது மேனும் அங்கில முயரு மன்றே. (12)

அங்கிலம் கடலுக் கெல்லாம் அரசியாய் அமையும் பண்பால்
மங்கிடா தவளே மேலாய் வளர்வுறு நாட்ட மேலாய்த்
திங்களும் கதிரு முள்ள நாளெல்லாம் திகழ்வு மென்னச்
சங்கையே தொருத்தி யாயித் தரணியை யாள்வ ளன்றோ. (13)

திண்ணமாய்ப் பனமாக் கால்வாய் திறந்திடில் பஸிபிக் ஆழி
தண்ணிலும் தரையின் மீதும் தலைமைவாய்ந் திடும்பின் ஜப்பான்
நண்ணுயர் ருஷ்யா ஐக்ய நாடு ஜர்மெனி ஆஸ்ட்ரேலியாக்
கண்ணலாம் இங்கி லாந்தன் றரசுறப் பொருது மம்மா. (14)

இவ்விதஞ் சிலநாட் போக இங்கிலாந் துலக மெல்லாம்
துவ்வியோ ராட்சி யாகத் துலங்கிநல் விசயம் பூணும்
ஒவ்வுறு மாங்கி லேய பாஷையே யுலக மெங்கும்
தெவ்வறப் பரவி மேலாய்ச் சிறந்திடும் திண்ணந் தானே. (15)

வேறு

இப்பு விக்கர சாயமை யிங்கிலாந்
தொப்பி லாப்புக ழொன்றிடப் பின்னரும்
எப்ப டித்தலே யாம்நகர் என்றுயாம்
செப்ப லாமெழில் லண்டனேத் திண்ணமாய். (16)

அந்த நன்னக ரந்தொலே யானதால்
இந்தி யாஇடை யேயமை வுற்றதால்
சந்த தம்புகழ் தாங்கிய டில்லியே
அந்த மார்தலே யாம்நக ராகுமே. (17)

என்று சம்பவம் இம்முறை யாகுமோ
அன்று தான்நமக் காம்தவத் தின்பயன்
வென்றி யாம்பெறு நாளது வேருேரு
நன்றி வேண்டுவ ரோசொலிந் நாட்டினர். (18)

டில்லி யென்னகர் தேவரும் யாவரும்
தொல்லே மன்னரும் எத்திடுந் தூய்மைசேர்
எல்லே யாந்தருட் சேத்திரத் தெய்தலால்
நல்ல மங்களம் பெற்றதிந் நாடெலாம். (19)

ஈசன் மெய்யரு ளாலெம தீந்தியா
மாசி லாப்புகழ் வாய்ந்திரு வையகம்
பேசு மோரர சாங்கப்பர விர்த்தியை
ஓசு மேவி நடாத்திடும் உண்மையே. (20)

ஐய மொன்றிலே யிவ்விதமா மெனத்
துய்ய நம்மர சன்சுப மாகநாம்
உய்ய டில்லியி லேமுடி யுற்றதே
எய்யுஞ் சூசக மாகுமி தற்கெலாம். (21)

வேறு

பின்னுமொரு சூசகந்தான் வேண்டலேனே
பேதமிலா வன்புமழை பெய்ந்திந்நாட்டிற்
கன்னேயுயர் விக்டோரியா யரசியான
ஆயிரத்தெண் ணூற்றைம்பத் தெட்டாம் ஆண்டில்



துன்னுவிளம் பரமொழியால் துயரம் போக்கித்
தோன்றுசுதந் தரம்நமக்குத் துலங்க நல்கிக்
கன்னனிகர் வாக்களித்த போதே நல்ல
காலமெமக் குற்றதெனக் கருதி னேமால். (22)

அன்றுமுதல் நமையாண்ட அருளாம் செல்வி
ஆயிரத்தெண் ணூற்றெழுபத் தேழா மாண்டில்
நன்றுதவச் சக்கரவர்த் தினியென் பட்டம்
நாடுவக்கத் தான்வகித்த நன்ஞளிந்தத்
தொன்றுபுக ழாரியநா டாங்கி லேயத்
தோடுகலந் தொருநாடாய்த் துலங்கி யென்றும்
மன்றலுற வோர்குடைக்கீழ் உயிரை எல்லாம்
வாழ்வுபெற வைத்தனளம் மலராள் போன்ருள். (23)

அவ்வருடம் டில்லிநக ரமைந்த மன்றில்
அன்பினெடு லிட்டனெனு மரிய கோமான்
செவ்விதழி நம்மரசி தன்க ருத்தைச்
செப்பிநம்மைத் தன்வயிற்றுச் சேய்க ளாகத்
துவ்விசையக் காப்பனெனத் துலங்கிச்சொன்ன
தூயவுப ந்யாசமுஞ்சு சகமாய் எங்கும்
தெவ்வறநன் ஞடுசெழித் திலகு மென்று
தேற்றமளித் திட்டதைநாம் தெரிந்தி லோமா. (24)

பின்வருமெ ழாம்எட்வர்ட் ப்ரபல பூபன்
பேருலகந் தாங்கவென ப்ருதிவி மன்னர்
முன்னரொரா யிரத்தொடுதொள் ளாயி ரத்து
மூன்ருமாண் டினில்மகுடம் முடித்த காலே
நன்னயமாய்ச் சொன்னசொலி னுறுதி யென்றும்
நாம்மறக்கற் பாலதுவோ நலமோ டன்னே
சொன்னஉயர் மாற்றமெலாம் நிலேநி றுத்தச்
சூழ்ந்துமொழிந் தானதுசு சகம்நன் கிற்கே. (25)

அத்தருணம் இப்பெரிய இந்து நாட்டை
ஆளரசுப் பிரதிநிதியா யமர்ந்த கர்ஸன்
புத்திவலி யோடெமது சக்ர வர்த்தி
புல்லுமெழில் வான்கருத்தைப் புகன்றிட் டேயாம்

நித்தமும்வாழ் வுறமொழிந்த வுபந்யா சத்தை
　　நெஞ்சமிசைத் தான்மறக்க நினையார் யாரும்
முத்தமழை பேய்ந்திடவிந் நாடு மேலாய்
　　மோதமுறு மென்பதற்கம் மொழியே சான்றும். (26)

இத்தனைக்கும் மேலாக விந்நாள் ஜார்ஜென்
　　எழிலரசன் முடிசூட விசைந்து லண்டன்
பத்தனத்தி லரசர்குழாம் பணிந்து கேட்கப்
　　பகர்ந்தளித்த வுபந்யாசம் பாலாய்த் தேனுய்ச்
சுத்தமுட னிந்நிலமும் உயிர்கள் யாவும்
　　சூழ்ந்தருந்து வானமுதாய்த் துலங்கி அன்னேன்
உத்தமனுய் அன்பினுரு வாயிந் நாட்டோர்
　　உய்யவருள் வானெனநல் லுறுதி செப்பும். (27)

செப்புமொழி தப்புறுமா திரைநீர் சூழ்நம்
　　தேசமுழு தும்செழிக்கச் சிதைவு ருத
நட்பினுட னுங்கிலரும் நாமு மோர்தாய்
　　நல்கியசகோதரராய் நறும்பால் தண்ணீர்
ஒப்பவுயர் ஐக்கியமா யுலகில் நோக்கம்
　　ஒன்றுபடத் தான்முயன்றே யுவந்திந் நாட்டில்
எப்பொழுதும் நற்சிறப்போ டினியாம் வாழ
　　ஈசனருள் வானெனப்பே சிடவே தையம்? (28)

வேறு

வாழ்க மன்னர் மரபினர் எங்கணும்
வீழ்க மாமழை வென்றிட நன்னெறி
தாழ்க நோவு சகந்தழைத் தோங்குக
சூழ்க மன்னன் சுகம்பெற யாருமே. (29)

கட்டளைக் கலித்துறை

நல்லார் உயர்ந்திட நந்நா டிலங்கிட நல்லெழில்சேர்
வில்லார் விஜய னிகர்ஜார்ஜு மன்னவர் மேன்மையொடு
பல்லாண்டு வாழப் பிணியற் றகலப் பகைவர்நைய
எல்லா முதவும் பரஞ்சுடர் தன்னை இறைஞ்சுவமே. (30

ஓம் தத் ஸத்.

பி. எஸ். சுப்பிரமணிய ஐயர்.

உ

# முடிசூட்டு வாழ்த்து.

## நிலைமண்டில ஆசிரியப்பா.

---

பூமலி தருக்கட் பொலிந்து விளங்கும்
காமலி நாடெனக் கண்டோர் வியக்கும்
பார்புகழ் நாடெம் பரதகண் டம்மே.
எண்ணரு பொருள்கள் எழில்பெற விளங்கும்
புண்ணிய நாடிது. புனிதநா டிதுவே.
இந்நாட் டருமை இயம்பக் கேண்மோ.
பவவினை நீக்கப் பகீரதன் புரிந்த
தவத்தாற் போந்து தருக்குற் றதனுல்,
சிவன்சடைப் பட்டவன் திருவரு ளாலே
புவன மெல்லாம் புனித மாக்குந்
தன்னுெப் பில்லாத் தகையுறு கங்கையும்,
உமையவள் தந்தையின் உத்தரீ யம்மெனப்
பேராறு சிந்துவும் பிரமபுத் திராவும்,
சீருற விளங்கச் சிகரங்கள் செறியச்
சிவபெரு மானது செழுஞ்சடை நிகர்த்துப்
பார்மீ துயர்ந்த பனிபடு நெடுவரை
நேர்வடக் கெல்லை நிகரதற் கெதுவே;
கன்னியா குமரிக் கடல்தெற் கெல்லை,
குணகுட வெலைகள் குளிர்திரைக் கடலே,
இந்நாட் டுருவம் எங்ஙனம் மொழிகோ,
இச்சகத் திதய எழிற்குறி யென்கோ?
முச்சக மெச்சும் அச்சுதன் நச்சிய
பாஞ்ச சந்நியப் படிவ மென்கோ?
முக்குணங் குறிக்கும் முத்திரை யென்கோ?
மும்மூர்த்தி விளக்கும் முதுக்குறி யென்கோ?
வஷிஷ்டர் நாரதர் வான்மீகி வியாசர்
அகஸ்தியர் முதலிய அருந்தவ முனிவரும்
அறுபத்து மூவர் ஆழ்வார் அடிகளும்
சித்தர் சமணர் புத்தர் குழாமும்

மும்மதம் நிறுவிய மூதறி வாளராஞ்
சங்கரர் உடையவர் மத்துவா சார்யரும்
முதலிய வித்தகர் முத்திநெறி காட்டி
நற்பதம் நல்கும் நன்னா டிதுவே.
உலகம் ஏத்தும் உயர்வட மொழியும்
நலப்பல சிறந்த நாட்டு மொழிகளும்
உலாவப் பெற்ற உத்தம நாடிது.
குவலயத் தோர்க்குக் குருவா யென்றும்
பவக்கடல் நீக்கப் பாங்காய் ஞானம்
புகட்டும் புனிதப் பொன்னா டிதுவே.
தரணி யோர்க்குத் தசாம்ச பின்னமும்
பீஜ க்ஷேத்திரப் பெட்புறு கணிதமும்
வானசாஸ் திரமும் வைத்தியசாஸ் திரமும்
முதற்கற் பித்த முனிவர் நாடிது.
மன்னுயிர் உய்ய மாயன் கீதை
கன்னற் சுவையெனக் கழறிய நாடிது.
இரும்புவி வியக்கும் இதிகா சங்கள்
அருங்கவி யாக யமைந்தநா டிதுவே.
ஏழெழுத் தினிலிசை யெல்லாம் அடக்கி
வாழும் உயிரெலாம் வயப்பட உருக்கும்
குழல்யாழ் கீதம் குடிகொள் நாடிது.
கவரியும் வேங்கையும் கஸ்தூரி மானும்
சந்தமுந் தேக்குஞ் சாந்தரு நாடிது.
சிற்ப வேலையிற் செழிப்புறு நாடிது.
பொன்னும் மணியும் பொலிவுறு நாடிது.
பேரொளிக் கோஹினூர் பிறந்தநா டிதுவே.
இன்ன நாட்டினை இகலுறு மன்னர்
சொன்னங் கருதிச் சூழ்ச்சியிற் றாக்கிப்
பன்னெடுங் காலம் படைகள் எடுத்தே
இன்னல் பலபுரிந் திழைத்தனர் ஈங்கே.
அந்நாள் மோகல் அரசர் ஆள
இந்நா டொருவா றேற்றம் பெற்றது.
ஆங்கிலர் முதலிய ஐரோப் பியர்பலர்



தூங்கும் நாவாய்த் துறைபல நாடிப்
பாங்காய் வாணிபப் பயனடைந் தனரே.
மற்றவை ரோப்பியர் மழுக்க மெய்த
ஆங்கிலர் ஒருவரே ஓங்க லுற்றனர்.
அவர்குல வணிகர் ஆளத் தொடங்கினர்.
வணிகர் சங்கம் வளமுறு நாளில்,
வித்தகர் புகழும் விக்டோ ரியத்தாய்
கானிங் பிரபுவின் கால மதனில்
ஏற்றனர் இந்திய எழிலர சாட்சியை
அவ்வர சாட்சியிற் றெவ்வர் நீங்கினர்.
எவ்வழி யாலும் இடர்பல நீங்கி
ஏற்றம் பெற்றுநாம் இனிதே வாழ்ந்தனம்.
உயிரும் பண்டமும் ஓம்பப் பெற்றன.
பயிரும் மணியும் பண்புற் றோங்கின.
ஒடுங்கா உள்ளத் தொன்னலர் ஒடுங்கினர்.
இருப்புப் பாதைகள் எழில்பெறச் சமைந்தன.
தந்தித் தபாலுந் தழைத்தினி தோங்கின.
கல்வியும் ஞானமுங் கனிநடம் புரிந்தன.
சம்பத் தொடுசமா தானமும் விளங்கின.
அன்னைவிக் டோரியா ஆண்டுபல ஆண்டனர்.
பின்னவர் புதல்வரிற் பெரியரா மெட்வேர்ட்
மன்னவ ராகி மாந்தர் புகழ
அன்னை காட்டிய அழகுறு நெறியில்
நன்னலம் நாம்பெற நாடர சாண்டனர்.
அவ்வர சாட்சியை அவரது புதல்வர்
ஐந்தாம் ஜார்ஜெனும் அன்புடை யரசர்
பைந்தொடி மேரியோடு பாங்காய் வகித்தனர்.
இவரெம் நாட்டின் இயற்கைநன் குணர்ந்தவர்.
நம்பொறை வணக்கம் நற்குணம் அனைத்தும்
கண்கூ டாகக் கண்டு களித்தவர்.
உன்னத குணத்தையும் உன்னி யுணர்ந்தவர்.
ஆங்கில அரசில்நாம் அடையு மகிழ்ச்சியை
ஐயந் திரிபற அகத்தினன் குணர்ந்தவர்.

அண்டர் புகழும் அணிபெரு நாட்டைக்
கண்டு குடிகள் கருத்துக் கியைய
அருளினைக் காட்டி யாளின் அவருளம்
அன்பால் அலருமென் றறிவித் தவரவர்
புண்ணிய நாடுசெய் புண்ணிய வசத்தால்
எம்பெரு நாட்டிற் கின்னருள் புரிய
எண்ணங் கொண்டே ஏகிநம் நாட்டில்,
திருமுகங் காட்டித் திருமுடி சூடிப்
பெருமகிழ் வளிக்கநாம் பெற்றபே றென்னே!
அன்னவர் அருளை யளவிட லரிதே!
சாலி வாகன சகாப்த மாயிரத்
தெண்ணூற்று முப்பத் திரண்டோ டொன்றினில்
பன்னிரு திங்களாம் பனிமிகு டிஸெம்பரின்
பன்னிரு நாளில் பன்னிரு மணிக்குப்
பரத கண்டத்தின் பழம்பதி டில்லியில்
முப்பத் திரண்டுசார் முக்கோடி ஜனங்கள்
எத்திசை யினுமே ஏத்திக் கைதொழ
மகுடவர்த் தனராம் மன்னவர் பலரும்
பட்டவர்த் தனரும் பாங்காய்ப் பணியப்
பல்லியங் கறங்கப் பன்முர சார்ப்பக்
கண்டோர் மனமுங் கண்ணுங் களிக்க
மன்னுயிர் மகிழ மகுடஞ் சூடினர்.
சார்வ பௌமராய் ஜார்ஜ்சக்ர வர்த்தியும்
ஆர்வம் நிறைந்த அணியிழை மேரிச்
சக்ரவர்த் தினியும் ஐயமுற வாழி.
வாழி யவர்குலம் வளமுற வாழி.
ஆங்கிலச் செங்கோல் அழகுற வாழி.
இந்தியா இங்கிலாந் தின்புற வாழி.
குடியும் படையுங் கூழும் அமைச்சும்
நட்பும் அரணும் நலம்பெற வாழி
சத்தியம் ஞானம் சமரச பாவம்
நித்திய மாகவே நிலைபெற வாழி
வாழிய நாடெலாம் வாழிய நலனே

எஸ். சாமிநாதையர்.

---

## சீக் மடங்கள்.

---

நம் பரதகண்டத்திலிருக்கிற அநேக மதங்களில் சீக் மதம் ஒன்று. இந்த மதஸ்தர்களுக்குப் பிரதானமான இடம் வட இந்தியாவுக்கு அமிருதஸார் என்ற நகரமும், தக்ஷிணத்திற்கு கோதாவரியின் வடகரையிலிருக்கிற நாந்தேர் என்ற நகரமுமாம். நாந்தேர் என்கிற பட்டணமானது ஸம்ஸ்கிருத பாஷையில் நந்திமுகமென்றும் கோதாவரியின் நாபிஸ்தானமாகவு மிருக்கிறது. கோதாவரி மாகாத்மியத்தில் ஒரு முக்கியமான தீர்த்தயாத்திராஸ்தலமாக இதைக் கூறியிருக்கிறது. இந்த இடத்தில் அந்த சீக் மதஸ்தர்களுடைய முக்கியரான இரண்டாவது காரணபுருஷராகிய குரு கோவிந்தஜீ யென்பவருடைய சமாதி யிருக்கிறது. இந்த இடமானது அம்மதஸ்தர்களுக்கு குரு பீடமாக வழங்கிவருகிறது. இதுவும் வடயிந்தியாவிலிருக்கிற அமிருதஸாரிலுள்ள கட்டிடத்தைப் போல் தங்கத் தகட்டால் சுவர்கள் அமைக்கப்பட்டிருக்கின்றது. இதில் நடைபெறுகிற பூஜையையும் இந்த இடத்தைக் காத்துவருகிற பீடாதிபதியையும் பற்றிச் சற்று ஆராய்வோம். இந்த பீடத்திற்கு அதிபதியாக வருகிறவரை அமிருதஸார் பீடத்தலைவரும் சீக் மதாபிமானிகளும் சேர்ந்து ஒரு நல்ல படித்தவரும் பிரஹ்மசரிய விரதம் பூண்டு தேர்ந்தவருமான ஒருவரைத் தெரிந்து எடுத்து, இவ்விடத்திற்கு அனுப்பவேண்டும். அவர் வந்தவுடன் அவரை இவ்விடத்திலுள்ளவர்கள் வருஷம் இரண்டுக்குக் குறையாமல் அவர் படிப்பு ஒழுக்கம் முதலானவைகளை நன்றாகச் சோதித்துத் திருப்தியடைந்தமேல் அவரைப்பீடாதிபதியாக நியமநம் செய்கின்றார்கள். அவர் வேலையாவது, அதிகாலையில் எழுந்திருந்து கோதாவரியில் ஸ்நானஞ் செய்து வெகு ஆசாரத்துடன் மடத்திற்கு வந்து தம் பூர்வீகர் செய்த கிரந்தங்களைப்படித்துப் பாராயணஞ்செய்துகொண்டு, பிறகு மூலஸ்தானத்திலிருக்கிற ஸமாதிக்குப்போய் எச்சில் விழாமலிருக்கும்படி வாயை வஸ்திரத்தினால் மூடிக்கொண்டு, பெருக்கிச் சுத்தம் செய்து ஷெ சமாதிக்குப் பூஜை முதலிய உபசாரங்கள் செய்து, வெண்சாமரம் போட்டுக்கொண்டிருக்கவேண்டியது. அந்த சமாதிஸ்தலத்திற்குள் இவரைத் தவிர வேறு ஒருவரும் பிரவேசிக்கக் கூடாது. இப்படிப் பத்துவருஷம் பீடத்திலிருந்து, பிற்பாடு இவ்விதமாக ஆநந்தமான

சரித்திரமென்றும், பாபமான லௌகிக சரித்திரமென்றும், சமய முறைக்கல்விப்பயிற்சி யென்றும், லௌகிகப் படிப்பென்றும் இவை போன்ற மொழிகள் வழங்குகின்றன. இம்மொழிகளால் ஜனங்களுடைய மநம் மதிமயங்கி, ஆன்ம விஷயத்தைப்பற்றியும் உலக விஷயத்தைப்பற்றியும் தப்பான அபிப்பிராயம் நிகழ்கிறது. சரியான அபிப்பிராயம் யாதெனில், ஆன்மாவென்றால் பிராணன். உலகமென்றால் உடல். உடலானது உயிரின் வெளித்தோற்றம். உயிரின்றிஉடல் சவமாகும். உடலின்றி உயிர் வாழ்வும் இயலாது. அதாவது உயிர் செயலற்றிருக்கும். இதைப்பற்றி விஸ்தாரமாக உண்மையான அபிப்பிராயங்களை உங்கள் முன்னர் தெரிவிக்கவேண்டுமென்று நான் கருதுகிறேன். உலகம் என்றால் ஈசுவர ஸங்கல்பம். ஈசுவரனுடைய மநத்தின் சங்கல்பரூபமாக உலகம் பரிணமித்துத் தோன்றுகிறது. பலனுள்ள எல்லாக் கிரியைகளும் ஈசுவரச் சங்கற்பத்தின் பல பரிணாமங்களாம். உலகமென்ற சக்கரங்களை ஈசுவரன் சுழலச் செய்கிறார். மனிதர்களோ, அச்சக்கரங்களின் விளிம்புகளை ஸ்பரிசிக்கும் அவரது கரங்களாம். உலகில் நடத்தப் பெறும் எல்லாச் செயலும் அவரது கர்மமாம். மனிதனுக்கு உதவிபுரியும் ஒவ்வொன்றும், உலகக்கிரியைகளைக் கொண்டுசெலுத்தும் ஒவ்வொன்றும் ஈசுவரனது கிரியையென்றறிதலே உண்மையான அறிவு. அப்படியில்லாமல் லௌகிகமானவைகளென்றும் பாபமானவைகளென்றும் பிறித்து மதித்தல் அறிவீனமாம். நாணயசாலையில் தொழில் செய்யும் பெரிய வியாபாரியும், பெட்டியடியிலிருக்கும் சிறு வியாபாரியும், வைத்தியசாலையில் தொழில் செய்யும் வைத்தியனும், ஆகாயத்தின்கண் வாநசாஸ்திரத்தைப்பயிலும் ஜோதிஷசாஸ்திரியும், ஞாநத்தைஉபதேசிக்கும் குருவைப்போலவே எல்லாருமீசுவரகைங்கர்யத்தில்ஈடுபெற்றவராவர். இவ்விதமாக உலகத்தில் நடைபெறும் தொழிலை யறியவேண்டும். உலகத்தொழிலைக்கீழ்க்கடையில்வைத்து மதித்தல் அறிவின்மையேயாம். ஒரேபிராணன் எங்கும் உளதென்றும், எல்லாவஸ்துக்களும் அந்தஒரேபிராணனின் அதிஷ்டாநத்தை உடையனவென்றும்நாமறியவேண்டும். இன்றேல்,நமதுமநோபாவத்தில்நாம்மோசம்போனவராவோம்; ஒவ்வொரு வஸ்துவினிடத்திலும் இயங்குகிற பிராணன்ஒன்றேயென்றும், எல்லா வஸ்துக்களும் அவ்வொரே பிராணனின் பல ரூபங்களென்றும் அறியும் திவ்ய ஞாநத்தைக் கிரஹிக்காமல் கண் குருடர்களாக நம்மையாக்கிக்கொள்வோம்.



4. ஈசுவரன் எங்கும் பரந்துளன், ஸர்வாந்தர்யாமி. நீங்களும் ஒரே பிராணனின் அம்சங்கள். ஈசுவரனின் ஒரு சங்கற்பமே, உலகங்களைப் படைப்பதும் காப்பதுமாம். வெளிப்படாத ஈசுவரசக்தி எவ்வளவோ அபாரமானதாக இருக்கின்றதுதான். கீதையில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் "யான் இப்பிரபஞ்சம் முழுவதையும் ஒரு அம்சத்தினால் சிருஷ்டித்துத் தாங்கி நிற்கின்றேன்" என்று உபதேசித்த பிரகாரம், ஈசுவரன், சிருஷ்டியின்* அளவிலன் அதைக் கடந்தவன். ஆயினும், வியக்தப்பட்டிருக்கிற பிரபஞ்சம் ஈசுவரத்தன்மையது. ஈசுவர அம்சம் அது என்பதில் யாதொரு சந்தேகமுமின்றே! அவர் எங்கும் இருக்கிறார், ஒவ்வொரு வஸ்துவிலும் உள்ளார், அதனால் †தூணிலும் உள்ளார், துரும்பிலும் உள்ளார். வணிகர் சாலையிலும், மலையிலும், நாட்டிலும், காட்டிலும், ஜனக்கூட்டத்திலும், குகையின் ஏகாந்தத்திலும், அவர் ஒரே மாதிரியாக இருக்கின்றார். அவர் மஹிமையைப், பனிக்கட்டிகள் உறைந்திருக்கும் மலைகளின் பிரகாசத்திலும், மரங்களடர்ந்த கண்ணுழையா வநத்தின் காம்பீரியத்திலும், மனிதன் ஸஞ்சாரமில்லாத மலைப்பள்ளத்தாக்கின்கண் கேட்கும் மந்தமான சப்தத்திலும், மற்றவிடங்களை நோக்க, நாம் அறிதல், லகுவானவிஷயமே. நான் சொல்லுகிறது யாதெனில், அவ்விடங்களில் அவர் மகிமையைத் தெளிவாயறிவோம், உணர்வோம். மற்றவிடங்களிலும் அவரையறியாஹேது இருந்தாலும், அவர் வசநிக்கும் வார்த்தையைக் கேட்கின்றோமில்லை; செவிடாயிருக்கிறோம். அவர் பேசுகிறார். நாம் கவனிக்கின்றோமில்லை; குற்றமும் குறையும் நம்மிடமுள்ளன. நாமிருக்கும் நகரத்தின் வாழ்விற்குரிய பரபரப்பும் ஆரவாரமும் கவலையும் மநச்சலநமும் இறைவன் பேசும் வாக்கைக் கேட்காமலிருக்கும்படி செய்விக்கின்றன. நம் மநம் உறுதிப்பாடுள்ளதாகவும் நம் காதுகள் நுண்ணிய சப்தத்தைக் கேட்கும் இயல்பினவாகவும் நாம் உலக

* விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய் எண்ணிறந்து எல்லை யிலாதானே!"—மாணிக்கவாசகர்.

† பிரஹ்லாதருக்குத் தூணில் தோன்றினர் கேநோபநிஷத்தில் தேவர்களுக்கு துரும்பில் தோன்றினர்.

ஆசைகளைத் துறந்து ஆன்மாவின் நோக்கமுள்ளவராகவுமிருப்போமாகில், காட்டின் ஏகாந்தத்திலும், மலையின் குகையிலும், நடுராத்திரியில் விண்மீன்பரப்பின் காட்சியிலும், இவைபோன்ற ரமணீயமான இடங்களில் ஈசுவர ஸாந்நித்தியத்தை உணர்வது எவ்வளவு இலகுவோ அவ்வளவு இலகுவாய் சாதாரண உலகக் கூச்சல்களிலும் ஆரவாரத்திலும் அவர் விபூதியை யுணரலாம். அதனால் நாம் தெரிந்துகொள்ளும் சித்தாந்தமாவது, நாம் கண்மூடிகளாகவும் மநக்கண் மருள்பெற்றவராகவுமிருக்கின்றமையால் தான் இறைவன் அங்கும் இருக்கிறார் இங்குமிருக்கிறார் என்பதை நாமறிகிலோம்.

5. ஆன்ம முறையான சந்மார்க்க முறையை அப்பியஸிப்பதை அநுசரித்து ஏற்படும் நிபந்தனைகளாவன: உங்களைச் சுற்றி வஸ்துக்கள் உங்கள் மநத்தைக் கவரும்படியாக ஏன் அமைக்கப்பட்டிருக்கின்றன? அவைகளை ஏன் சுவாதீநப்படுத்த விரும்புகின்றீர்கள்? எப்போதாவது இத்தன்மையான வினாக்களை நீங்கள் செய்திருக்கின்றீர்களா? உலகில் பலவாறாகச் சிதறுண்டிருக்கிற எண்ணிறந்த வஸ்துக்களின் அழகு உங்கள் ஆசைக்கு நேர்மையாக உங்களைப் பிரியப்படுத்துகின்றன. உங்கள் மநத்தைக் கவர்ந்து இழுக்கும்படியான தன்மையில்லாவிடில் அவைகள் அவ்விடமிரா. அவைகள் உங்களுக்கு உண்மையில் தடையாக விருக்குமாயின் அவைகள் உங்கள் பாதையில் ஏன் அமைக்கப்பட்டிருக்கவேண்டும்? ஒரு தாயானவள் தன் குழந்தையை நடக்கப் பழக்கும் முறையில் பிரகாசமான விளையாட்டுச் சாமான்களை அதன் முன்னர் சற்று தூரத்தில் ஆட்டிக்காட்டி குழந்தை எழுந்து நடக்க ஆரம்பித்து அதைத் தொடுவதற்கு உற்சாகத்துடன் கிளம்புங்கால், சற்று தூரம் அவ்விளையாட்டுச் சாமானைத் தள்ளி ஆட்டிக் காட்டுவது போல, அதே காரணத்தினால் உலகத்தில் மநத்தைக் கவர்ச்சி செய்யக்கூடிய பலவாறான வஸ்துக்கள் அங்குமிங்கும் இறைக்கப்பட்டிருக்கின்றன. குழந்தை தன் தாயால் காட்டப்பெற்ற அழகான வஸ்துவைப் பிடிக்கக் காலூன்றி எழ முயலுவான்; விழுவான்; மறுபடியும் எழுவான்; நடக்க முயலுவான்; விளையாட்டுச் சாமானைக் கைப்பற்றக் கஷ்டப்படுவான்; பிடிப்பான், அதை எடுப்பான், பிரிப்பான், எறிவான். அதை



விட்டு வேறொன்றைப் பற்றத் திரும்ப முயலுவான். அழகான வஸ்துவைக் கிரகிக்க வேண்டுமென்ற கருத்துடன் தாயார் குழந்தை முன்னர் அவ் விளையாட்டுப் பொருளைக் காட்டினளில்லை; குழந்தையிடமுள்ள சக்தி விருத்தியாகி மலரவேண்டுமென்ற கருத்துதான் அவளிடமுள்ளது. பகட்டான வஸ்துவைக் கைப்பற்றியபின் குழந்தை அதை வெறுத்துச் சிந்நாபிந்நப் படுத்துகின்றது. அவ்விதமே ஈசன் தாய்போல் நமக்கிரங்கி நம்மை நல்வழிப் படுத்தும்பொருட்டு நம் முன்னர் பகட்டான பதார்த்தங்களை அங்கு மிங்கும் அமைக்கின்றார். நம்மிடத்தில் அந்தர்கதமாயுள்ள சக்திகள் வெளிப்பட்டு மலரும் வண்ணம் நம்மைக் குழந்தைகளாக மதித்து நம்மை நடத்துகிறார். ஜநங்களை "வாஜா:" எனவேதம்கூறுகின்றது. நம்மிடத்தில் முயற்சியையுண்டுபண்ணவும், ஊக்கத்தைஎழுப்பவும், (பாலர்கள்) பகட்டானபதார்த்தங்கள்மூலமாய் அந்தர்கதமாயுள்ளசக்திகளை மலரச்செய்கின்றார். நம்மைச் சுற்றி நாற்புறமும் சிதறிக்கிடக்கின்ற பகட்டானஉலகவிஷயங்கள் நாம்வெளியேறிப்பிரவிர்த்திக்கும்படியாக நம்மைத் தூண்டும் பொருட்டுக் கணக்கில்லாதபடி அமைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளைக் கைப்பற்றக் கஷ்டப்படுகிறோம். அவைகளைப் பிடிக்க முயலுகிறோம். கடை முறையில் அவைகளைப் பிடிக்கிறோம். சொற்ப காலத்தில் பலன் ருசியற்று உவர்ப்பாய்ப் போகின்றது; மகா உயர்வுள்ளதென்று ஆவலுடன் பற்றிய பொருள் பதராய் முடிகிறது; அதன்மேல் வெறுப்பு உண்டாகிறது. இத்தன்மையாக நாம் விருத்தி யடைகிறோம். இதன் பயன் நம்மிட மேற்படுகிறது. நம்முள்ளத்தி லிருந்த யாதேனும் ஓரோர் சக்தி வெளிவருகிறது; ஓரோர் குணம் அபிவிருத்தி யாகிறது; ஓரோர் செயல் மலருகின்றது; ஓரோர் தகைமை யமைகின்றது; ஓரோர் திறமை வெளியாகி மேன்மை பெறுகின்றது. குப்தமாயிருந்த ஒரு குணம் ஒரு கிரியா சக்தியாகப் பரிணமிக்கின்றது. இவ்விதமாக ஏற்படவேண்டுமென்பதுதான் இறைவனது கருத்து. இக்கருத்து நிறைவேறின உடனே விஷயத்தின்மேலுள்ள பற்று அற்றுப் போகின்றது. அதன்மேல் அது தவிர்க்கப்படுகின்றது. இவ்விதம் ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பற்றுகிறோம். விகாசமுறையில் கீழ்ப்படியில் நின்று மேல்படியில் ஏறுகின்றோம். ஜந்மமூண்டு ஜந்மாந்

தரமுண்டு என்று நீங்கள் நம்பினால், ஈசுவரனுலமையப்பெற்றுள்ள பிரபஞ்ச சிருஷ்டியின் விவஸ்தையின் நேர்மையையும் அழகையும் மகிமையையும் பூர்ணமா யறிவீர்கள். அவ்விதம் நம்பாவிடினும் இருப்பும் இறப்பும் ஒரே ஜன்மத்தைப் பற்றியனவென்று நீங்கள் எண்ணினாலும், உங்கள் முயற்சியின் கதியில் நலம் உண்டென்றும், முயற்சியின் பலனிலதென்றும்,முயற்சியினால் நீங்கள் பெறும் சக்தி உயர்வென்றும், அறிவீர்கள். "ஒரு சரீரத்தி லிருந்துகொண்டு பட்டதுக்கம் நாம் மற்றொருசரீரத்தையடையுங்கால் ஒரு சக்தியாக அமைவுறுகிறதென் றறிவோம்." இவ்விதம் கார்ப்பெண்டர் (Carpenter) என்ற ஞாநியார் வசநிக்கிறார். ஒரே ஜன்மத்திலுங் கூட தொட்டிலில் ஊஞ்சலாடும் காலம் முதற்கொண்டு மண்ணில் புதைவுறும் காலம்வரை மேற்கண்ட விதி நடைபெறுவதை நீங்கள் அறியலாம். உங்கள் வளர்ச்சி வெளிப்படையாய்ப்பெறும்பலத்தாலில்லாமல் நீவிர் செய்யும் முயற்சியின் திறத்தாலும் அதனாலுண்டாகும் மநச்சக்தி மலர்ச்சியாலும் உண்டாகிறதெனறறிக.

6. உலக விஷயங்களை நெடுநாள் அநுபவித்ததினால் ஞாநியானவன் ஏற்படுகிறான். இதுகாறும் அவன் மநத்தைக் கவர்ந்தவைகளான உலக்விஷயங்கள் இப்போது அவன் மநத்தைக் கவரா. அதனால் அவைகளைப் பற்றும் முயற்சி அவனிட மில்லாது போகின்றது. அப்படியாகும் பக்ஷத்தில் அபிவிருத்தி பெறாமல் இருந்த நிலையிலேயே தங்கி க்ஷீணகதி யடைவான். உண்மையில் அப்படியன்று. உலக விஷயங்கள் முன்னரை விட இப்போது குறைவாக மநத்தைக் கவருகிறதினால் உலகத்தில் நடைபெறுகிறதற்கு அவன் புதிய நோக்கத்தை நாடவேண்டும்; அதற்கு இதுவே உற்றசமயம். இப்போது தான் ஆன்ம மார்க்கமாகிய சன்மார்க்கத்தில் பிரவேசிக்கும்படியானமுறை யேற்படுகின்றது. முன்னர் விஷய நுகர்ச்சி, சுயலாபங்களைக் கருதி ஒரு காரியம் செய்தான். இப்போது அக்காரியம் செய்தல் கடமை யென மதித்து அதைச் செய்வான். லௌகிக மார்க்கத்தை யநுஷ்டிக்கிற ஒருவனையும் சன்மார்க்க முறைபற்றி ஒழுகுகிற ஒருவனையும் பற்றி ஆராய்வோம். ஒருவனை மற்றவனாக மாற்றுதலுக்கு என்ன வேண்டுவதென்று விசாரிப்போம். ஒருவன்



உலகத்தில் அழுந்தினவன், பணப் பெருக்கை நோக்கி மிகவும்ஆசை கொண்டவன், பணக்காரனாகவேண்டி முயலுகின்றவன். அவனைப் பற்றி யோசிப்போம். அவன் செயலும் நோக்கமும் எல்லாம் ஒன்றே. பணம் சேர்ப்பதைப்பற்றியதாக நிகழும். அவ்விதம் பணம் பெறுதலுக்குத் தன் சரீர சுவாதீந முள்ளவனாயிருத்தல்வேண்டும். அப்படியின்றி சரீரம் அவனைச்சுவாதீநப் படுத்திக்கொண்டால் கால வியயம் ஏற்படும். தான் சிரமப்பட்டு ஸம்பாதித்த பணம் வீணாகச் செலவாகும். சரீரத்தின் திருப்திக்காகக் கஷ்டப்பட்டு ஸம்பாதித்த பணத்தைச் சுகத்தை நாடிச் செலவழிப்பான். பணம் ஸம்பாதிக்கும் முறையில் சோர்வடைவான். அதனால் பணக்காரனாக ஆகவேண்டுமென்று விரும்புவோன் சரீரத்தைச் சுவாதீநப்படுத்திக்கொள்ள வேண்டியவனாவன். கஷ்டங்களையெல்லாம் சகிக்கும்படியாகச் சரீரத்தைப் பழக்குவான். மிகவும் செட்டாய்க் காலங்கழிக்கப் பழகுவான். அவ்விதம் நடைபெறுதற்கு,கஷ்டத்தைச் சகிக்க முயலுவான். ஒரு லாபத்தைப் பெறவேண்டி இரா முழுவதும் யாத்திரை செய்ய நேரிட்டால் தூங்கவேண்டுமென்று நினையான்.* ஒருவனிடம் சென்று அவனைச் சிநேகம் செய்து அவன் செல்வாக்கு மூலமாய்ப் பணம் பெறலாமென் றிருக்கும் பக்ஷத்தில், இராப்பகல் நினையாது நடு இராத்திரியிலேயே அவனிடம் போகவேண்டுமானாலும், இளைப்பாற வேண்டுமென்றஎண்ணத்தை முற்றும்தவிர்த்து, அவனிடம்போவான்.

பொன் ஆசைகொண்டவன் தன் சரீரத்தைச் சுவாதீநப்படுத்திக்கொள்ளுவான். அதன் சுகதுக்கங்களைப்பேணான், கருதான். அதன் நோக்கப்படி ஒன்றும் செய்யான். தன் நோக்கப்படி அதை நடக்கும்படி ஆளுவான். இவ்விதமே அவன் முதலில் பெறும்பயனென்னவெனில், ஸ்தூல சரீரஜயமும் பின்னர் மந ஐகாக்ரியமும் பெறுவான். மநம் சிதறாமல் ஒருமுகப்பட்டு வேலை செய்யாவிடில் வர்த்தகசாலையில் இவன் எதிரிகள் இவனை மேற்கொள்ளுவார்கள். ஒரு விஷயத்தைப்பற்றி மநம் அங்குமிங்கு மலையுமாகில் திடமான முயற்சியும் தொடர்பான செய்கையும் உண்டாகாமல் காரியச்சோர்வு ஏற்படும். அதனால் குறிப்பிட்ட லக்ஷியத்தைப்

* மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்.

பெறுதலுக்கு மனச் சக்திகளை ஒருமுகப்படுத்தி ஜாக்ரியம் கொள்ளும்படி செய்யவேண்டும். குறித்த காரியம் நிறைவேறும்வரை அதிலேயே மனத்தை இடையறாமல் நிறுத்துவான். அதனால் அவன் மனம் மேன்மேலும் ஸ்திரப்படுகிறது. மேன்மேலும் கூர்மையாகிறது, மேன்மேலும் அவன் சுவாதீனமாகின்றது. ஸ்தூல சரீரத்தை ஜயித்தான், மனத்தைச் சுவாதீனப்படுத்திக்கொண்டான். இன்னும் இவன் பெற்றபேறு என்னவென்றாராய்வோம். திடமான புத்தி, நிச்சயமான தீர்மானக்கொள்கை, நினைத்த விஷயத்தைக் கொண்டுசெலுத்தும் உறுதிப்பாடு. இவ்விதம் ஒரு விஷயத்தையடைய முயற்சியில் அவன் பெறும் பயன் இவைகளாம். இத்தகைய மனிதன் சரீர சுவாதீனம்பெற்று, மனச்சுவாதீனம் பெற்று திடமான ஊக்கமும் அடைந்து தான் லக்ஷியித்த பொற் குவியலை யடைகிறான். பின்னும் என்ன? இப்பொற்குவியலால், தான்நினைத்தபடி ஆநந்தம்பெறவில்லையென்று அவனறிவான். தனக்குள்ள சரீரம் ஒன்றே யென்றும், அதற்கு வேண்டிய வஸ்திரம் ஒன்றே யென்றும், தனக்குள்ள வாய் ஒன்றே யென்றும், அதற்கு வேண்டிய உணவும் சொற்பமே யென்றும், தான் சேர்த்திருக்கிற பணம் ஏராளமாயிருப்பினும் தனக்கு வேண்டியவைகளெல்லாம் அற்பமென்றும், தன் விருப்பங்களை விருத்திபண்ண இயலாதென்றும், இவைகளால் தான் சந்தோஷமடையும் சக்தி மிகவும் சொற்பமாயும் வரம்புக் குட்பட்டதாயு மிருக்கிற தென்று மறிவான். முன் பிரீதியாகவிருந்த பொற்குவியல் இப்போது பாரமான வீண் சுமையாகிறது. பொற்குவியலைக் கைப்பற்றிய நிமிஷமுண்டான சந்தோஷம் வரவரக்குறைந்து இப்போது உவர்க்கிறது. அதன் பெருக்கத்தின் உரிமையால் முன் சந்தோஷித்தான். இப்போது தெவிட்டச் செய்யப்பெற்றவனாய் அதில் பிரியம் கொள்ளுகிறானில்லை. இத்தன்மையான அநேகர் யாதொன்றும் செய்யாதவர்களாய், மேன்மேலும் பணக்குவியலைமாத்திரம் அதிகப்படுத்திக்கொண்டு, பொன்னைக் குவித்தலென்ற வழக்கத்தை மாத்திரம் கொள்ளுகிறார்கள். முன் பிரியத்தை யுண்டுபண்ணினதே இப்போது மனத்தைத் துன்பப்படுத்தும் ஒரு பெரிய சுமையாக முடிகிறது. முன் ஆவலோடு அதைச் சேகரித்தான்; இப்போது அது இவனை மேற்போகாமல் தள்ளி அழுத்துகிறது. (இன்னும் வரும்.)

ப. நா.

## காயத்ரீ இராமாயணம்.

இராமாயண மென்னும் கிரந்தத்தை உயர்ந்த இதிகாஸமென்றும், எல்லா தர்மங்களையும் விவரித்துக் கதாநாயகர்மூலமாய் அநுஷ்டித்துக் காட்டும் ஆதிகாவ்யமென்றும் நமது நாட்டில் ஆஸ்திகர்கள் அனைவரும் தொன்று தொட்டு பக்தி சிரத்தை ஆராதனைகளுடன் கொண்டாடுவதை நாம் அறிந்திருக்கின்றோம். இது தவிரவும் இராமாயணத்தையே ஒரு மகா மந்திரமாக மேலோர்கள் கைக்கொண்டு,

அஸ்ய ஸ்ரீ ராமாயண மஹாமந்த்ரஸ்ய, வால்மீகிர்பகவாந்ருஷி:,
அநுஷ்டுபாதீநி நாநாச்சந்தாம்ஸி, ஸ்ரீராமசந்த்ரோ தேவதா॥

என "இராமாயண மென்னும் மகா மந்திரத்திற்கு வால்மீகி பகவான் ரிஷி என்றும், அநுஷ்டுபு முதலியவை சந்தஸ்களென்றும், ஸ்ரீராமசந்திரனே தேவதை என்றும்" ஜபித்துவருவதைக் காணலாம். அந்த மந்திரத்தை அறிந்து, மானிடர்களின் நன்மையைக் கருதி, வால்மீகி பகவான் உலகத்துக்கு இராமாயணத்தை அளித்திருக்கின்றார்.

வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே।
வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத்ராமாயணாத்மநா॥

என்றபடி, "வேதத்தினால் அறியப்படக் கூடிய பரம புருஷனானவன் தசரத குமாரனாகப் பிறந்தவுடன் அந்த வேதமே ஸ்ரீவால்மீகியின் மூலமாக இராமாயண வடிவுகொண்டு பிறந்த" தென்று சொல்லப்படும். இப்பிரமாணத்தினால் இராமாயணத்தை வேதமென்று அநேகர் கருதுகின்றார்கள்.

யவேதாதௌ ஸ்வர: ப்ரோக்த: வேதாந்தே ச ப்ரதிஷ்டித:।
தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய ய: பரஸ்ஸ மஹேஶ்வர:॥

என, "வேதத்திற்கு ஆதியிலும், வேதத்திற்கு முடிவிலும், எந்த ஸ்வரமானது நிற்கின்றதோ, எது பிரகிருதியில் லயமாகின்றதோ, அதற்கு மேலுள்ளவன் (கடவுள் என்று பொருள்படுகிற

படி) மகேசுவரன்" என்று புகலும் வேதவசநத்தில் 'ஓம்' காரத்தை வேதத்திற்கு முதலாகச் சொல்லி யிருப்பதால் அந்த ஓம் காரத்தைக்கொண்டே வால்மீகி பகவான் இராமாயணமென்னும் வேதத்தை இயற்றக் கருதி அதின் ஏழு வியாகிருதிகளைக் கொண்டு ஏழு காண்டங்களையும் முதலில் கற்பித்தார் எனவும், அந்த ஏழு காண்டங்களில், ஒவ்வொரு காண்டத்திலும் ஒவ்வொரு வியாகிருதியின் தேவதையுடைய பெருமை விவரிக்கப்பட்டிருக்கின்றதெனவும், பிறகு அந்த ஓம் காரத்தின் விரிந்த வடிவான ஸாவித்திரீ என்னும் காயத்திரீ மந்திரத்தைக் கொண்டு இராமாயண கிரந்த முழுமையையும் இயற்றினர் எனவும், மேலோர்களின் கருத்து. அஃது எப்படியெனில், காயத்திரீ மந்திரத்தில் 24 எழுத்துக்கள் அடங்கி உள்ளனவாகையால் அந்த 24 எழுத்துக்களில் ஒவ்வொரு எழுத்துக்கும் ஆயிரம் சுலோகங்களாக இயற்றி மொத்தம் கிரந்தத்தை 24,000 சுலோகங்களால் வால்மீகி பகவான் அமைத்திருக்கின்றனர். இராமாயணத்தை மானிடர்கள் ஓம் காரமாகவும் காயத்திரீ மந்திரமாகவும், கருதலாம். அதை ஓம் காரமாகக் கருதினல் ஓம் காரத்திற்குப் பிரஹ்மா ரிஷியாகவும், பரமாத்மாவே தேவதையாகவுமிருப்பதால் அக்கருத்தை விளக்கி ராமரஹஸ்யோபநிஷத்தில்,

ராமஏவ பரம்ப்ரஹ்ம ராமஏவ பரந்தப:।
ராமஏவ பரந்தத்வம் ஸ்ரீராமோ ப்ரஹ்மதாரகம்॥

என்று சொல்லியிருக்கிற பிரகாரம் ராமனே பரமாத்மாவாகையால் ஓம் காரத்திற்கு ரிஷியாகிய பிரஹ்மாவே இராமாயணத்திற்குக் காரணமாக பால காண்டத்தில் முதலில் வந்திருக்கின்றார். இராமாயணத்தை காயத்திரீ மந்திரமாகக் கருதில், அந்த காயத்திரீக்கு விசுவாமித்திரர் ரிஷியாகவும், ஸவிதா ஆகிய சூரியன் தேவதையாகவும் இருப்பதால் இராமன் பிறந்தவுடன் விசுவாமித்திரர் வருவதையும், நிர்க்குணமான பரமாத்மாவே உபாஸனையின் நிமித்தமாக ஆதித்ய மண்டல வர்த்தியாக பாவிக்கப்படுகிறபடி, ஆதித்ய குலத்தில் இராமன் அவதரித்தார் எனக் கூறப்படுவதையும் காண்க. அவதாரம் என்றால் இறங்குதல் என்று பொருள். நிர்க்குணமான பிரஹ்மத்தை ஸகுணமாக உபாஸிக்கும்பொழுது நாம் அப்பொருளைச் சூரியனாக உபாஸிக்கின்றோம். அப்பொழுது நம்முடைய உபாஸனைக்குப் பலன் அளிப்பதற்காக எல்லாப் பொருட்களுக்கும் மேலான பரமாத்மா சூரியனாகிய ஒரு பொருளின் கண் இறங்கி நம்முடைய உபாஸனையைக் கிரஹித்துக் கொள்கின்றார். நாம் உபாஸிக்கும் பொருள் பௌதிகமான சூரியனல்ல. அந்த சூரியனுக்குப் பிரகாசிக்கும் சக்தியைக் கொடுத்துக் கொண்டு அந்த சூரியனுக்கு ஆத்மாவாக விளங்கும் பரப்பிரஹ்மத்தையே உபாஸிக்கவேண்டுமென்று



'ஸம்பத்ஸ்ரூபோபாஸநாத்'

என்னும் சூத்திரத்தைக்கொண்டு ஸ்ரீமான் சங்கராசாரியர் முதலானவர்கள் கட்டளையிட்டிருக்கின்றார்கள். ஆகவே இராமாயண பாராயணமானது ஸகுண பிரஹ்ம உபாஸனை ஆகுமென்று எல்லாராலும் கருதப்பட்டுள்ளது. காயத்ரீயாகிய

தத்ஸவிதுர்வரேண்யம் (ஸ்யம்) பர்கோதேவஸ்ய தீமஹி
தியோயோந: ப்ரசோதயாத்॥

என்னும் மந்திரத்தின் பொருளானது மதபேதங்களுக்குத் தக்கவாறு பலவிதமாகக்கூறப்பட்டதாயினும் ஸாமாந்யமாக வாக்யார்த்தம் அடியில் வருமாறு.

குறிப்பு:—ய:=எவன். ந:= நம்முடைய. தியஃ=புத்திகளை ப்ர = நன்றாக. சோதயாத் = நடத்துவானோ. தத் = அந்த ஸவிது: = பிரகாசவடிவாகிய. தேவஸ்ய = தேவனுடைய வரேண்யம் = மேன்மையுள்ள. பர்க: = தேஜஸ்ஸை. தீமஹி = தியானிப்போமாக.

அந்த காயத்ரீ மந்திரத்தினல் பிரதிபாதிக்கப்படும் "தேவன்" ஸகுண பிரஹ்மமாகவும், அவனுடைய பராசக்தியாகிய மாயையே வரேண்யம் பர்க: ஆகவும் கூறப்பட்டிருப்பதால் அந்த தேவனே இராமனென்றும் அவனுடைய வரேண்யம்பர்க: ஆகிய மாயாசக்தியே ஸீதாதேவியாகவும் மேலோர்கள் அபிப்பிராயப்படுகின்றார்கள். அவ்விதமாகவே அத்யாத்ம இராமாயணம் முதலாவதுமாக்கத்தில் ஸீதாதேவி, ஹநூமானுக்கு அடியில் கண்டபடி உபதேசித்து இருக்கின்றாள். அதாவது

ராமம்விஶ்வமயம் வந்தே ஸச்சிதாநந்தவிக்ரஹம்।
ஸர்வோபாதிவிநிர்முக்தம் ஸத்தாமாத்ரமகோசரம்॥
ராமம்வித்தி-பராம்ப்ரக்ருதிம் ஸர்க்கஸ்தித்யந்தகாரிணீம்।
தஸ்யஸந்நிதிமாத்ரேண ஸ்ருஜதீதமதந்த்ரிதா ॥

" இராமனை ஸச்சிதாநந்தமும், இரண்டற்ற ஒருபொருளும், ஒரு உபாதியுமற்ற இருப்பென்னும் தன்மையுடையதும், இந்திரியங்களால் அறியப்படாததுமான பரப்பிரஹ்மமென்றுதெரிந்துகொள். என்னை ஆக்கல், காத்தல், அழித்தல், என்னும் முத்தொழிலையும் அவனுடைய சந்நிதியைக்கொண்டு செய்கின்ற மூலப்ரகிருதி யென்று தெரிந்துகொள்'' என்பதாம்.

காயத்ரீயில் தேவனையும் அவனுடைய மாயா சக்தியையும் ஒன்றாகவே பாவிக்கவேண்டுமென்பதையும், அவ்விதமாகவே யோகிகள் பாவிக்கிறார்கள் என்பதையும் குறிப்பிட்டுக் காண்பிக்கும் வண்ணம் காயத்ரீ மந்திர ரிஷியாகிய விசுவாமித்திரர் இராமனையும் ஸீதாதேவியையும் விவாகமூலமாக ஒன்றாகச்சேர்த்துவைத்தார் என ஸங்கேதமாகக் கதையானது விவரிக்கப்பட்டுள்ளது. காயத்ரீ மந்திரத்தில் பிரதிபாதிக்கப்படும் தேவனுடைய மாயா சக்தியானது நமக்குள் அந்தர்யாமியா யிருந்து நம்முடைய புத்திகளை ஏவி நடத்தும்வண்ணம் இராமாயணக் கதையில் விவரிக்கப்படும் தர்மங்கள் நம்முடைய புத்திகளைக் கல்மஷ மற்றனவாக வாக்கி அவைகள் நியாயமான வழியில் பிரவிர்த்திக்கும்படி செய்கின்றன. அந்த இராமாயணத்துள் அடியில் கூறப்பட்டிருக்கும் 24 சுலோகங்களுக்கும் காயத்ரீ இராமாயண மென்று பெயர். அந்த சுலோகங்கள் ஒவ்வொன்றும் கதா ஸந்தர்ப்பத்தில் அந்தந்த இடத்திற்குத் தக்கவாறு பொருள் உள்ளதாக அமைந்திருப்பினும் அந்த 24 சுலோகங்களையும் துயர்ச்சியாக ஆராய்ந்து பார்க்கும் பட்சத்தில் காயத்ரீ மந்திரத்திற்கு அதிகாரியான ஒருவன் அந்த அதிகாரம் பெற்றது முதல் ஜன்மமுடிவுவரை அநுஸரிக்க வேண்டிய முக்கிய தர்மங்களை விவரித்து அவனுடைய புத்தியை (ப்ரஜோதயாத) சரியாய் ஏவி நடத்துகின்றன. காயத்ரீ இராமாயணமாகிய அந்த 24



சுலோகங்களையும் மேலே கண்டபடி பொருள்படும் அர்த்தத்தையும் அடியில் வருமாறு காண்க.

ஒருவன் உபநயநத்திற்குப் பிறகு குருகுல வாஸம் செய்து எல்லா வித்தைகளையும் கற்றுக்கொண்டு பிறகு ஆசாரியன் முன்பாக வந்து

(1) த = தபஸ்ஸ்வாத்யாயநிரதம் தபஸ்வீ வாக்விதாம்வரம்।
நாரதம்பரிபப்ரச்ச வால்மீகிர்முநிபுங்கவம்॥
(பாலகாண்டம் முதல் ஸர்க்கம் முதல் சுலோகம்.)

(1) தவம், தன்னுடைய வேதத்தின் அத்தியயநம் இவைகளில் இருப்பவரும், வேதத்தை அறிந்தோருக்குள் மேலானவரும், சமதமாதிகளில் தேர்ந்தவருமான குருவை நோக்கித் தன்னை மூடிக்கொண்டிருந்த பிறவிக் குற்றத்திலிருந்து வெளியேறினவனும், தவம் நிறைந்தவனுமான சிஷ்யனானவன் நான் இனி நடக்க வேண்டிய முறை என்னவென்று கேட்டான்.

குறிப்பு:—இந்த சுலோகத்தில் நாரதம் = நாரம் = ஞாநம், அதைக்கொடுப்பவன் நாரதன் அதாவது குரு என்று பொருள்.

வால்மீகிः = புற்றிலிருந்து உண்டானவன், அதாவது புற்றிலிருந்து வெளியேறி வருவதுபோலப் பிறவிக் குற்றத்திலிருந்து வெளியேறியவன் என்று பொருள்.

பரிபப்ரச்ச = நன்றாகவும் விவரமாகவும் கேட்டானென்று பொருள். பரி என்னும் உபஸர்க்கத்திற்கு அப்பொருள் அமையும்.

(2) ஸ = ஸஹத்வாராக்ஷஸாநுஸஹோபஜுஷ்டாநுரமஷநம்ஹ நம:
ஜிதக்ரோதோ ஜிதஹ்ருஷீக யமென்ருநிஜயபேரா॥
(பாலகாண்டம் 30வது ஸர்க்கம் 22-வது சுலோகம்.)

(2) அந்த குருவானவர், பரித்யாகத்திற்கு (யக்ஞத்திற்கு) விரோதிகளான காமக் குரோதாதிகளை ஜயித்தவராகவும், சுலபத்தில் ஸந்தோஷத்தை அடையக்கூடியவராகவும் ரிஷிகளால் நன்கு பூஜிக்

க்கப்பட்டவராகவும், விஜயத்தை அடைந்த இந்திரனைப்போல வேண்டுதல் வேண்டாமை யென்பவையில்லாத பாக்கியவனாகவும் இருந்தார்.

குறிப்பு:—ஸுகாநந்த நம் = (ஸுகம் = சீக்கிரமாக, சுலபமாக நந்தநம் = ஸந்தோஷப்படுகின்ற) சுலபத்தில் சந்தோஷத்தை அடையக்கூடியவரும்.

(3) வி = விஶ்வாத்மா ஸுதநுர்ஜாத ராம தந்வாநிவ ஶாஸ்த்ரவித்ததம்।
வந்தாரயே நயஸ் ஸ்வஸ்ய ஜிதாரயம் ஸ்வர்க்ஷ॥

(பாலகாண்டம் 67வது ஸர்க்கம், 12-வது சுலோகம்.)

(3) எல்லாப் பிராணிகளிடத்திலும் அன்புள்ளவரும் தர்மஸ்வரூபியுமான அந்த குரு அந்தசிஷ்யனுடைய பெற்றோர்கள் சொல்வதையும் கேட்டு ஏ! குழந்தாய்! ரம்யமானவனே! வில்லைப் பாரென்று சுலபமான மார்க்கத்தைச் சொன்னார். அதாவது, வில்லானது வளைந்து சத்ருவை ஜயிப்பதுபோல, நீயும் கிருஹஸ்தனாகி மாதா, பிதா, குரு, அதிதி, பிதுர்க்கள், தேவதைகள் முதலோருக்கு வணங்கி தர்மங்களைப் புரிந்து, உன் ஆத்மாவுக்கு விரோதிகளான பாபங்களை ஜயிக்கவேண்டும் என்றார் என்பது கருத்து.

குறிப்பு:—விஶ்வாத்மா = எல்லாரிடத்திலும் அன்புள்ளவர். ராம = ரம்யமானவன்.

ஸுலபம் = சுலபமான (ஸுகம் = சுலபமான) தன்மையுடையதை, அதாவது, கிருஹஸ்தாசிரமம் என்பது பொருள்.

(4) தத = தத ஷவஸ்ய தஸ்ய ஸவி ஸ்வஸ விஸாம் வதேத்
ஸய நீயம் நரேந்த்ர ஸ்ய தஸ்ய ஸாஜ்யஸ்ய திஷ்ட॥

(அயோத்தியா காண்டம் XV 20.)

(4) அந்த சிஷ்யன் விவாகம் செய்துகொண்டு தன்குலத்தைப் (பிதுர்க்களை) ஸந்தோஷப்படுத்தினான். வநத்தை விட்டு அரசனுடைய ஆளுகைக் குட்பட்ட நகரம் அல்லது கிராமத்தில் பிரவேசித்து அங்கே வசித்திருந்தான்.



(5) வஸுவ நவாஸம் ஹி ஸம்வாஸ்யவாஸாம்ஸஸ்ராஜ்ஞாநிவ।
ஜநகாத்மஜாம் நந்த்ஸ்வர்ய வீதாமெயஸ்ய ராஜதேஜஸ॥

(அயோத்தியாகாண்டம் XL 15.)

(5) அந்த சிஷ்யனோடு செல்லுகின்ற மனைவிக்கு அவனுடைய மாமனார் சுகமான வீட்டையும், வஸ்திரங்களையும், ஆபரணங்களையும் அவளை வெகுமானித்துக் கொடுத்தார்.

குறிப்பு:—வநவாஸம் = (வந = ஸுகமான, வாஸ = வீட்டை) ஸுகமான வீட்டையும், ஸம்வஸ்ய = நன்றாகத் துதித்து, வெகுமானித்து, வீதாமெய = வீதா = கட்டப்பட்டவளென்பது பொருள். வீத = கட்டுண்ட, அதாவது விவாகம் செய்து கொடுக்கப்பட்ட.

(6) ரா(ரா) = ராஜா ஸத்யம் ச தர்மம் ச ராஜா குலவதாம் குலம்।
ராஜா மாதா பிதா சைவ ராஜா ஹிதகரோ நृணாம்॥

(அயோத்தியாகாண்டம் LXVII 34.)

(6) அந்த கிருஹஸ்தனுக்கு ஸத்யம், தர்மம், நல்லகுலத்தில் பிறந்தவர்களுடைய குலம் இவைகளே ராஜா, அதாவது அவன் வணங்கும் பொருள்கள். மாதாவும், பிதாவும், ஜநங்களுக்கு உபகாரம் செய்கிறவனும் அந்த சிஷ்யனுக்கு ராஜா, அதாவது அவன் அவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கிறான்.

(7) ணி (நி) =
நிரீக்ஷ்ய ஸ முஹூர்த்தம் து ததர்ஶ பரதோ குரும்।
உடஜே ராமமாஸீநம் ஜடாவல்கலதாரிணம்॥

(அயோத்தியாகாண்டம் Xc, IX 25.)

(7) அந்த சிஷ்யனானவன் அவனுடைய கடமைகளைச்செய்யும்போது சௌகர்யமான காலத்தை வருவித்துக்கொண்டு ஆச்ரமத்தில் ரம்யமாக ஜடையுடனும் மரவுரியுடனும் விளங்குகிற குருவைப் போய்ப் (பார்த்தான்) பார்க்கின்றான்.

குறிப்பு:—ஶாகீ = ஶரம் =பாரம், கடமை. ஶாகீ (ஐந்தாம் வேற்றுமை) கிருஹஸ்தாச்ரம பாரத்திலிருந்து கொஞ்சம் நிவிர்த்திசெய்துகொண்டு என்பது பொருள்.

ராமீ = தன் ஆத்மாவிலே ரமித்துக்கொண்டு ஆநந்திப்பவன்.

(8) யம் = யதிவாஸிஃ க்ருதார்த்தோ ஸமஷ்டிம் தம்ஹோநிம்। ஸமெந்வஹலெநவாஹிம் ரொவயவஷோயஸ॥

(ஆரண்யகாண்டம் XI 44.)

(8) கிருஹஸ்தாசிரம தர்மங்களை யெல்லாம் செய்து கிருதகிருத்தியனாகிய சிஷ்யனைப்பார்த்து குரு சொல்வது.

"உயர்ந்த பொருளுக்கெல்லாம் உயர்ந்ததாகிய பரப் பிரஹ்மத்தைப் பார்க்க (தியாநத்தினால் அநுபவிக்க) உன் மநமானது தீர்மானிக்கப்பட்டிருக்கும் பட்சத்தில் இப்பொழுதே அதற்காகப் போவதற்குப் பிரியப்படு."

குறிப்பு:—ஸமஷ்டிம் = ஸமஷ்டி + ஸம்தம்=மலைமேலிருக்கிற, அதாவது உயர்ந்த நிலையிலிருக்கும் பொருள்களுக்கெல்லாம் முடிவாகிய.

ஹோநிம் = பரமாத்மாவை, கல்லூகபட்டர் மநுஸ்மிருதி எட்டாவது அத்தியாயம் 91-வது சுலோகத்தின் வியாக்கியாநத்தில் முநி என்னும் சொல்லுக்கு பரமாத்மாவென்று அர்த்தம் கூறியிருப்பதைக் காண்க.

(9) ஐ = ஶாதஸ்யாயவேதஸ்யஷ்ஹ ஒணாம்ஶவஹோ। ஶ்ரமாவெகிம்வஷ்டூம் விஷயஞநயிஷ்ஷ்தி.॥

(ஆரண்யகாண்டம் XLIII 17.)

(9) சிரேஷ்டனானவனே! ஸாங்கியமாகிய (விசாரித்துத் தேடித் தெரிந்துகொள்ளவேண்டிய மார்க்கமாகிய) இந்த ஞாநமார்க்கம் எனக்குத் தெளிவாயிருக்கிறது. கர்மத்திற்குட்பட்ட உன்னுடைய புத்திரனுக்கும் உன்னுடைய மனைவியைப் பெற்றவர்களுக்கும் (அயுக்தமென்று) ஆச்சரியத்தைக் கொடுக்கும்.

(இன்னும் வரும்) **P. S. S.**

## சுமதி என்னும் உத்தமியின் சரித்திரம்.

(262-ம் பக்கத்தொடர்ச்சி)

---

ஒருகணவனையடைந்து வேண்டியபடி சகல போகபோக்கியங்களையும்அநுபவியாமல் ஜன்மத்தைவியர்த்தமாக்கிக்கொள்ளாதே, புண்ணியமென்றும், பாவமென்றும், சுவர்க்கமென்றும், நரகமென்றும், நன்மையென்றும், தீமையென்றும், வீணர்கள் வித்தியாசப்படுத்திச் சொற்ப வாழ்நாளில் அநுபவிக்கக்கூடியசுகத்தை அநியாயமாய் இழந்துவிடுகிறார்கள்.

கண் கண்டதே காட்சி என்பதை அவர்கள் உணர்வதில்லை. செத்தபின் யார் எப்படிப் போகிறார்களோ,யார்தான் எதைக் கண்கூடாகக் கண்டவர்கள். எல்லாம் கட்டுப்பாடே ஒழிய வேறில்லை. இருக்கிறவரை ஏதோசந்தோஷமாய்ச் சகலபோகபோக்கியங்களையும் அநுபவிப்பதல்லவோ மேல்? அநியாயமாய் எல்லாவற்றையும் இழக்காதே. இவ்வாறான பாக்கியம் எங்களுக்குக் கனவிலும் கிடைக்குமா? நாங்கள்எல்லாம் எத்தனையோகஷ்டப்பட்டு இந்தபோகபோக்கியங்களை அநுபவிக்கமுயல்கின்றோம்.உன் அதிர்ஷ்டவசமோ,எல்லாம் ஒருங்கே வாய்ந்த வண்ணமாக இருக்கின்றன. "நங்காய்! மூத்தோர் சொல் வார்த்தை யமிர்தம்" அதை நீ எள்ளித் தள்ளாதே. கரணம் தப்பினால் மரணம். அவ்வணிகன் சொற்பநாளே உனக்குக் காலங்குறித்திருக்கிறான். அதற்குள் உனக்கு வேண்டிய சௌகரியங்களைத் தெரியப்படுத்து. எல்லாம் உடனே முடிந்துவிடும், நீ மட்டும் அவனுக்கிணங்கி அவன் மனைவியாயின் அவனது பட்டமகிஷியாவாய். எத்தனையோ ஸ்திரீகள் அவனுக்குண்டு. உன் மாதிரியாகவே சிலர் பலநாள் பிடிவாதம் செய்து, பின் என் பேச்சுக்கிணங்கிச் சுகமாய்க் காலங்கழித்து வருகிறார்கள். உனக்கு வேண்டிய நகைகளும் பட்டுப் பட்டாடைகளும் வாகனாதிகளும் ஏவலாட்களும் எத்தனையோ விதங்களாய் அளிக்கத் தீர்மானித்திருக்கிறான். இன்று, இரவில் நீள நினைந்து சீர்தூக்கிப்பார், நாளைக்காலைவருவேன், அப்பொழுது உன் தீர்மானம் சொன்னால் போதும். அதுவரை உனக்கு யோசிக்க இடங்கொடுக்கிறேன், நீ புத்திசாலி, தீர்க்காலோசனை பண்ணுவதில் மகா தீரமு

டையவள். அவ்வாறு செய்வது உத்தமந்தான். ஆனால் நான் சொல்லியிருக்கும் ஆணித்திறமான மொழிகளை நன்கு சீர்தூக்கிப் பார். ஒவ்வொன்றும் அநுபவத்தாற் கூறப்பட்டது. இன்று நான் நெடுநேரம் இங்கு இருந்துவிட்டேன், நான் போய்வருகிறேன் என்று செலவு பெற்றுக்கொள்ள எழுந்திருக்கையில், "இதுவும் ஓர் ஆச்சரியந்தான். நம் ஜன்மத்துக்கு இந்தத் தீமொழிகளைக் கேட்க வேண்டிய விதியிருந்ததுபோலும், எல்லாம் பூர்வஜன்ம கர்மபலன் என்கிறார்களே என்று நினைத்துத் தன் வைரம் போன்ற மனத்தை இதுகாறும் பொறுமையுடன் திடப்படுத்திக் கொண்டிருந்ததைப் போலவே பின்னும் திடப்படுத்திக்கொண்டு பின் வருமாறு விடை பகர்வாளானாள்:—"கணிகாய்! குலத்தளவே யாகுங் குணம்" என்ற முதுமொழி பொய்க்குமா? "காவறுனே பாவையர்க்கழகு" என்பதைக் கேட்டுமிருக்கமாட்டாய் போலிருக்கிறதே. உண்மை தான். இக்காலப் பெண்பாடசாலைகளில் இவ்வித உத்தம வாக்கியங்கள் பெண்கள் படிக்கும் புத்தகங்களில் கூடக் காணவில்லையல்லவா? லோகம் முழுதும் செல்வத்திலும் சுகத்திலும் மயங்கிக் கிடக்கிறது. எது நித்திய சுகம், எது அநித்திய சுகம் என்பதை நீ எப்படி யறிவாய்! உன் குலத்தில் ஒரு நாளைக்காயினும் உன் பெற்றோர்கள் தக்க ஞானமொழிகளைப் புகட்டியிருந்தால் நீ பேசுவாயா? அவரை ஒன்று போடத் துவரை ஒன்று முளைக்குமா? ஜாதிக்குத் தகுந்த புத்திதானேமேலிடும். 'சொல்லால் அறிப ஒருவனை' என்பது பொய்க்குமா? நீ பேசின விஷயங்களெல்லாம் கடவுள் இல்லை என்று சொல்கிற நிரீசுவரவாதிகள் பேசும்மொழிகளாகவே இருக்கின்றன

"தெய்வ முளதென்பார் தீய செயப்புகின்
தெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும்—தெய்வம்
இலதென்பார்க் கில்லைத் தம்மின்புதல்வர்க் கன்றே
பலகாலுஞ் சொல்வார் பயன்"

நீ இதுகாறும் எதைப்பற்றிப் பேசிவந்தாயோ அதெல்லாம் சின்னாளிருந்து பின்பல் பிணியைத் தரக்கூடியது. ஒத்தகுலமும் அறிவும் அழகும் பருவமுமுள்ள குணவானைப் பதியாக அடைபவள் பாக்கியசாலி. எல்லோரும் சீதையும் இராமனாகவும், தமயந்தியும் நளனாகவும்,



சாவித்திரி சத்தியவானாகவும், சந்திரமதி அரிசந்திரனாகவும் இருக்க நினைத்தால் முடியுமா? பூர்வஜன்ம புண்ணியம் வேண்டுவதில்லையா? நான் உற்றார் பெற்றாரையும் என் அருமைத் தமயனையும் இழந்த பின்னர் இவ்வுலக சுகத்தைச் சிறிதும் விரும்பேன். வீணாக வார்த்தைகளைச் சிதறிப் பாவத்தைத் தேடிக்கொள்ளாதே. என் பெற்றோர் என் இளமைப் பருவத்தில் புகட்டிய போதனைகள் என் மநதின்கண் வேரூன்றியிருக்கின்றன. இம்மாதிரியான தீச்சொற்களை விதிவசத்தால் இன்றுதான் கேட்கலானேன். அதுவும் நான் செய்த துஷ்கர்மம். மனத்தினாலும் நினைக்கவொண்ணாத மொழிகளை யெல்லாம்புகன்றாய். உன் துர்க்குலத்திற் குரியமொழிகளை நீயே வைத்துக் கொள். எத்தனையோ இழிவான பிறப்புக்களை யெல்லாம் தாண்டி மனுஷ ஜன்மமெடுத்தும் அதில் நற்கருமம் செய்து ஜன்மத்தை ஈடேற்றிக் கொள்ளாமல் பாழ் நரகில் வீழ வழிதேடலாமா? ஏன் உனக்கு இந்தத் துர்ப்புத்தி? பணப்பேராசையன்றோ உலகத்தில் எதையும் செய்ய மனிதர்களைத் தூண்டுகின்றது. செல்வமும் யாக்கையும் நிலையாக மாட்டாதென்பதற்குப் பிரதிதினம் லோகத்தில் பல திருஷ்டாந்தங்களைப் பார்க்கிறோம். அற்பமாகிய போகிச்சுகத்தின் பொருட்டு நெடுங்கால நன்மையை இழக்கலாமா? என் தாயார் பலமுறை பலஉத்தமிகளுடையகதைகளைக்கூறியது இச்சமயம் என் ஞாபகத்துக்கு வருகிறது. "சிறுபோதே கல்வி, சிலையில் எழுத்து" என்று கூறுவது உண்மையே. அம்மொழிகளே! எனக்கு இச்சமயம் தக்க காப்பாகின்றன. அருந்ததி, அனசூயை, சுகூஷாமை, துரோபதை முதலிய உத்தமிகளுடைய சரித்திரத்தை ஸ்திரீகள் ஒவ்வொரு நிமிஷமும் சிந்திக்கக்கடவர். முற்கூறிய சீதாதேவி, தமயந்தி, சாவித்திரீ, சந்திரமதி முதலிய உத்தமிகளுடைய வழிகளைப் பின்பற்றக்கடவர். சீதை தன் பதிவிரதாதர்மத்தால் அக்கினியைக் குளிர்வித்தாள். தமயந்தி தன்மீது மையல் கொண்ட வேடனை எற விழித்துப் பார்த்துச் சாம்பராக்கினாள். சாவித்திரீ தன் உத்தமகுணத்தால் யமன் வசப்பட்ட தன் பர்த்தாவின் பிராணனை மீட்டுவந்தாள். சந்திரமதி தன்கற்பின்மகிமையால் தன் புருஷன் சத்தியத்தை உலகத்தில் நிலைநிறுத்தினாள். மைத்திரேயி, கார்க்கி முதலிய உத்தமிகளிடத்தில் அரண்யவாசிகளான ரிஷிகள் எல்லாரும் ஞானம்கேட்டு மகி

மையடைந்தார்களென்றால் உத்தமிகளுடைய மகிமையைச் சொல்லவும் வேண்டுமோ? கணிகாய்! உன் ஜாதிக்குரிய தர்மங்களையும் நீ சரிவர நடத்தினால் உனக்கும் நற்கதி யுண்டாகுமே, அவ்வாறின்றி ஏன் பாவ ஜன்மத்தில் பின்னும் பாவத்தைச் சுமக்கவழிதேடுகிறாய்? நேரமாய்விட்டது, வீட்டுக்குப்போ. துஷ்டர்களுடைய கூட்டுறவு அதிக நேரமிருத்தல் கூடாது. அதனால் விளையும் தீங்கு பல. சற்றுந் தாமதியாதே. வந்த வழியைப் பார்த்துக்கொண்டுபோ. இனி இத்துர்ப்போதனைகளை எவர்க்கும் போதிக்காதே'' என்று கூறிச் சரேலென்று தன்னிருப்பிடத்துக்குச் சென்றாள் சுமதி.

(இன்னும் வரும்.)

எஸ். சாமிநாதையர்.

---

## நன்மொழி.

115. சிரத்தை என்பது குருவின் உபதேசத்திலும் ஞானசாஸ்திரத்திலும், தன்னிலும் நன் னம்பிக்கை கொள்ளுதல். ஞானதீக்ஷை குருவால் கிடைக்கும் சமயத்தில், அவர்பால் நம்பிக்கை குன்றாமலும், தான் மனச்சோர்வும் நொய்மையும் கொள்ளாமலும், தைரியமாக நிற்றலும், எல்லாம் ஈசுவர அம்சமுள்ளவை, தானும் ஈசுவர அம்சமுள்ளவன் எனக் கருதலுமாம். உண்மையில் எல்லோரும் ஈசன் எனக்கருதி நடக்கிறவன் குரு அடைந்திருக்கும் உயர்பதவி தனக்கும் கிடைக்கும் என உறுதி பெறல்வேண்டும்.

116. ஸமாதானம், மநநேர்மை அல்லது உபசாந்தி என்பது வேண்டுதல் வேண்டாமை இல்லாத மநோநிலை. “வானின்று இடிக்கில் என்? மாகடல் பொங்கில் என்? கால்நின்ற செந்தீ கலந்துடல் வேகில் என்? தான் ஒன்றி மாருதம் சண்டம் அடிக்கில் என்? நான் ஒன்றி நாதனை நாடுவன்'' இத்தன்மையான மநோதைரியமுள்ளனாய் இருத்தலே ஸமாதானமாம்.

---

## காலஞ்சென்ற, கனந்தங்கிய வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவர்கள்.

பிரஹ்மஸ்ரீ வி.கிருஷ்ணஸ்வாமி ஐயர், B. A., B. L., C. S. I., அவர்கள் நம்மில் யாவரும் எதிர்பாராதபடி, திடீரென அகாலமரணத்தையடைந்தார்கள் என்ற துக்க சமாசாரத்தைக் கேட்க நம்மவர்கள் படும் துயரத்தை இவ்வளவினதென்று நம்மால் அளவிட்டுரைக்கமுடியாது. உயர்நலமமைந்த உத்தம புருஷர்களாக மதிக்கப்பட்டு விளங்கிய எத்தனையோ பேர்களை இதற்கு முன்னரும் நமது இந்திய நாடு இழந்து துக்கப்பட்டிருக்கின்றது. என்றாலும், இந்த உத்தம புருஷனை இழந்த விஷயத்தில் நமது இந்திய நாடும், முக்கியமாய் நமது சென்னைராஜதானியும் படுந்துக்கமானது முன்னர் ஒரு நாளும் பட்டறியாத பெருந்துக்கமாக இருக்கின்றது. ஏனெனில், உத்தம புருஷர்களெனக் கொண்டாடப்பட்டுத் தமது பேரையும் புகழையும் நிலைநிறுத்திச் சென்றவர்களான நமது முன்னோர்களிற் பெரும்பான்மையோர், பொதுநலங்களான எல்லாக் காரியங்களிலும் பிரவேசியாமல் குறிப்பான சில காரியங்களில் மட்டும் பிரவேசித்து அவற்றைப் பலவழிகளாலுஞ் செவ்வையாகச் செய்துவந்தார்கள். நமது ஐயரவர்களோ எனில், நற்காரியங்கள் என்றுசொல்லப்படும் எல்லாத் துறைகளிலும் பிரவேசித்து, அவற்றைப் பரிமளிக்கும்படி செய்யவேண்டுமென்ற முழுநோக்கத்துடன் தமது கல்வித்திறத்தாலும், விடாமுயற்சியாலும், சரீரப்பிரயாசத்தாலும், ஆயிரக்கணக்காகக் கொடுத்துவந்த திரவியசகாயத்தாலும், பெரிதும் மேன்மைபெறச் செய்துவந்த உத்தமோத்தம மகோபகாரியாகையால் இவருடைய மரணமானது பாஷாபிமாநிகள், மதாபிமாநிகள், தேசாபிமாநிகள் எனப்படுகின்ற பல நிறத்தவர்களுக்கும் அளவுகடந்த பெரிய துக்கத்தை உண்டாக்கிவிட்டது. இவர்களுடைய அகால மரணத்தால் இந்திய நாடு தனது அருமைப்புதல்வர்களில் ஒருவரையும், சென்னை ராஜதானி தனது நாயகனையும், ஆர்யமதம் தனது ரக்ஷகனையும், பிரஹ்மஞான சபை தனது சகோதரனையும், ஸம்ஸ்கிருத பாஷை தனது நண்பனையும், தர்மரக்ஷணஸபை முதலாகிய அரிய பெரிய சபைகளும் வித்துவான்களும் தமது வள்ளலையும், ஏழைகள் தமது பிரபுவையும், சென்னைமாநகரம் தன்னை அலங்கரித்துவந்த ஒப்பற்ற ஒரு கனவானையும் இழந்துவிட நேர்ந்தது என்னலாம்.

சமீபகாலத்தில், அதாவது சற்றேறக்குறைய ஒரு மாதத்திற்கு முன் இந்த அரிய மேதாவியார், பட்டதாரிகளாகிய மாணாக்கர்களின் கூட்டத்தின் மத்தியில் சீரிய சிங்கம்போல எழுந்துநின்று உபந்யாவித்த கம்பீரமான அந்தச் சிங்கநாதமானது, (Convocation address) அந்தோ! இன்னும் நம் செவிகளில் சுழன்றுகொண்டேயிருக்கின்றதே! அத்தருணத்தில், இவரது முகவிலாசத்தையும், இவரது உற்சாகத்தையும், இடிமுழக்கம்போன்ற இவரது குரலையுங்கண்டுங் கேட்டும் பெருமகிழ்ச்சியுற்றுப் புகழ்ந்து பேசிக்கொண்டிருந்தவருக்குத்தாம் இவர் இவ்வளவு சீக்கிரத்தில் இறந்துவிடப்போகிறாரென்பது தெரியும்? யாதொரு உபாதியுமின்றிப் பெரிய குதூகலத்துடன் டில்லி தர்பாருக்குச்சென்றவர்கள் தர்பார்காலத்தில் அங்கே இருக்கமுடியாதபடி மிகுந்த சுரத்துடனே சென்னைக்குத்திரும்பினார்கள். சென்னைக்கு வந்ததும் துடையில் சிறிதாகப் புறப்பட்டிருந்த சிரங்கானது ராஜப்பிளவையாகி, வரவர அதிகரித்து, சிறந்த வைத்தியர்கள் தங்களால் இயன்றவரை முயற்சித்துச் சிகிச்சை செய்ததிலுங் குணப்படாமல், நம்முடைய தௌர்ப்பாக்கியத்தினால் சென்ற மீ 28-ம் தேதி காலை 6 மணிக்குத் தேகவியோகமாயினார்கள். இவ்விசனகரமான சமாசாரம் இந்தியா எங்கும் பரவி எல்லாரையும் துக்கசாகரத்தில் அமிழ்த்தியது. இறக்கும் காலத்தில் இவருக்கு 48 வயதுதான். வியாதிவந்தபின், தாம் மரணம் அடைவோமென்று நினைத்தாரில்லை. தாம் எடுத்த ஜன்மத்தின் காரியம் முடியவில்லையென்றும், இன்னும் உலகத்திற்கு அநேகம் கைங்கரியங்கள் தாம் செய்ய வேண்டுமென்றும், அதனால் சமீபத்தில் மரணமில்லையென்றும் பிரஸ்தாபித்தாராம். "நெருநல் உளனொருவ னின்றில்லையென்னும்,—பெருமை யுடைத்திவ் வுலகு" என்ற ஆன்றோர் மொழிக்கிணங்க, இவர் போய்விட்டார். இறக்குங் காலத்தில், உயர்நலம் அமைந்த அந்தஸ்தாகிய,கவர்னரின் மந்திராலோசனைசபையில் அங்கத்தினராக விருந்தார். ஆங்கில துரைத்தனத்தில் இந்தியர் பெறக்கூடிய உயர்ந்த அந்தஸ்து இதைவிட மேலானதில்லை. நாலுவருஷம் இந்த உத்தியோகத்தை வகித்திருப்பரேல் ஜனாநுகூலமான இன்னும் எத்தனையோ நற்கருமங்களை இவர் செய்திருப்பார். எல்லா நன்மைகளையும் அளித்த கடவுள் ஆயுளைமாத்திரம் பூர்ணமாக இவ



ருக்கு அளிக்கவில்லை. அற்ப ஆயுளையுடையவரானார். இந்த அற்ப ஆயுஸ் காலத்திலும் இவர் செய்த நற்காரியம் என்றும் அழியாத புகழுடம்பை உண்டுபண்ணியிருக்கின்றது. சென்ற பத்து வருஷங்களுக்குள் ஏற்படுத்தப் பெற்றுள்ள நற்கரும நோக்கமுள்ள சங்கங்கள், சபைகளுள் இவர்கள் முயற்சியாலும், இவர்கள் ஆதரவாலும், இவர்கள் திரவிய சகாயத்தாலும் உண்டானவைகள் பல. முக்கியமாக இந்தியன்பாங்கு, கைத்தொழில் அபிவிருத்திசபை, தர்மரக்ஷணஸபை, வேங்கடரமண வைத்தியசாலை, உயர்தர ஸம்ஸ்கிருத வித்தியாசாலை, ரானடே புஸ்தகசாலை என்பவைகளாம். இயற்கையாகவே புத்திமான், கல்விகேள்விகளால் அகன்ற அறிவுடையவராயினர். ஆங்கில பாஷை, ஸம்ஸ்கிருத பாஷை இவ்விரண்டிலும் விசாலமான படிப்புள்ளவர். வைதிக லௌகிக ஸம்பிரதாயங்களை நன்குணர்ந்தவர். ஆரியமதத்தில் நல்ல பற்றுள்ளவர், ஆசாரசீலர். ஈசுவரபக்தர். மதத்துவேஷம் இல்லாதவர். எல்லா மதங்களிலுமுள்ள உயர்ந்தோர்பால் அன்பும் ஆதரவுமுள்ளவர். சமீபகாலத்தில் ஆரிய சமயம் கிறிஸ்து சமயம் இவ்விரண்டையும் ஒப்புநோக்கி ஆராய்ச்சி செய்து நல்ல ஒரு வியாசம் எழுதுவோர்க்கு சம்பாவனை கொடுப்பதாகவும் வாக்களித்தார்கள். அன்பார்ந்த விரிந்த ஹிருதயத்தினர். இவரிடம் போய் யாசித்து வெறுங்கையுடன் திரும்பின ஏழைகள் இலர். உடல், பொருள், ஆவி என்னும் இவற்றை லோகோபகாரத்துக்கென்றே கொண்டிருந்தவர். "ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்—பேரறி வாளன் திரு" என்னும் குறள்வாக்கியத்துக்கு நல்ல நிதர்சனமாக விளங்கிவந்தார். தமிழ்ப்பண்டிதர் ஒருவர் இவரிடம் போய் யாசித்தபோது 'நீர் படித்திருக்கிறீர் என்ற காரணத்தால் மட்டும் நான் உமக்குச் சகாயம் செய்யமாட்டேன். நீர் படித்தறிந்தவிஷயங்களைப் பிரசங்க மூலமாகவோ புஸ்தகங்கள் மூலமாகவோ பிறர்களுக்குத் தெரிவித்துப் பயன் பெறச் செய்வதாயிருந்தால்மட்டுந்தான் நான் உமக்கு உபகரிப்பேன்' என்று கூறினர். இதனாலும் இவருடைய லோகோபகாரசிந்தையானது நன்கு வெளியாகின்றதல்லவா! "ஈதல், இசைபட வாழ்தல், இதுவல்லது—ஊதியம் இல்லையுயிர்க்கு" என்ற அமுதவாக்கை உள்ளபடி கடைப்பிடித்து ஒழுகிய மஹான் இவரே. சிலர் இவரை முன் கோபி என்று ஒருவாறு

குறைகூறக்கூடும். அக்கோபத்தின் பயனுகை யாதொரு கெடுதியும் விளையாமையால் நாம் இவரது கோபத்தை ஒரு கோபமாகக்கூறமாட்டோம். இவரது புத்தியின் தீக்ஷண்ணியமும் படபடப்பும் வேகமும் இவரை ஒரு முன்கோபிபோலத்தோன்றும்படி செய்தன என்றே சொல்வோம்.

1885-ம் ஆு ஹைகோர்ட்டு வக்கிலாக ஆயினர். சில வருஷங்கள் அதிக வேலையில்லாதவராக இருந்தனர். பின்பு அந்த உத்தியோகத்தில் தலைமை ஸ்தாநத்தை வகித்தார். சென்னை யூனிவெர்ஸிடியின் அங்கத்தினராக ஆனார். பின்னர் அதிலும் தலைமைஸ்தாநத்தை வகித்தார். அச்சபையின் எக்காரியத்திலும் ஊக்கத்துடன் முன்னிற்பார். பின்பு, சென்னைச் சட்டநிரூபண சபையில் யூனிவெர்ஸிடி பிரதிநிதியான அங்கத்தினராக ஆயினர். அச்சபையில் அநேக சமயங்களில் இவர் செய்த புத்திசாதுர்யமான பேச்சைக் கண்டு, கனந்தங்கிய அக்காலத்திய கவர்னரவர்களும் பலமுறை மெச்சினார்கள். இவர்களுக்குள் அதிக பிரியமான சிநேகம் ஏற்பட்டது. பின்பு, சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜாக நியமிக்கப்பட்டார். ஒரு வருஷந்தான் அவ்வேலையை நடத்தினார்கள். அதற்குள் இவரது புத்தியின் திட்பமும், வித்தையின் விலாசமும் அந்த உயர்தர நீதி ஸ்தாநத்திற்கு ஒரு தேஜஸை யுண்டுபண்ணின. கடைசியில் இவர் கவர்னரின் மந்திராலோசனைசபையில் ஓர் அங்கத்தினராக உத்தியோகம் வகித்தார். 11-மாசந்தான் இந்த வேலையைப் பார்த்தார். இதற்குள் ராஜாங்கத்தாருக்கு இவர்பால் உள்ள மதிப்பும் நன்னம்பிக்கையும் மிகப்பெருகியன. ஜநங்களுக்கு இவர்மீதுள்ள விசுவாசமும் அன்பும் அளவற்றது. பிறருடைய சிபார்சு இன்றித் தம்முடைய புத்தியின் பயிற்சியாலும், கல்வித்திறமையாலும், விழுமிய குணத்தாலும், உயர்ந்த சீலத்தாலும் புகழும் பிரதாபமும் பெற்ற புண்ணியரென எல்லாராலும் நன்குமதிக்கப்பெற்றார். இவர் மரணத்தால் பொதுவகையாக இந்தியாவுக்கும், சிறப்புவகையாக நம் சென்னைராஜதாநிக்கும் பெரிய நஷ்டம் உண்டாயிருக்கிறது. "இவர் ஸ்தாநத்தை வகிக்க எவர் இருக்கிறார்?" என்ற வினவிற்குத் திருப்தியான விடையளிக்க முடியவில்லையென அநேக அறிஞர்கள்



மனவருத்தத்துடன் தயங்குகிறார்கள். 'எடுத்த ஜந்மத்தின் காரியம் பூர்த்தியாகவில்லை' யென இவர்தாம் இறக்க நாலு தினத்திற்குமுன் சொன்னமையாலும், பரோபகார சிந்தையுள்ளவராக இருந்தமையாலும், ஸ்தூலசரீரம் நீத்தாலும் தியகுணம் தியசெயல் தியஎண்ணம், அற்பமேனும் இல்லாதவராய் இருந்தமையாலும், அதனால் புவர்லோக அநுபவம் சிலநிமிஷங்களாக இருக்கக்கூடியதாதலாலும், தியாகத்திலே கண்ணுங்கருத்து முள்ளவராதலால், சுவர்க்கலோக சுகாநுபவ இச்சையைத் துறப்பாராகையாலும், அதிசீக்கிரம் சரீரமெடுத்து இன்னும் அதிக சௌகர்யமுள்ள குடும்பத்திற் பிறந்து திடசரீரியாக ஜநோபகாரார்த்தம் திரும்புவார் என நினைக்கிறோம். இத்தகைய ஜீவாத்மா அவதார புருஷன் எனவே மதிக்கலாம்.

பத்திராதிபர்.

---

## ஸ்ரீமாத். பி. எஸ். ராஜகோபாலையர் B. A., B. L., F. T. S., அவர்களின் மரணம்

இவர்கள் நாளிதுமீ 6-உ சநிக்கிழமை இராத்திரி 1-மணிக்கு மூச்சுக்குத்தினால் மார்பு அடைக்கப்பெற்று இராத்திரி 3-மணிவரையில் அந்த வியாதியால் வருத்தப்பட்டு இராத்திரி சுமார் 4-மணிக்குத் தேகவியோகமானார். இது மிகவும் பரிதாபமான மரணம். திட சரீரமுள்ளவராகவும் வியாதியில்லாதவராகவும் தோன்றினர். இறக்குங்காலத்தில் சுமார் 35-வயதுக்குட்பட்டவராகவே யிருந்தார். மதுரை பிரஹ்மஞாந சபையின் அங்கத்தினர்களுள் இவர் ஒரு முக்கியஸ்தர். இவர் நமது பிரஹ்மஞாந சபையின் அபிவிருத்தியில் நோக்கமுள்ளவர். பிரஹ்மஞாந சாஸ்திரங்களை ஐயமறப்படித்துத் தெளிந்தவர். இப்போதுதான் சமீபத்தில் மூன்றாவது ஸம்ஸாரம் விவாகம் செய்துகொண்டனர். இவர் மரணத்தால் இவர் குடும்பத்திற்கும் சிநேகிதர்களுக்கும் பெருந்துக்கம் உண்டாயிருக்கிறது.

பத்திராதிபர்.

காலஞ்சென்ற கநந்தங்கிய

## வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் B. A., B. L., அவர்களின் சரித்திரச் சுருக்கம்.

---

[இது விக்டோரியா எட்வர்ர்டு ஸரஸ்வதீ விலாஸத்தின் சங்கஸ்தாபந திநமாகிய 1911ஞு நவம்பர்மீ 11உ அன்று வாசிக்கப்பெற்றது.]

அறுசீர் விருத்தம்.

நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நற் பயனளிக்கும்
நலத்தால் மிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றே; நல் லார்குணஞ்சொல்
வதுவும் நன்றே;
நல்லார்தம் முடனிணங்கி யிருப்பதுவும் நன்றே" யென்
றுரைத்த நங்கை
நல்லார்சொற் கடைப்பிடித்திங் கொருநல்லோன் குணஞ்சிறிது
நவில்வேன் மன்னோ.

எழுசீர் விருத்தம்.

காவிரி நதியும், கடவுளா லயமும்,
கடிமலர்ப் பொய்கையும், பொழிலும்,
தீவிரி வேள்விச் செழுமறை யவர்தந்
திருத்தகு புனிதமா ளிகையும்,
நாவிரி கலைதேர் கழகமும், சைவர்
நல்லறச் சாலையும் மடமும்
தூவிரி கவிஞர் துதிகொளத் துலங்கும்
சோழநா டெனும்வள நாட்டில். (1)

சீர்பெறு தலங்கள் பலபல; அவற்றுள்
செங்கண்மால் எங்கள்நா யகனை
ஏர்பெறு கமலம் ஆயிரம் அடியிட்
டிறைஞ்சுவான் ஒன்றொர்நாட் குறைய
ஆர்பெறு கண்கொண் டருச்சித்த தலமாய்,
அரிவிழி மங்கலம் என்னும்
பேர்பெறு பெருமை பெற்றதாய்ப் பெரிதும்
பிலபல மாகிய தலத்தில். (2)



மறையவர் குலமாம் பாற்கட லுதித்த
மாமதி யாய்க்கலை நிரம்பித்
தறையவர் தவமாய்த் தண்ணளி யுருவாய்ச்
சத்திய சீலனைக் கல்வித்
துறையவர் புகலாய் வேங்கட ரமணத்
தூயநற் பேரொடுந் தோன்றி
இறையவர் வியக்கும் முறைதெரி முன்சீப்
எனச்சிறந் தானொரு மேலோன். (3)

ஒப்பருங் கலையால், ஒழுக்கினால், உணர்வால்,
ஒளித்துறை செயாமன வலியால்
செப்பருங் குணமாங் குன்றிடை யிவர்ந்த
சிங்கமாய்ச் சிறந்தஅத் திறலோன்
தப்பருங் குணத்தில் தன்னையே போலத்
தனயர்கள் சிலவரைத் தந்தான்
அப்பரி கணிதர் தமக்குள்முன் னவனாய்
அவதரித் தவனையென் சொல்கேன். (4)

சத்தியம் கைக்கொண் டிடலிற்பன் னிரக்கந்
தழுவலிற் சாமிநா தப்போர்க்
கொத்தியல் புருஷ ரிஷபமாய், யாதும்
இழுக்கமில் ஒழுக்கமுள் ளவனாய்ப்,
பத்தியிற் சிறந்த பாகவ தத்தைப்
பன்முறை பயின்றபண் டிதனாய்,
நித்தியப் பொருளின் நிறைகுண நினைந்து
நெஞ்சம்நெக் குருகுமா தவனாய். (5)

நிதிபதி பிரகற் பதியென நிறைந்த
நெடும்பெருஞ் செல்வனாய், நீதி
அதிபதி எனும்ஸப் ஜட்ஜியாய், அன்பி
னகமகிழ் காதலின் அமைந்த
சதிபதி யாகிச் சந்ததி தழையத்
தனயரைத் தந்துபின் துறந்தோர்
யதிபதி யாகி யிறையவ னடிக்கீ
ழெய்தினன் எய்திய புகழான். (6)

அன்னவன் தனக்கோர் கையதாய்க், கண்ணாய்,
ஆருயி ராய்அரு மருந்தாய்ப்
பின்னவ னாகிப் பெற்றவர் புரிந்த
பெருந்தவப் பயனெனப் பிறந்து,
'சின்னவன் இவனோர் பெரியனாய்த் திகழ்வன்;
விளைபயிர் முளையிலே தெரியும்'
என்னநல் லறிஞர் வியந்திடப் பால
கிருஷ்ணனே யெனவளர்ந் தனனால். (7)

காலையில் எழுவான், கடன்களை முடிப்பான்,
கருத்தொடுங் கலைகளைப் படிப்பான்,
மாலையிற் சிவன்மால் ஆலயந் தொழுவான்,
மனத்திடைச் சிலையெழுத் தெனப்பல்
நூலையும் பதிப்பான், நுண்ணறி வினன்பின்
நுவல்புகழ்த் துரைத்தனக் கல்விச்
சாலையிற் சேர்ந்து சகலமுந் தேர்ந்து
தனிப்பெரும் பட்டமும் பெற்றான். (8)

இட்டமுங் கருத்தும் வைத்தருங் கலைகள்
யாவையும் உய்த்துணர்ந் ததற்பின்
சட்டமும் பயின்றோர் உன்னத நீதித்
தலத்துறும் வக்கிலாய்ச் சார்ந்து
கட்டமும் பெரிய நட்டமும் அடைந்தார்
கட்சியை நுட்பமாய் உணர்ந்து
திட்டமுந் தெளிவுஞ் செறிதர விரைவாய்த்
தெரிப்பவன் எனமிகச் சிறந்தான். (9)

சென்னையிற் சிறந்த வக்கின்மார் குழுவில்
தேசுறும் அணியென விளங்கி,
அன்னையிற் பெரிய தண்ணளி யவனாய்
அறம்பல திறம்பெறப் புரிந்து,
'முன்னையில் இவன்போற் பொன்மிகப் படைத்து
முகிலெனப் பொழிந்தவர் இல்லை,
பின்னையில் இல்லை' எனப்புவி புகழப்
பிறப்பினும் பெரும்பயன் பெற்றான். (10)



ஊரிடைப் பழுத்த செழுந்தருக் கனியும்
ஊருணிப் புனலுமே போலாம்
காரிடைப் பயின்ற கொடைநலம் உடையான்
கட்படுந் திரு,எனும் மொழியைப்
பாரிடைச் சிறக்கச் செய்தஇப் பெரியோன்
பண்ணிய புண்ணியச் செயல்போல்
யாரிடை எவர்தாம் கண்டனர்? அந்த
யாதவர் கோனிடத் தல்லால். (11)

மெய்யுறு பிணிபோய் யாவரும் சுகிக்க
வேங்கட ரமணநற் பெயரால்
உய்யுறும் ஆயுர் வைத்திய சாலை
ஒன்றினைத் திறந்தனன், திறந்து,
நையுறு நோயைத் தீர்த்திடு முறையில்
நன்முறை யீதென எவர்க்கும்
கையுறு நெல்லிக் கனியினிற் காட்டிக்
கண்ணையுந் திறந்தனன் மாதோ. (12)

உடலுறு நோயைத் தவிர்த்திட மருந்தை
யுதவிய தொன்றுமோ, ஒளிசெய்
மடலுறு தாரான் வடமொழிக் கலைகள்
வழங்குமோர் கழகமும் அமைத்துக்
கடலுறு பிறவி யிடைப்படுத் துயிரைக்
கடக்கொணா வகைமடுத் தொடுக்கும்
அடலுறு மாயைப் பிணிதவிர் மருந்தும்
அளித்தனன் அருமருந் தனையான். (13)

இன்னவன் தருமம் இவ்வள வேயோ,
இளகிய தருமசிந் தனையால்
முன்னவர் தருமந் தனைப்புரந் திடலே
முதன்மையாந் தருமமென் றுணர்ந்திம்
மன்னவன் 'தரும ரக்ஷண சபையை'
வைத்தறம் நிலைபெற வளர்த்தே
அன்னவர் தருமா லயங்களும் மடமும்
அழிவுறா வகைநிறுத் தினனால். (14)

"கற்றவர் தம்மைக் கற்றவர் தாமே
காமுறு வார்"என முன்னஞ்
சொற்றவர் மொழிக்கோர் நிதர்சன மாகத்,
தூயரில் தூயராய்ச் சிறந்த
நற்றவர் நமது ரானடே குணங்கள்
நனிவியந் திருந்ததை யன்றி
மற்றவர் பெயராற் புத்தகச் சபையும்
மயிலையிற் பயில்வுறச் சமைத்தான். (15)

முந்திய நிதியில் முதலிழந் தழுந்தார்
முறையொலிக் கிரங்கிஇக் கூர்மைப்
புந்தியன் பெரிதும் ஒப்புர வறியும்
புண்ணிய னாதலால், உடனே
'இந்தியர் நிதி'யென் றொருபெரு நிதியை
எழில்பெற நிறுத்தினன், இன்று
வந்தியர் பாடும் மன்னவர்க் குரிய
வரிசையில் வந்தமா மறையோன். (16)

பொய்த்தொழில் புரிந்து பொழுதெலாம் பழுதாய்ப்
போக்குவார், புராரிமா லயனும்
முத்தொழில் ஓயா துஞற்றலை யுணரார்,
மூடராய் வீணராய் நமர்கள்
எத்தொழி லேனும் ஒருதொழில் உஞற்று
திருந்திடல் தகாதெனக் கருதிக்
'கைத்தொழிற் சங்கம்' ஒன்றுதா பித்தான்
கல்வியின் களஞ்சியம் அனையான். (17)

பண்ணரும் அறங்கள் இன்னணம் பலவும்
பழுதிலா முயற்றியின் இயற்றி
நண்ணரும் புகழால் நானிலம் அளந்த
நான்மறைக் குலவிளக் கனையான்
எண்ணரும் ஹைகோர்ட் ஜட்ஜெனும் பெரிய
இறையவர் பதத்தையும் எய்தி
நுண்ணரும் மதியின் மாட்சியால் அந்த
நோன்பத ஆட்சியிற் சிறந்தான். (18)



வித்திய அறத்தின் செழும்பயிர் விளைவோ,
மேதினி புரிந்தபாக் கியமோ,
நித்திய மறையோர் செய்தவப் பயனோ,
நெடுங்கடல் உலகெலாம் புரக்கும்
சத்தியக் கவர்னர் கௌன்ஸிலின் மெம்பர்த்
தானமும் தான்வகித் துயர்ந்தான்
நத்திய நமது க்ஷேமமே கருத்தாய்
நாட்டினுக் குழைத்திடு நல்லோன். (19)

பிறந்தவர் இவன்போற் பிறந்தவர் இல்லை,
பெருங்கலை யனைத்தையுங் கற்று
நிறந்தவர் இவன்போல் நிறந்தவர் இல்லை,
நீதியின் நெறிமுறை செலுத்திச்
சிறந்தவர் இவன்போற் சிறந்தவர் இல்லை,
செகத்தெனச் செகமெல்லாம் புகழப்
பிறந்தவ னாமிக் கிருஷ்ணசா மிப்பேர்ப்
பெரியவன் பெரிதும்வா ழியவே. (20)

பண்டிதர், **P. R.** கிருஷ்ணமாசாரியர்.

---

## நன்மொழி.

---

117. தானே தனக்குப் பகைவனும் நட்டானும்
தானே தனக்கு மறுமையும் இம்மையும்
தானே தான்செய்த வினைப்பயன் துய்ப்பானும்
தானே தனக்குத் தலைவனு மாமே.

—திருமந்திரம்.

## சமாசாரம்.

இங்கிலாண்டில் யார்க்ஷ நகரவாஸியான தோமஸ்வில்லியம் பர்ஜஸ் என்பவர் டோவர் பட்டணத்திலிருந்து பிரான்சுதேசத்திலுள்ள கலேய் பட்டணத்திற்கு இடையிலுள்ள 60 மைல் அகலமுள்ள சமுத்திர வாய்க்காலை 22 மணி நேரத்துக்குள் சென்ற செப்டம்பர்மீ 6ௗ நீந்திக் கடந்தார். இது மனோதைர்யத்தையும் தேகவலிமையையும் தீரத்தனத்தையும் காட்டுகிறது. ஆனால் இதனால் என்ன பிரயோஜநம்? மீன்களும் கூட நீந்துகின்றன. அவைகளைக் கண்டு நாம் ஆச்சர்யப்படுகின்றோமில்லை யெனென்றால் அது ஈசுவர சிருஷ்டி. அதனால் ஈசுவரசக்தி விளங்குகிறது. ஈசுவரன் சர்வஞ்ஞன். மனிதன் கிஞ்சிக்ஞன். அதனால் அவன் செய்யும் செயல் அற்புதம் தானே.

கப்பல்களின் சமாசாரபத்திரிகை:— இப்போது கப்பல் யாத்திரை செய்பவர்கள், உலகத்தில் நடக்கும் சமாசாரங்களைத் தெரிந்துகொள்ளுவதற்கு இயலாதவர்களாக இருக்கிறார்கள். மார்கோநி என்பார் கண்டுபிடித்துள்ள தந்திக்கம்பியில்லாத மின்சார உபாயத்தால், தரையில் நடைபெறும் சமாசாரங்களைத் தெரிந்துகொண்டு சில நிபுணர்கள் ஜர்மானிய, பிரான்சு கப்பல்களில் வர்த்தமானப் பத்திரிகைகளைக் கப்பல் பிரயாணிகளுக்காக, கப்பலிலேயே பிரசித்தம் செய்து வருகிறார்கள் இது கப்பலில் பொழுதுபோக்குக்காக அநுகூலமாக இருப்பதும் தவிர கப்பலில் யாத்திரை செய்பவர்கள் உலக விஷயங்களை அப்போதைக்கப்போது தெரிந்துகொள்ளற்குச் சௌகரியமாகவும் ஏற்படுகிறது.

ஜீவ ஹிம்சை நிவாரண சங்கம்—இதன் காரியதரிசியவர்கள் அடியில் வருமாறு நமக்குத் தெரிவிக்கிறார்:—டில்லியில் தர்பார் நடந்திருக்கிறபடியால் இச்சங்கத்து வருஷாந்தர ஐந்து காட்சி வருகிற ஜனுவரி மாசம் கடைசியிலாவது பெப்ருவரி மாசம் முதலிலாவது நடத்தப்படும். மாமூலாய்க் கொடுக்கும் இனும்களைத்தவிர வண்டிகளை இழுக்கும் மாடுகளை வண்டிகளில் பூட்டுவதில் இப்போதைவிட நேர்த்தியானதும் சுகமானதுமான விதத்தைப்பற்றி உத்தமமான யோசனை காட்டுகிறவர்களுக்கு ஒரு விசேஷ இனுமும் கொடுக்கப்படும். இச்சங்கத்தின் கௌரவ காரியதரிசியவர்களைக் கேட்டு மற்ற விவரங்களை அறியலாம்.

தஞ்சாவூர் ஜில்லா பிராஹ்மணாள கிளைச் சங்கங்களின் பெரிய சபை, நாளிதுமீ 20, 21 தேதிகளில் 11-ம் முறை சீர்காழியில் நடத்தப்படும். மாதுஸ்ரீ ரான்ஸம் அம்மாள் அக்கிராசநம் வகிப்பார்.

பத்திராதிபர்.

---

## பூர்ணசந்திரோதய அநுபந்தம்.

பகவான் பதஞ்சலி மஹரிஷி அருளிச்செய்த

### யோகசூத்திரம்.

(தமிழ் மொழிபெயர்ப்பு.)

☞ பிறர் இதை அநுமதியின்றி பிரசுரம் செய்யக்கூடாது.

ப. நா.

மே அவித்தை என்ற பதம் ஞானமின்மை என்ற அர்த்தத்தைமாத்திரம் குறிப்பிடாமல் வித்தைக்கு எதிரிடையான அவித்தை என்ற பதார்த்தத்தைக் குறிப்பிடுகிறது. அவித்தை என்பது பாவ வஸ்துவாம். அபாவமன்று.

6. 𑌦𑍃𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑍋𑌰𑍇𑌕𑌾𑌤𑍍𑌮𑌤𑍇𑌵𑌾𑌸𑍍𑌮𑌿𑌤𑌾 ॥

பார்க்கிறவன் (திருக்) பார்க்கச் சாதநமான கருவியுடனே (தர்சந= அகங்காரத்துடனே) சேர்ந்து ஒன்றுய் இருப்பவன் போல நடைபெறும் நிலைமை அஸ்மிதையாம்.

குறிப்பு:—புருஷன் பார்க்கிறவன்(திருக்). தர்சநம், பார்வை யென்றும், பார்வைக்குச் சாதநம் என்றும் பொருள்படும். ஆனல் இவ்விடத்தில் சாதநமான அந்தக்கரணமாம். புருஷன் அந்தக்கரணத்துடன் சேர்ந்து ஒன்றுய் இருப்பது போலத் தோன்றுதல் அஸ்மிதை. ஆத்மாவான புருஷன் அநாத்மாவான அந்தக்கரணத்தில், நான் அதாவது ஆத்மா என்றபிமானித்தல் அஸ்மிதை என்பதாம், பார்க்கிறவனுன ஆத்மா பார்வைக்குச் சாதநத்தைத் தான் என்றபிமாநித்தல். பார்வைக்குச் சாதநமாவது அந்தக்கரணம். இது அகங்காரம், புத்தி, சித்தம், மநஸ், எனப் பிரியும். இவைகளில் அகங்காரம் மூலம். சித்தம் என்பது முன் அநுபவத்தைச் சிந்திப்பது, மநஸ் என்பது பிரகிருதத்தில் விஷயங்களை அறிவது, புத்தி என்பது அவிவேகம் ஏற்பட்டுச் சந்தேகம்வருங்கால் தீர்மானிப்பது. ஆத்மா எப்போதும் பரிணும மில்லாதவன். அந்தக்கரணம் எப்போதும் பரிணுமமுள்ளது. ஆத்மா சேதநன், அந்தக்கரணம் அநாத்மா, ஜடம். நாம் கோபம், துக்கம், சந்தோஷம் முதலிய அநுபவங்கள் அடையுங்கால், நான் கோபி, நான் துக்கி, நான் ஸந்தோஷி என்று சொல்லும்போது அந்தக்கரணத்துடன் சேர்ந்து அப்படி நினைக்கிறோம். ஆத்மா, அந்தக்கரணம் இவைகளின் உண்மையான ஸ்வரூபத்தை அறிந்தால் கைவல்லியம் ஏற்படும். கைவல்யம் என்பது தன்நிலை. ஆத்மாவும் அந்தக்கரணமும் சம்பந்தப்பட்டால் விஷயங்களின் அநுபவம் உண்டாகும். இன்றேல் தன் நிலையில் ஆத்மா இருக்கிறான்.

7. ஸுகாநுஶயீ ராக:॥

ஆசையானது ஸுகத்தையும் ஸுகஸாதநத்தையும் நோக்கியதாக நடைபெறுகிறது.

குறிப்பு:—முன்னநுபவித்த ஸுகத்தின் ஸ்மரணையால், சுகத்தின்மீது அல்லது ஸுகஸாதநத்தின்மீது உண்டாகும் ஆசை ராகம் எனப்படும். ஸுகசிந்தனையின்மேலுள்ள ஆசையும் இதில் அடங்கும்.

8. து:காநுஶயீ த்வேஷ:॥

வெறுப்பானது துக்கத்தையும், துக்கஸாதநத்தையும் நோக்கியதாக நடைபெறுகிறது.

குறிப்பு:—முன்னநுபவித்த துக்கத்தின் ஸ்மரணையால் துக்கத்தின்மீது அல்லது துக்கஸாதநத்தின்மீது உண்டாகும் வெறுப்பு துவேஷ மெனப்படும்.

9. ஸ்வரஸவாஹீ விதுஷோऽபி ததாரூடோऽபிநிவேஶ:॥

அபிநிவேசம் என்பது ஸ்வபாவமாய் வாஸநாரூபமாக நிகழ்வதாயும் ஸாதாரண மனிதனிடத்தில் போல வித்துவானிடமும்கூட ஸ்திரப்பட்டிருக்கிறதாயுமுள்ள ஒரு பற்று.

குறிப்பு:—உயிர்ப்பற்று, அதாவது முன் ஜந்மத்தின் மரணாநுபவம் பின் ஜந்மத்தில் வாஸநா ரூபமாக விருந்துகொண்டு, ஆத்மாவானது சரீராதிகளினின்று விட்டுப்பிரிதல் உண்டாகக்கூடாதென்ற மனோவிர்த்தி அபிநிவேசமாம். இஃது எல்லாப் பிராணிகளிடமும் உள்ளது. "நான் இறக்காமல் என்றும் இருக்கக்கடவேன்" என்ற பிரார்த்தனை ரூபமான விர்த்தி எல்லா ஜீவராசிகளிலும் தவறாமல் இருக்கின்றது. மரண அநுபவமில்லானுக்கு இஃது இருக்கப்பாலதன்று. மரணபயம் இருக்கின்றமையால் பூர்வ ஜந்மம் உண்டென அநுமானிக்கலாகும்; பிறந்த புழுவுக்குங்கூட மரணபயம் உள்ளது. இது பிரத்தியக்ஷம், அநுமாநம், சப்தம் என்ற பிரமாணங்களால் உண்டாகின்றதன்று, அறிவில்லானிடமும், அறிவுள்ளானிடமும் இது ஸமாநமாக இருக்கின்றது.



10. தே ப்ரதிப்ரஸவஹேயா: ஸூக்ஷ்மா:॥

வாசநாரூபமான சூக்ஷ்மமான கிலேசங்கள் எதிரிடையான பரிணமங்களால் தள்ளத்தக்கன.

குறிப்பு:—கிலேசங்கள் ஸ்தூலம், ஸூக்ஷ்மம் என இருவகைத்து: வாஸநாரூபமானவை ஸூக்ஷ்மமானவை; யோகியின் மநம் ஸமாதியை யடையும்போது மேற்கண்ட ஐவகையான கிலேசங்கள் வறுத்த வித்தைப்போலாகி மநத்துடன் லயமடைகின்றன.

மநம் விஷயங்களை நோக்கிப் பகிர்முகப் படாமல், தனக்குக் காரணமான அஸ்மிதையை நோக்கி அந்தர்முகப்பட்டு ஸ்வரூப நாசம் பெறுகிறது. இதுதான் எதிரிடையான பரிணமம் பெறல். மநம் நாசமுறுகிறதினால், அது சம்பந்தமாகவுள்ள சூக்ஷ்மமான கிலேசங்களும் நாசமடைகின்றன.

11. த்யாநஹேயாஸ்தத்வ்ருத்தய:॥

(ஸ்தூலமான கிலேசங்களான) விர்த்திகள் தியாநத்தினால் தள்ளத்தக்கவைகள்.

குறிப்பு:—முன் சூத்திரத்தில் வாஸநாரூபமான சூக்ஷ்மமான கிலேசங்கள் அழிவுறும் முறை உபதேசிக்கப்பட்டது. இந்த சூத்திரத்தில் ஸ்தூலமான கிலேசங்கள் (அவைகளே விர்த்திகளாம்) அழிவுறும் முறை சொல்லப்படுகின்றது. அதாவது அவைகள் தியாநத்தால் அழிகின்றன.

அழுக்கான வஸ்திரம் தோய்க்கப்பட்டால் அதன் ஸ்தூலமான மலம் முதலில் போகின்றது, பின்பு உவர்மண் முதலியவை சேர்த்துத் தோய்த்தால் அதன் சூக்ஷ்மமான மலம் போகின்றது. மலத்தின் வாஸனையானது வஸ்திரம் அழியும்வரை நிற்பதாகும். வஸ்திரம் அழிந்தால் அதுவும் அழியும், அவ்விதமே அடர்த்தியான கிலேசங்கள் கிரியா யோகத்தால் பிரிந்து விலகியும், தியாநத்தால் ஸூக்ஷ்மமாகியும் பின்பு மநோநாசத்தால் நாசமடைகின்றன.

12. க்லேஶமூல: கர்மாஶயோ த்ருஷ்டாத்ருஷ்டஜந்மவேதநீய:॥

லும் ஜனங்களுக்குள் இறந்துபோனவர்களான பிதுர்க்களுக்கு உண வின் அவா அதிகமாக விருக்குமென்ற நம்பிக்கை ஆழ்ந்தும் அகன் றும் இருக்கின்றது. அதனால் இறந்துபோனவனது கல்லறையிடத் தில் அவனுடைய தாய் தந்தையர்கள் முதலியவர் அநேகர் சோற் றுக்காக அலையும் பிதுர்க்களைத் திருப்திபண்ணும்பொருட்டு பலவா றான் கிரியைகளையும் கர்மங்களையும் செய்கின்றார்கள்.

7. சந்தான உற்பத்தி விஷயத்தைப்பற்றி இந்தியா தேசத் திற்போலவே தீராத ஆவல் எங்கும் பரவியிருக்கின்றது. ஒரு சீனன் பிரியத்துடன் வேண்டும் உலகப்பேறுகளில் முதன்மையில் சந்ததி; அதற்குப் பிற்பாடுதான் படிப்பையும் பணத்தையும் கோருகிறான். இது காரணமாக சைனாதேசத்தில் குழந்தைகளின் பிறப்பு ஏராளமானது; அவர்களிற் இறப்பும் ஏராளமானது; 100க்கு 90 பேர் மாண்டுபோகின்றார்கள். பத்துப் பெண்குழந்தைகளுக்கு ஒரு பெண் குழந்தை இறக்கும் போதும் தோன்றுகின்றது.

ஆத்மநாதன்.

## நன்மொழி.

118. "அற்றன் றுதலைதான் மனஞ் செய்தல்
சொற்றன் மாட்டு நிகழ்த்தல் பிறனோர்த்தன்
மற்றித் தன்மை படுமாயின் மாண்பிலாக்
குற்றப் பொய்யென் றுரைப்பர் குணமிக்கார்"—
நீலகேசியுரை மேற்கோள்.

119. "தீவினை யென்பதி யாதென வினவி
ஆய்தொடி நல்லா யாங்கது கேளாய்,
கொலையே களவே காமத் தீவிழை
வுலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்,
பொய்யே குறளை கடுஞ்சொற் பயனில்
சொல்லெனச் சொல்லிற் றோற்றுவ நான்கும்,
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
றுள்ளந் தன்னி லுருப்பன மூன்றுமெனப்,பத்துவகையால்"
மணிமேகலை, 24-ம் காதை.

## நோயற்ற வாழ்வை யடையும் முறை.

அடியிற்கண்ட நான்கு விதிகளை யநுஷ்டித்தால் நோயில்லாமல் வாழலாமென்று ஓராங்கில வைத்தியர் சொல்லுகின்றார்.

(1) அதிக உணவும் அடிக்கடி உண்ணுதலும் நலமன்றாம். யோகிக்கு மதியத்தில் ஒருவேளை போஜனம், போகிக்கு, அதாவது சுகமாய் உலகவாழ்வை விரும்புகிறவனுக்குப், பகலிலும் இரவிலும் சேர்ந்து இரண்டுவேளை போஜனமும் நன்றாம். உண்ணும் உணவும் மிதமாயும் சாத்துவிக உணவாகவும் இருத்தல்வேண்டும். சரீரமானது பல யந்திரங்களமைந்த ஒரு தொகுதி. அடிக்கடி உணவு உட்கொண்டால் யந்திரங்களுக்கு ஓய்வு ஒழிவு இல்லாமல் எப்போதும் தொழிற்படும்படி செய்வதாகும். அதனால் யந்திரங்களின் வலிமை குன்றி அவை வியாதிகளுக் குள்ளாகும்.

(2) இடைநடுவில் எவ்விதத் தின்பண்டமும்கூடாது. "நண்மை நுகரேல்" என்ற ஔவையார் வசநம் இங்கு கவநிக்கத்தக்கது.

(3) உண்ணுங்காலத்தில் ஜலபாநம் பண்ணக்கூடாது. உண்ட மேல் 2 நாழிகைக்குப்பிறகு ஜலபாநம் பண்ணவேண்டும். ஜீர்ணிப்பதற்கு, வாயிலும் இரைப்பையிலும் பெருங்குடல் ஆரம்பத்திலும் ஜீர்ணம் செய்விக்கும் நீர்கள் இருக்கின்றன. உணவு சம்பந்தித்தவே அந்நீர்கள் சுரக்கின்றன. அவை சுரந்து, ஊறி, உணவைத்தாக்கி, பக்குவப்படுத்தும் சமயத்தில் ஜலம் உட்கொண்டால் நலமுண்டு. அதற்குமுன் உட்கொண்டால் அது ஜீர்ணிக்கும் நீர்களுடன் கலந்து அவைகளின் சக்தியைக் குறைக்கும்.

(4) ஒரு வாரம், அல்லது ஒரு பக்ஷத்திற்குஒருநாள் எவ்வித உணவும் உட்கொள்ளாமல் சுத்தப் பட்டினியாயிருத்தல் நலம்.

ஞான பக்தி விஷயங்களின் நோக்கத்தின்மேலல்லாமலும், தேக சௌக்கியத்தைக் கருதியும் நம் முன்னோர்கள் பலவாறான உபவாச (பட்டினி) திநங்களை ஏற்படுத்தியிருக்கின்றார்கள். ஏகாதசி, அமாவாசை, கிருத்திகை, சோமவாரம், பௌர்ணமி முதலியன. உபவாஸம் என்றால் (ஈசுவரன் அல்லது பரமாத்மாவின்) சமீபத்திலிருத்தல். பரமாத்ம தியாநம் நன்கு நடைபெற வேண்டுமானால் பட்டினியாயிருத்தல் வேண்டும். எந்தத் தியாநத்திற்கும் மூளையில் ரத்தம் இருத்தல் வேண்டும். உணவு இரைப்பையிலிருக்குமாகில் மூளைக்கு ரத்தம் போகாமல் இரைப்பையை நாடும். சரீரத்திற்குச் சோர்வு நிகழும். "உண்டால் களைப்பு தொண்டர்களுக்கு முண்டு" என்ற பழமொழி இங்கு கவனிக்கத்தக்கது. இக்காலத்திலோ உபவாஸம் என்றால் புதிய புதிய இனிய உணவுகளை உட்கொள்ளுதலென் றாகிவிட்டது. எவ்வித ஈசுவர ஆராதனையும் போஜநத்திற்கு முன் செய்தால் பலனுண்டு.

சுப்பிரமணியன்.

---

கலைசைச் சிலேடை வெண்பா:—கலைசை என்ற வூரிலிருக்கின்ற பரமசிவன் மீது, ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிகள் என்பார்,சிலேடையாக (பல் பொருளுள்ள சொல் தொடர் அணியில்) இயற்றிய செய்யுள்-இதற்கு ஸ்ரீமாந் கிருஷ்ண சுவாமி பாவலர் உரை செய்துள்ளார். சில சில பாக்களுக்கு, மூன்று அர்த்தங்களும் விவரிக்கப்பட்டுள்ளன. இவ்வுரை நலமுள்ளது. இவ்வுரையின்றேல் இவ்வெண்பாக்களை சாதரண ஜநங்கள் அர்த்தம் பண்ணுதல் இயலாது. இத்தகைய புத்தகங்கள் இக்காலத்தியர்களுக்கு அதிக உபயோகமில்லாவிடினும் தமிழ் பாஷா அபிவிருத்தியை நோக்க இவைகள் வேண்டுவனவேயாம். இது நன்ருய் அச்சு இயற்றியிருக்கிறது, இதின் விலை அணு 5 தான்.

பார்வதியம் என்னும் பாலிகா பூஷணம்:— இது கதா ரூபமாக, செய்துள்ள விவேக நூல். இதின்கண், யுவதிகளும், தருணிகளும் பொதுவாய் நடந்துகொள்ளவேண்டிய ஒழுக்க முறைகளும், உலக நீதிகளும், ஸ்திரீகள் பர்த்தாவினிடமும், அந்நியர்களிடமும், சுற்றத்தார்களிடமும் ஒழுகும் முறைகளும், துஷ்ட ஸ்திரீகள் துஷ்ட வாலிபர்களின் லக்ஷணங்களும் அவர்களைத் தவிர்க்கும் முறைகளும், இன்னும் ஸ்திரீகளுக்குரிய நற்குணங்களும் சீலங்களும், விவரிக்கப்பெற்றிருக்கின்றன. ஒவ்வொருஸ்திரீயும் தனிமையாக வாசிக்கவேண்டிய புஸ்தகம் இது. சிற்சில வசநங்களையும், பச்சையான சிலவிஷயங்களையும் தவிர்த்திருந்தால் இந்நூல் மிகவும் சிலாக்கியமாக இருக்கும். யாவரும் படிக்கும் படியாக எளிய நடையில் இஃதுள்ளது. பாலக்காடு மேலாறுகோடு கிராமம் பிரஹ்மஸ்ரீ வேங்கடேசுவர ஐயரவர்களால் இந்நூல் இயற்றப் பெற்றிருக்கிறது. இதன் விலை அணு 8 தான். இது சென்னை கார்டியன் பிரஸ்ஸில் பிரசுரமானது.

சுதேச வைத்திய ரத்நம்:— இப்பெயருள்ள வைத்தியநூல் கும்பகோணத்திலிருக்கும் ஸ்ரீமான், எஸ், சந்திரசேகரர் என்பவர்களால் இயற்றப்பெற்றது. இவர்கள், பொதுவான சுகாதார விஷயங்களையும், பதார்த்தங்களின் குணங்களையும், அவைகளை வியாதிகளுக்கு உபயோகப்படுத்தும் முறைகளையும் யாரும், முக்கியமாய் நாட்டுவைத்தியர்கள் அறிந்துகொள்ளும்படி எளிய தமிழ் நடையில் எழுதியுள்ளார். இப்புத்தகத்தில் பிரஸ்தாபிக்கப்படும் ஔஷதங்களை உட்கொள்ளும் அளவைக்கிரமங்கள் ஆங்கில கிரமங்களுடன் நம் தமிழ் நாட்டில் வழங்கும் அளவைக் கிரமங்களும் சொல்லிருப்பின், இப்புத்தகம் இன்னும் அதிகப் பயன்படும். இப்புத்தகத்தின் விலை ரூ 1.அதிகம்.குறைந்தால் இதைப்பலரும் வாங்கிப்பயன் பெறுவார்கள்.



சன்மார்க்கம்:— இது, மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பத்தாமாண்டு நிறைவேற்றக் கொண்டாட்டக்காலத்தில் மகிபாலன்பட்டி ஸ்ரீமான் மு. கதிரேசச் செட்டியார் அவர்களால் வாசிக்கப்பெற்ற வியாஸம். சைவ சித்தாந்தத்தின் உண்மையைத் தெளிவாய்,எளிய தமிழ் நடையில், அழகாய் இவ்வித்வான் பேசியுள்ளார். இது முதலில் செந்தமிழ்ப் பத்திரிகையில் வந்தது. பலருக்கும் இது நன்கு பயன்படுமாறு இப்போது தனியே வெளிப்படுத்தப்பெற்றது. அறிஞர் யாரும் படிக்கும்படியாக இதற்கு விலை ஏற்படுத்தப்படவில்லை எனத்தோன்றுகிறது. இஃது ஒரு பெரிய உபகாரம்.

நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் சீர் திருத்தம்:—இதுவும் ஸ்ரீமான் மு. கதிரேசச்செட்டியார் அவர்களின் வியாஸம். மேலச்சிவபுரிச் சன்மார்க்க சபையின் இரண்டாம் வருஷ பூர்த்திக் கொண்டாட்ட பெருஞ்சபையில் ஷை செட்டியாரவர்கள் செய்த உபந்நியாசமிது. மகா-ள-ள-ஸ்ரீ கதிரேசச் செட்டியார் அவர்கள் தென்மொழி வடமொழிகளில் சிறந்த வித்வான். சிறப்புவகையாக, தம் ஜாதியார்களின் பிரயோஜநார்த்தமாக இவ்வுபந்நியாசம் திகழினும், பொதுவகையாக யாவருக்கும் இவ்வுபந்நியாசம் பயன்படக்கூடியது. சிற்சில விடங்களில், தமிழ் நடை இன்னும் எளிதாக விருப்பின்,இவ்வுபந்நியாசம் அதிகம்பெயர்களுக்கு உபயோகமாக இருக்கும். சீர்திருத்தமுறையில் அநேக நல்லவிஷயங்களை ஷை செட்டியாரவர்கள்விவரித்திருக்கிறார்கள். இப்புத்தகம் செட்டிகள் நாட்டில் பரவி, நற்காரியம் செய்யும் இயல்பினது. ஒவ்வொரு நாட்டுக்கோட்டை நகரவாஸியும் இதைப்படிப்பானுகில், இதிற்கண்ட சீர்திருத்தமுறைகளை அநுஷ்டானத்தில் கொண்டுவர முயலுவான். இப்படி பலர் செய்வார்களாகில், செட்டிநாடு நலம் பெறும். அதன் மூலம் நம் பாண்டிய நாடு மேன்மை அடையும். பொருட் செல்வத்துடன் கல்விச்செல்வமும் நாட்டுக்கோட்டை நகரத்தார் தம்மிடம் அமையப்பெறுவாராகில் தேசம் சிரேயஸ் பெறும் என்பதில் சந்தேகமில்லை. இப்புத்தகமும் இனுமாக யாவரும் பெறலாமெனத் தோன்றுகிறது.

புதுப்பத்திரிகை வரவு. தமிழ்—இப்பெயருள்ள புதிய மாதாந்தப்பத்திரிகை சென்ற டிசம்பர் மாதம் 12வ முதற்கொண்டு திண்டுக்கல்லில் பிரசுரமாகி வருகிறது. ஒவ்வொரு பத்திரிகையும் ஓர் ஓர் நோக்கத்தின் மேல் வெளி வருதல் நலம். அவ்விதமின்றி இதுபொதுவகையாகக்கல்வி அறிவு ஒழுக்கங்களைப் பரவச்செய்யும் ஒருமாதாந்தப்பத்திரிகையாம். இதன் வருஷ சந்தா ரூ 1 தான். இதன் முதல் சஞ்சிகையைப்பெற்றேம். நல்ல தமிழ் நடையில் சில விஷயங்கள் எழுதியுள்ளன. இதன் பத்திராதிபர் ஸ்ரீமான அ. சிவப்பிரகாசம்பிள்ளை அவர்கள். எத்தனை பத்திரிகைகள் ஏற்பட்டாலும் அவைகள் உலாவ நம் தேசத்தில் இடமுண்டு.

பத்திராதிபர்.

ஸ்ரீமத் ஆதி சங்கராசாரிய பகவத் பாதர் நான்கு முக்கிய ஸ்தாநங்களில் நாலு மடங்களை ஸ்தாபித்தார்கள். மைசூர் ராஜ்ஜியத்தில் சிங்கேரி மடம், ஜகந்நாதம் அல்லது புரி என்னும் க்ஷேத்திரத்தில்,கோவர்த்தந மடம், துவாரகையில் சாரதா மடம், உத்தரகண்டத்தில், அதாவது ஹிமாசலத்தில் ஜோதிர்மடம் என்பவைகள். இவைகளில், முதல் மூன்று மடாலயங்கள் ஏதோ ஒருவிதமாகவாவது நடத்தப்பட்டு ஸ்வரூப முள்ளவைகளாக வருகின்றன. அவைகளில், தனித்தனி, குரு சிஷ்ய சம்பிரதாயப்படி இப்போதும் சந்நியாசிகள் மடாதிபதிகளாக இருந்து வருகின்றார்கள். ஹிமாசலத்திலுள்ள ஜோதிர்மடம் இப்போது, இருக்கிற இடம்கூடத் தெரியாமல் காடாக இருக்கிறது. அதை நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவர ப்ரம்மஹாமண்டல என்ற சபையின் மூலம் முயற்சிகள் நடைபெறுகின்றன.

## சீர்காழியில் பிரஹ்மஞாநசபையின் கூட்டம்.

சீர்காழியில், தஞ்சாவூர் ஜில்லாவின் பிரஹ்மஞாந கிளைச்சங்கங்களின் பெரிய சபை (Conference) சென்ற ஜனவரிமீ 20, 21 உகளில் கூடியது. மாதுஸ்ரீ ரான்ஸம் அம்மாள் அக்கிராசநம் வகித்தார்கள். சீர்காழி கிளைச்சபையின் தலைவராகிய மகா-ா-ா-ஸ்ரீ சிதம்பரநாத முதலியார் அவர்கள் மிகவும் பிரியத்துடனே விருந்தினரை உபசரித்து, சபையின் காரியங்களை நன்றாய்க் கொண்டுசெலுத்தினார்கள். அவர்கள் செய்த நல்வரவு உபந்நியாசத்தில் பிரஹ்மஞாந சபையின் உயர்வையும், உலகத்திற்கு அதனால் உண்டாகிக்கொண்டுவரும் பிரயோஜநத்தையும், மாதுஸ்ரீ அந்நிபெஸண்டு அம்மாள், மாதுஸ்ரீ ரான்ஸம் முதலான அறிஞர்கள் செய்யும் ஜநாநுகூல கைங்கரியங்களையும், சபைகள் அடிக்கடி கூடுவதால்உண்டாம் நலங்களையும் பற்றி விஸ்தாரமாக விவரித்தார்கள். மாதுஸ்ரீ ரான்ஸம் அம்மாள், செய்த உபந்நியாசத்தில், ஜந உபகாரமான எல்லா கைங்கர்யங்களும் இச்சபையின் கருத்துக்களுக்கு சம்மதமானவைகளென்றும், பலவாறான மதங்களின் உயர்நலத்தை அறிந்து அநுஷ்டிக்க வேண்டுமெனறும், ஹிந்து மதம் ஞாநக் கருவூலமாக இருக்கிறதென்றும், அதன் கண்ணுள்ள உண்மைகளை அறியவேண்டுமென்றும், ஆசரிக்கவேண்டுமென்றும்,அவைகளுக்கு உடல் பொருள் ஆவி மூன்றையும் தியாகஞ் செய்யவேண்டுமென்றும், மதங்களின் உண்மைகளை உள்ளபடி அறிந்தால், உலகத்திலுள்ள துக்கங்கள் குறைவுபடுமென்றும், இன்னும் பலவாறாக கேட்டோர் மநம் உத்ஸாகம் பெறும்படியாக வசநித்தார்கள். டேனிஸன்—என்ற ஆங்கில கவியின் கிரந்தமாகிய “இன் மெமோரியம்” என்றதினின்று வாக்கியங்களை எடுத்துக்



காட்டி, அக்கவியின் உயர்நலமமைந்த ஞாநபாவங்களைப்பற்றி மகா-ா-ா-ஸ்ரீ எஸ். வி. சுப்பிரமணியஐயர் அவர்கள் யாவரும் களிக்கும்படி மிகவும் சிரத்தையுடன் ஆங்கிலத்தில் உபந்நியசித்தார்கள். அடியிற்கண்டபடி மற்றவர்களின் உபந்நியாசங்கள் தமிழில் நிகழ்ந்தன.

பிரஹ்மஸ்ரீ மதுரை ப. நாராயண ஐயர் அவர்கள்—திரிபுர் தகனம் அதன் உண்மை.

ஸ்ரீமான் வி. ராமச்சந்திரநாயுடு அவர்கள்—அப்பியாசயோகம்.

பிரஹ்மஸ்ரீ லக்ஷ்மிநாராயண ஐயர் அவர்கள்—ஸ்ரீ கிருஷ்ணவதாரத்தின் பால்ய லீலைகள், அவைகளின் உண்மை.

ஷை தஞ்சாவூர் சுப்பிரமணிய சாஸ்திரிகள்—குருதர்சநம்.

மாதுஸ்ரீ ரான்ஸம் அம்மாள் செய்த முடிவுரையில், ஞாநதீக்ஷைகளின் உற்பத்தியைப்பற்றியும், சுக்கிரகிரகத்தினின்று, பூமியின்கண் 3-ம் மனிதவர்க்கம் நடைபெறும் காலத்தில் “ஜோதிர்மயமான தேவர்கள்” உலகத்திற்கு வந்து யோகசித்தியால் சரீரங்களை எடுத்து, ஞாநதீக்ஷாக் கிரமங்களை ஸ்தாபித்தார்களென்பதையும்* கால்டியா, எகிப்து முதலிய தேசங்களில் நடைபெற்ற தீக்ஷா முறைகளையும், தீக்ஷாக்கிரமங்களினால், ஒருவன் ஜநஸமூகத்திற்குக்கைங்கர்யம் செய்தலுக்குரிய தொண்டனாகிறான் என்பதையும்† பக்தி என்றால் அன்பின் மிகுதி, அதாவது ஜீவராசிகளுக்கு நலம்பட வாழ்தல் என்பதையும், உண்மையான ஞாநமின்னது என்பதையும், (ஓரேபரவஸ்து உளது, அது முப்பான்மையாய் வியக்தப்படுகிறது, சிருஷ்டி பரலர்களாக ஸப்த பிரஜாபதிகள் ஏற்படுகிறார்கள், தேவகணங்கள் உண்டாகிறார்கள், மனிதன் ஈசுவரனின் அம்சமாக விருக்கிறான், பிரகிருதியான பாசத்திற்குட்பட்டு பல ஜன்மங்களில்உழன்று, மூன்று லோகங்களிலும் வரத்துப் போக்குள்ளவனாய் நடைபெற்று அநுபவஞாநம் பெறுகிறான்.) ஆசுர மார்க்கங்களான, பிராணிபலி முதலியவைகளைத் தவிர்க்கவேண்டுமென்பதையும், சன்மார்க்கமுறைபற்றிஒழுகவேண்டுமென்பதையும்,அப்படி நடைபெற்றால், இனி சமீபத்தில் வரும் அவதார புருஷனை அறிந்து அவர் அநுக்கிரகம் பெறலாமென்பதையும் பற்றி விஸ்தாரமாக உபந்நியஸித்தார்கள். ஒருநாள் இரவிலும்,சந்திரஹாஸன்என்ற நாடகம்,நடந்தது. மற்றொருநாள் இரவில் சிறு பெண்குழந்தைகள் பிரிடிஷ் ராஜாங்கத்தின்

---

* மதுரை பிரஹ்மஞாநசபையின் 41-ம் துண்டுப் பத்திரிகையைப் பார்க்க,

† குறிப்பு:—“அன்பர்பணி செய்யவெனையாளாக்கி விட்டுவிட்டால், இன்பநிலை தானே வந்தெய்தும் பராபரமே” என்ற தாயுமானவர் வாக்கு இங்கு கவனிக்கத்தக்கது.

வரலாற்றை, கும்மி மூலமாக அபிநயத்துடன், ஆடிப்பாடினுர்கள். 102 அங்கத்தினரும் 300, பொதுஜநங்களும் கூடினுர்கள். எல்லாம் விமரிசையாகக் குதூஹலத்துடன் நடந்தது. சுபம்.

**ஸ்ரீமான் தோமஸ் பிளாம்:—** இவர்கள் சென்ற மீ 21வ முதல் 25வ வரை அடியிற்கண்ட விஷயங்களைப் பற்றி, சித்திர வர்ணப்படங்களுடன், எல்லார்மனத்திலும் பதியும்படியாக,மதுரை பிரஹ்மஞாந மந்திரத்தில்உபந்நியாசம் செய்தார்கள்—(1) ஸ்வப்நங்களின் உண்மை, (2) புவர்லோகங்களும் அதின்கண் வஸிக்கிறவர்களும் (3) கடவுள் பிரபஞ்சத்தில் அந்தர்யாமி (4) மநச் சங்கற்பங்களும் அவைகளின் சக்தியும்.

ஷை யார் சென்ற மாதம் 25வ முதல் 28வ வரை சிவகங்கையில் மேற்கண்டவிஷயங்களைப்பற்றியும் மரணம் அதின் பிறகு நிகழும் சம்பவங்களைப் பற்றியும், உபந்நியாசம் செய்தார்கள்.

ஷை உபந்நியாஸங்கள் மிகவும் பயனுள்ளவைகளாக இருந்தன.

**1911-ஹூ த்தின் ஜனக்கணக்கு விஷயம்:—**நம் தேசத்தில் $31\frac{1}{2}$ கோடி ஜநங்களிருக்கின்ருர்கள். அவர்களை, மதங்கள்பற்றி விவரிக்கில் அடியில் வருமாறு—

17-நாஸ்திகர்.

50-கடவுள் உளரோ இலரோ என்பதைப் பற்றிய விசாரணை பயனற்றது என்பார்.

$21\frac{3}{4}$ கோடி-ஹிந்துக்கள்.

243000-ஆரிய ஸமாஜர்கள்

5504-பிரஹ்மஸமாஜர்கள்

6 கோடியே 60 லக்ஷம்—முகம்மதியர்கள்.

1 கோடியே 5 லக்ஷம்—மரம், செடி, கொடி, கல்-இவைகளில் கடவுளை ஆராதிப்பவர்.

1 கோடியே 5 லக்ஷம்—பௌத்தகர்கள் பர்மா தேசத்திலுள்ளவர்கள்.

3 லக்ஷத்து முப்பத்து மூவாயிரம்—பௌத்தர்கள் இந்தியாவில்.

15 லக்ஷம்—ஜைனர்கள் பம்பாய் ராஜதானியிலும், மத்தியமாகாணத்திலும்.

30 லக்ஷம்—சிக்கர்கள் —பஞ்சாப் மாகாணத்தில்.

1 லக்ஷம்—பார்ஸிகள்—பம்பாய் ராஜதானியில்.

21 ஆயிரம்—யூதர்கள்.

38 லக்ஷத்து 76ஆயிரம்—பலவகுப்பினரானகிறிஸ்தவர்கள். முன் 1901 ஹூ க் கணக்கின்படி 29 லக்ஷத்து 23 ஆயிரம் பெயர்கள் இருந்தார்கள்—இப்போது 10 லக்ஷத்து 43 ஆயிரம் அதிகமாககூடி இருக்கிறுர்கள்.

பத்திராதிபர்.

# பூர்ணசந்திரோதய அநுபந்தம்.

பகவான் பதஞ்சலி மஹரிஷி அருளிச்செய்த

## யோகசூத்திரம்.

(தமிழ் மொழிபெயர்ப்பு.)

☞ பிறர் இதை அநுமதியின்றி பிரசுரம் செய்யக்கூடாது.

ப. நா.

17। த்ரஷ்ட்ருத்ருஶ்யயோ꞉ ஸம்யோகோ ஹேயஹேது꞉॥

புருஷனுக்கும் புத்திக்கும் உள்ள சம்பந்தமானது (ஹேய) துக்கத்திற்குக் காரணமாம்.

குறிப்பு:— (1) புருஷனிடத்திலிருக்கின்ற சைதந்நிய சக்தியானது புத்தியில் பிரவேசிக்கின்றதினால், உதாஸீனனான புருஷன் திரஷ்டா எனப்படுகின்றான். திருச்யம் என்றால், புத்தியில் தோன்றுகிற எல்லாவிஷயங்களுமாம். புத்தியென்பது பிரதானத்தின் அதி சூக்ஷ்மமான நிலைமை. மநஸ், சித்தம், அகங்காரம், புத்தி முதலியன பிரகிருதியின் பரிணாமங்கள்.

(2) புருஷன் ஹிருதயகுகையில் இருக்கிறான். அவன் ஸமீபத்திலிருக்கிறது புத்தி. அதனால் புத்தியை மாத்திரம் புருஷன் அறியலாம். அதனால் புத்தியைத் திருச்யம் எனச் சொல்லலாம். மற்றைய வஸ்துக்கள் புருஷனுடன் ஸாக்ஷாத் ஸம்பந்த மின்மையால், அவைகளைத் திருச்யம் என எப்படிச் சொல்லுதல் கூடும்? இதற்குச் சமாதானம், புத்தியானது எல்லா விஷயங்களையும் இந்திரியங்கள் மூலமாய்க் கிரஹித்து, அவ்வவ்விஷயங்கள் ரூபமாகத் தன்னைப் பரிணமித்துக்கொள்ளுகின்றது. அத்தகைய புத்தியைப் புருஷன் சாக்ஷாத்கரிப்பதால், புத்தியில் பரிணாமமாக அமைந்திருக்கின்ற எல்லா விஷயங்களையும் புருஷன் அறிந்தவனாக ஆகின்றான். அதனால் எல்லா விஷயங்களும் திருச்யமாக ஏற்படுகின்றன.

(3) புருஷனிடமுள்ள சைதந்நிய சக்தியைப் புத்தி அடைவதாலும் புருஷனுக்கு அடுத்து சமீபத்தில் புத்தி இருக்கின்றமையாலும் இரண்டும் (புருஷனும் புத்தியும்) ஒன்றுபோலத் தோன்றுகின்றன. அயஸ்காந்தத்தைப்போல, புத்தியானது புருஷனிடமுள்ள சக்தியை ஆகர்ஷித்து, புருஷனும் தானும் அபேதமாகத் தோன்றுகிறது. இந்தஅபேதப் பிராந்தி தான் அவித்தை எனப்படும். இது தான் துக்கத்திற்குக்காரணம். இப்பிராந்தியை விலக்குவதினால் கைவல்லியம் ஏற்படும். முள் தனிமையாக இருந்தால் யாதொரு கெடுதியுமில்லை. அது காலில் தைத்தால் துக்கமுண்டாகிறது. அதைப் பிடுங்கி எறிந்தால் துக்கம் நீங்குகிறது. அதுபோல புத்திக்கும்

புருஷனுக்கும் ஏற்பட்டிருக்கிற ஸம்யோகம் நீங்கினால் துக்கம் நீங்குகிறது.

(4) புத்தியின் சத்துவத்தை, ரஜஸ்தமோ குணங்கள் மேல் போகவிடாமல் பாதிக்கின்றன. அவை யிரண்டையும் விலக்கி, சத்துவகுணம் மாத்திரம் மேலிடும்படி செய்தால், புத்தியானது புருஷஸாக்ஷாத்காரத்தைப் பெறுகிறது.

18. ப்ரகாஶக்ரியாஸ்திதிஶீலம் பூதேந்த்ரியாத்மகம் போகாபவர்கார்த்தம் த்ருஶ்யம் ॥

திருச்யம் என்பது பிரகாசம், கிரியை, இருத்தல், இவைகளை உடையதாகவும், பூதங்கள், இந்திரியங்கள் ரூபமாகவும், (புருஷனுக்கு) போக கைவல்லியங்களைக் கொடுக்கக் கூடியதாகவும், இருக்கிறது.

குறிப்பு:—திருச்யத்தின் ஸ்வரூபம் இந்த சூத்திரத்தில் சொல்லப்படுகிறது. பிரதானம் முதல் பௌதிகங்கள் வரை (ஸ்தாவர ஜங்கமங்கள் வரை) யுள்ள ஸமஸ்த பதார்த்தங்களும் திருச்யமெனப்படும். பிரகாசம், கிரியை, இருத்தல், என்பன முறையே சத்வ, ரஜஸ், தமோ குணங்களின் காரியமாம். குணங்கள் சூக்ஷ்மமாகவிருக்கின்றமையால், அவைகளைப் பிரஸ்தாபிக்காமல் அவைகளின் காரியங்கள் பிரஸ்தாபிக்கப் பட்டிருக்கின்றன.

பிரகாசம் ஸத்வகுணம் மேலிடுதல்.

கிரியை ரஜோகுணம் மேலிடுதல் சஞ்சலமாக இருத்தல்.

இருத்தல் மேற்கண்ட இரண்டும் இல்லாமல் மோக ரூபமாக இருத்தல்.

வஸ்துக்கள் குணங்களால் தாரதம்மியப்படுகின்றன. பிரதானமே பஞ்சதந் மாத்திரைகளாகவும், பூதங்களாகவும் கர்மேந்திரிய ஞானேந்திரியங்களாகவும் புத்தி, சித்தம், மநஸ், அகங்காரங்களாகவும் பரிணமிக்கின்றது. போகம் அபவர்க்கம், விஷய நுகர்ச்சி, வீடு அல்லது கைவல்லியம் இவைகளைப் புருஷனுக்குக் கொடுக்கிறவைகளாக மேற்கண்ட பிரதானத்தின் பரிணமங்களிருக்கின்றன.



சைவ ஸித்தாந்தத்தில் சொல்லுகிறபடி தநு, கரண, புவந, போகங்கள், புருஷன் மேன் மேலும் சித்த சுத்தி பெற்றுக் கடைமுறையில் வீடுபெற ஏற்பட்டிருக்கின்றன.

திருச்யம் அல்லது பிரபஞ்சத்தின் பிரயோஜநம் யாது? புருஷன் அநுபவம் பெறுதலின் பொருட்டாம். புருஷன் தன் இயற்கை நிலைமையின் அருமையையும் பெருமையையும் மறந்தான். ஒரு கதை—இந்திரன் ஒரு காலத்தில் பன்றியாக ஆயினன்; தன் பெட்டைப்பன்றியுடனும், குட்டிகளான பரிவாரங்களுடனும் உல்லாசமாகவும் சந்தோஷமாகவும் காலங்கழித்தான். தேவர்கள் இந்திரனின் நிலையைக்கண்டு வியஸநமுற்று "ஓ! பன்றியே! நீவிர் இந்திரனுவீர். நீவிர் பன்றியாக உழலுவானேன் என்று வினவ, இந்திரனான பன்றி சொன்னதாவது:—"நான் இந்நிலையிலேயே இருக்கட்டும். இது எனக்குச் சுகமாக இருக்கின்றது. தேவலோகம் எனக்கு வேண்டாம்." இதைக் கேட்ட தேவர்கள் வியப்புற்று இன்னவிதம் செய்தால் இந்நிலையைவிட்டு இந்திரன் திரும்புவார் எனத் தெரியாமல் திகைப்புற்றார்கள். பின்பு ஒன்றொன்றாய்ப் பன்றிக்குட்டிகளை அவர்கள் கொல்ல ஆரம்பித்தார்கள். கடைசியில் பெண் பன்றியையும் கொன்றார்கள். எல்லாப் பன்றிக்குட்டிகளும் தன் இணை பிரியாத பெட்டைப்பன்றியும் இறந்தமேல் பன்றி ரூபமான இந்திரன் மிக வியஸநமுற்று 'கோ!' என்று கதறி அழுகவே, தேவர்கள் அப்பன்றி சரீரத்தை வெட்டிப் பிளந்தார்கள். அதனின்று திடீரென்று இந்திரன் வெளிவந்து, இது என்ன கனவு! என்று சிரித்தான். இவ்விதம் புருஷன் பிரகிருதியுடன் ஸம்பந்தித்து, அபேதநினைவுகொள்ளுகிறான். தேஹோஹம் என்ற பாவனை பெறுகிறான். தன்னுடைய உண்மை நிலையை மறக்கிறான். புருஷனை ஆத்துமா உண்மையில் சுத்தனாகவும் அஸங்கனாகவும் இருக்கிறான். பிரபஞ்சமாகிய திருச்யத்துடன் புருஷன் சம்பந்தம் பெறுகிறதலினால், சுக துக்கங்களுக்குட்பட்டவன்போலக் காணப்படுகிறான். இச்சம்பந்தத்தை அநுபவத்தினால் விலக்கிக்கொள்ளுதலின் பொருட்டு யோகசாஸ்திரம் பிரவிர்த்தித்தது (இது விவேகாநந்தர் சொல்லியது).

19. விஶேஷாவிஶேஷலிங்கமாத்ராலிங்கானி குணபர்வாணி ॥

விசேஷங்கள், அவிசேஷங்கள், லிங்கம், அலிங்கம், இவை (சத்வ, ரஜஸ், தமஸ்) என்ற குணங்களின் பரிணமங்கள்.

குறிப்பு:—(1) விசேஷங்களாவன, பிருதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாயம் என்ற 5 மஹா பூதங்களும், 5 கர்மேந்திரியங்களும், 5 ஞானேந்திரியங்களும், மநம் 1, ஆக 16, இவை எப்போதும் மாறி மாறிக்கொண்டிருக்கின்றமையால் ஸாங்கிய சாஸ்திரத்தில் விகாரங்கள் எனப் பெயர் பெறும். இவை 16ம் காரியங்களே அல்லாமல் காரணமல்ல

(2) அவிசேஷங்களாவன பஞ்சதந்மாத்திரைகள், அகங்கார தத்துவம் ஆக 6 இவை புத்தி (மஹத்தத்துவத்தின்) யின்காரியங்களாயும், மேற்கண்ட 16 விசேஷங்களுக்குக் காரணமாகவும் இருக்கின்றன. இவை புத்தியின் காரியமாக இருக்கின்றமையால் விகிருதி என்றும், விசேஷங்களுக்குக் காரணமாக இருக்கின்றமையால் பிரகிருதி என்றும், இரண்டு தன்மைகளை உத்தேசித்து பிரகிருதி விகிருதி என்றும் பெயர் பெறும்.

(3) லிங்கம், மஹத்தத்துவம்: மூலப்பிரகிருதியான அலிங்கத்தில் இது லயமடைவதால், இது லிங்கமெனப் பெயர் பெறும்.

(4) அலிங்கம், மூலப் பிரகிருதி, இது லயம் அடையக்கூடியது, பிறிதொன்றுமில்லை. அதனால் இது அலிங்க மென்னப்படும். இது குணங்களுக்குள் தாரதம்மியமில்லாத ஸாம்யா அவஸ்தை.

விசேஷங்கள் 16, அவிசேஷங்கள் 6, மஹத்தத்துவம் 1, மூலப்பிரகிருதி 1, ஆக தத்துவங்கள் 24, புருஷன் உள்பட 25.

20. த்ரஷ்டா த்ருஶிமாத்ர: ஶுத்தோ(அ)பி ப்ரத்யயானுபஶ்ய: ॥

பார்க்கிறவன் (புருஷன்) அறிவை (ஞானத்தை) ஸ்வரூபமாக உடையவன் சுத்தன், அதாவது பரிணமமில்லாதவன். ஆயினும் புத்தி விர்த்தியை அநுசரித்து விஷயங்களைக் கிரஹிக்கிறன்.

குறிப்பு:—(1) புருஷன் சுத்தனாய் இருப்பினும், புத்தியின் விர்த்தி விசேஷங்களில் பிரதிபிம்பிக்கின்றமையால், புத்தியின் சல



நங்கள் புருஷனுடையவையாக நினைக்கப்படுகின்றன.

(2) புருஷன், சேதநன். புத்தி, அசேதநம். புத்திக்குப் பல சாமக்கிரியைகள் வேண்டும். அவையாவன, இந்திரியங்கள், விஷயங்கள் முதலியன.

(3) புருஷன் ஸ்வார்த்தன், புத்தி பரார்த்தம், சைதந்யமே புருஷன்.

21. ததர்த்த ஏவ த்ருஶ்யஸ்யாத்மா ॥

திருச்ய வஸ்துவின் ஸ்வரூபம் (இருத்தலானது) அவனுடைய (புருஷனுடைய) பிரயோஜநத்திற்காகவாம்.

குறிப்பு:—(1) திருச்யம், அதாவது வஸ்துக்களானவை காரியம், காரணம், கரணம், என குணத்திரயங்களாக இருக்கின்றன. அவை புருஷனின் போகத்தின் பொருட்டும், மோக்ஷத்தின் பொருட்டுமாம். பிருஹதாரண்ணியக உபநிஷத்தின் மைத்திரேயி பிராஹ்மணத்தில்

"ஆத்மனஸ்து காமாய ஸர்வம் ப்ரியம் பவதி"

என்பது இவ்விஷயத்தையே உபதேசிக்கின்றது.

(2) திருசய வஸ்துக்களுக்கு அழிவு உண்டு. புருஷனுக்கு அழிவில்லை.

(3) அத்வைத வேதாந்திகளின் அபிப்பிராயத்தில், பிரஹ்மமே பிரபஞ்சஸ்வரூபமாகத் தோன்றுகிறது எனபதாம். சாங்கய யோகிகள் மதத்தில் புருஷனும் பிரபஞ்சமும் வேறாக இருப்பினும், புருஷனுடைய சம்பந்தமின்றி பிரபஞ்சம் (ஸத்) இருத்தலைப் பெறுதலின்றாம்.

22. க்ருதார்த்தம் ப்ரதி நஷ்டமப்யநஷ்டம் ததன்யஸாதாரணத்வாத் ॥

போகம், அபவர்க்கம் இரண்டையும் அடைந்தபுருஷனை (முக்தனை) உத்தேசிக்க, பிரதாநம் நாசமுற்றலும், அது முக்தனுக்கும் மற்றவர்களுக்கும் பொதுவாயுள்ளமையால், (அம் மற்றவர்களை உத்தேசிக்க) நாசமுறுகிறதில்லை.

குறிப்பு:—(1) யோகிகள் மதத்தில் புருஷர்கள் பலர். அதனுல் ஒருவன் முக்தி பெறுவதினுல், பிரதாநம் அவனைக் குறித்து நாசமடைந்தாலும், மற்றவர்களுக்கு நாசமடைகிறதில்லை. வேதாந்திகள் மதத்தில், புருஷன் ஒருவனே ஆயினும், புருஷன் பிரதிபிம்பிக்கின்ற உபாதிகள் பலவாறுக இருக்கின்றமையால், உபாதிகள் நாசமுறும் வரையில் ஸம்ஸார பந்தம் உண்டு.

(2) பிரதாநம் ஒன்று, புருஷர்கள் பலர். இது ஸாங்கிய யோகிகளின் ஸித்தாந்தம். அடியிற்கண்ட மந்திரம் இங்கு கவனிக்கத்தக்கது.

“ அஜாமேகாம்லோஹிதஶுக்லக்ருஷ்ணாம்
பஹ்வீ:ப்ரஜா:ஸ்ருஜமாநா:ஸரூபா:”

ச்வேதாச்வதரோபநிஷத்

புருஷார்த்தம் பெற்றவனுக்குப் பிரதாநம் இல்லை. புருஷார்த்தம் பெறுதவனுக்கு, பிரதாநமானது, மஹதாதிரூபமாகப் பரிணமித்து, ஸம்ஸாரத்தை யுண்டுபண்ணுகிறது. இதனுல் ஒருவன் முக்திப்பேறு மற்றவர்களுக்கு இன்றும் என்பது ஸித்தாந்தம் பெறுகிறது.

23. ஸ்வஸ்வாமிஶக்த்யோ: ஸ்வரூபோபலப்திஹேது: ஸம்யோக: ॥

திருச்யம், திரஷ்டா, இவ்விரண்டின் சக்திகளின் சம்பந்தமானது ஸ்வரூபத்தை அடைதலுக்குக் காரணமாம்.

குறிப்பு:—(1) ஸ்வம், திருச்யம் அதன் சக்தி என்றுல், ஜடத்தன்மை. பார்க்கத்தகுந்ததாக இருத்தல் புத்திமுதல்கீழ்க்கடையில் உள்ள யாவற்றும் திருச்யமாம். ஸ்வாமி என்றுல் (ஸ்வத்தை) உடையவன், அதாவது புருஷன், புத்தி (அந்தக் கரணம்), விஷயங்கள் (திருச்யங்கள்) இருக்கின்றன. புத்தி இந்திரியங்களுடன் சேர்ந்து வெளிநோக்கி விஷயங்களைக் கிரஹிக்க, போகங்கள் உண்டாகின்றன. அதனுல் பந்தம் ஏற்படுகிறது. புத்தி, இந்திரியங்களின் சம்பந்தத்தைத் தவிர்த்துப் புருஷனை அறிதல் அபவர்க்கம் எனப்படும். அதுவே கைவல்லியமாம். இவ்விதம் யோகியான



வன் கைவல்லிய நிலையைப் பெறவே, பிரதாநம் இவனுக்கு, முன் சூத்திரத்தில் சொல்லியபடி நாசத்தை அடைகிறது.

(2) கடோபநிஷத்திலுள்ள அடியில்வரும் மந்திரம் இந்த சூத்திரத்தை விளக்குகின்றது.

ஆத்மேந்த்ரியமநோயுக்தம்।
போக்தேத்யாஹுர்மநீஷிண:॥

இதன் பொருள்: இந்திரியங்கள், மநம், இவைகளுடன் புருஷன் சேருங்கால், போக்தா என்று அறிஞர்கள் சொல்லுகிறுர்கள்.

விமுக்தஶ்ச விமுச்யதே ॥

என்ற வசநத்தினுல், இவைகளைவிட்ட புருஷன் முக்தனுகிறுன் என்று சொல்லப்படுகிறது.

(3) ஸம்யோகம் என்பது முன் 1-வது குறிப்பில் கண்டபடி புத்தியின் மூலமாய் விஷயங்களுடன் சம்பந்தித்தலும் விஷயங்களைத் தவிர்த்து புத்தி புருஷனை ஸாக்ஷாத்கரித்தலுமாம். பிரகிருதி புருஷ ஸம்யோகத்தின் முடிவான பிரயோஜநம் யாதெனில், புத்தி முதலில் விஷயங்களுடன் சம்பந்தம்பெற்று, விஷய நுகர்ச்சியின் துக்கத்தை அநுபவத்தால் அறிந்து அவைகளைச் சிறுகச் சிறுகத் தவிர்த்து, வெளிநோக்கியதான புத்தி பின்பு அந்தர் முகப்பட்டு ஆத்ம விஷயங்களில் பயின்று, கடைமுறையில் ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெறுதலுக்கேயாம். ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெறவே, பிரகிருதி புருஷவிவேகம் ஏற்படும். ஞாநம், அதாவது புருஷதர்சநம் பிரகிருதி புருஷ வியோகத்திற்குக் காரணமாம். அதர்சநம் (அவித்தை) பிரகிருதி புருஷ ஸம்யோகத்திற்குக் காரணமாம். அவித்தை என்ற திறைநீங்கவே, ஸ்வதஸ்ஸித்தமான கைவல்லியம் ஸித்திக்கிறது. இந்த தாத்பரியத்தைக் கீதையின் முடிவில் அர்ஜுநன் சொல்லியிருக்கிறுர்:—

“ நஷ்டோமோஹஸ்ஸ்ம்ருதிர்லப்தா ”

இதன்பொருள் “மயக்கம் தீர்ந்தது. முன்னிருந்த ஞாநத்தை திரும்பப் பெற்றேன். இதில் ஸ்மிருதி என்ற வார்த்தையா

னது கவனிக்கத்தக்கது. ஸ்மிருதி=முன்னினைவு. அதாவது எப்பொழுதும் ஜீவாத்மாவானவன் ஸர்வஞ்ஞன்; மயக்கத்தினால் அறியாதவன் போலிருக்கிறான். மயக்கம் நீங்கவே ஸ்வாபாவிகமான ஞானம் வெளிப்படுகிறது.

24. தஸ்ய ஹேதுரவித்யா ॥

அதற்கு (பிரகிருதி புருஷ ஸம்யோகத்திற்கு)க் காரணம் அவித்தையாம்.

குறிப்பு:—முன் சூத்திரத்தில் ஸம்யோகத்தின் ஸ்வரூபம், காரியம், இரண்டும் சொல்லப்பட்டன. இந்த சூத்திரத்தில் அதன் காரணம் சொல்லப்படுகிறது.

அவித்தை (பிராந்திஞானத்தினால் உண்டாகிற வாஸனை) ஸம்யோகத்திற்குக் காரணம். திரஷ்டாவையும், திருச்யத்தையும் ஒன்றுபடுத்தி, நான் என நினைத்தல் பிராந்தி. அந்த பிராந்தி வாஸனையுடன் கூடிய மநமானது பிரளய காலத்தில் பிரதானத்தில் லயத்தை அடைந்து ஸ்ருஷ்டிகாலத்தில் அந்த பிராந்தி வாஸனையுடன் வெளிவருகிறது. இத்தன்மையான மநஸ்வினால் தான் பந்தம் உண்டாகிறது. அதனால் அநாத்மாவில் ஆத்மாவை நினைத்தும், நான் எனது என்ற பாவனைகளை ஜீவன் விருத்தி செய்கிறான்.

25. ததபாவாத் ஸம்யோகாபாவோ ஹாநம்
தத்த்ருசே: கைவல்யம் ॥

அது (அவித்தை) இல்லாமல் போதலினால் (முன் சொல்லிய) புத்தி, புருஷன் இரண்டின் ஸம்யோகம் அற்றுப்போகின்றது. (இதற்கு) ஹாநம் என்று பெயர். அதுவே (இந்த ஹாநம் நிகழ்தல்) சைதந்நிய ஸ்வரூபியாகிய புருஷனுக்குக் கைவல்யமாம்.

குறிப்பு:—முன்னர் தள்ளத்தக்கதான துக்கம் இன்னதென்றும் துக்க காரணம் இன்னதென்றும், நிரூபணம் செய்து ஹாநம் (விடுதல்) என்பது இன்னது என்று இச்சூத்திரத்தில் வியவஹரிக்கிறார். பந்த நிவிர்த்தி ஏற்பட்டால் ஸ்வதஸ்ஸித்தமான புருஷ ஸ்வரூபம் வெளியாகிறது என முன் சொல்லியபடி, இப்போதும் அவித்தை நீங்கவே, புருஷஸ்வரூபம் ஸித்திக்கிறதென்று இச்சூத்திரத்தில் சொல்லப்படுகிறது.

Registered No. M. 878.




# பூர்ணசந்திரோதயம்.

சென்னை ராஜதானியின் தென்பாகத்திலுள்ள பிரஹ்மணாநக் கிளைச்சங்கங்களின் மஹாசபையின் ஆதரவின்மேல் மதுரையில் பிரசுரமாகி நடைபெறும்

மாதாந்தத் தமிழ்ப்பத்திரிகை.


தொகுதி 2 { 1912வரு மார்ச்சுமீ 15உ / விரோதகிருதுவரு பைங்குனிமீ 3உ } பகுதி 11.



ப. நாராயண ஐயர், B. A., B. L., F. T. S.,
அ. ரங்கஸ்வாமிஐயர், B. A., B. L., F. T. S. } பத்திராதிபர்.



வருஷ சந்தா ரூ 2 தனிப்பிரதி அணா 4.

மதுரை:
விவேகபாநு அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றது.

## பொருளடக்கம்.


| | பக்கம் |
|---|---|
| பிரஹ்மஞானசபை வெள்ளி யம்பலத்தின்ஞானதூதாகும். ப. நா. | ௩௬௧ |
| ஸந்மார்க்கமுறையும் ஸம்ஸாரியும்—ப. நா. | ௩௬௮ |
| அயநம்—R. S. நாராயணசாமி ஐயர். | ௩௭௨ |
| புத்தகவரவு—பத்திராதிபர். | ௩௭௫ |
| சமாசாரம்—பத்திராதிபர் | |
| பதஞ்சலிமகரிஷி அருளிச்செய்த யோகசூத்திரம். | ௬௯ |


---



# பூர்ணசந்திரோதயம்.

தொகுதி 2 { 1912 வூ மார்ச்சுமீ 15உ
விரோதகிருதுவூ பைங்குனிமீ 3உ } பகுதி 11.

## * பிரஹ்மஞானசபை வெள்ளியம்பலத்தின் ஞானதூதாகும்.

என் சிநேகிதர்களே!

பதினைந்து தேசங்களினின்று அந்தந்த தேசங்களிலுள்ள பிரம்மஞானக் கிளைச்சபைகளிலிருந்து அநேகர் இம்மஹாசபைக்குப் பிரதிநிதிகளாக வந்து கூடியிருக்கின்றார்கள். ஐரோப்பாக் கண்டமென்ன, அமெரிக்காக் கண்டமென்ன, ஆஸ்ட்ரேலியா நாடென்ன, நாலுதிக்குகளினின்றும் ஆண், பெண், சிறியார், பெரியார், ஒரே நோக்கமுள்ளவர்களாய், ஒரே விஷயத்தில் சிரத்தாபக்தி யுள்ளவர்களாய், உயர்நலமமைந்த ஒரே லக்ஷியம் கொண்டவர்களாய், என் முன் தோன்றுகின்ற இம்மஹாசபையில் கூடியிருக்கின்றனர். நம்முடைய எண்ணங்கள் பலவாறாய் வேறுபடும். நம்முடைய பாஷை

* குறிப்பு:—காசிக்ஷேத்திரத்தில் பிர்ம்மஞான சபையின் சென்றவூ டிசம்பர்மீ கடைசியில் கூடிய பெரிய கூட்டத்தில் வந்திருந்தவர்களில் பலர் பலபாஷையில் பிரஹ்மஞான சபையின் உயர்நலத்தைப்பற்றி உபந்நியாஸம் செய்தார்கள். முடிவுரையாக மாதுஸ்ரீ அன்னிபெஸண்டு அம்மையார் ஆங்கிலத்தில் செய்த உபந்நியாஸத்தின் சுருக்கம் இது.

களும் வேறுபடும். பல மதஸம்பிரதாயங்களை அநுஷ்டானத்தில் உடையவர்களாகவிருப்போம். சமயமுறைகளிலும், ஜாதியிலும், வர்ணத்திலும், தேசங்களிலும் இச்சபையில் கூடியிருக்கின்ற நாம் வேற்றுமையை யுடையவர்களாக விருப்பினும், உயர்நலமமைந்த ஒரு லக்ஷியத்தில் ஒருமைப்பாடுள்ளவர்களாக விருக்கின்றோம். அதாவது, பொதுஜந கைங்கர்யம் செய்தல் மூலமாய் ஈசுவர கைங்கர்யம் செய்தல் என்பதும், உலகில்வாழும் ஜநங்கள் எல்லாம் சகோதரதர்மம் என்பதனுள் அடங்குகிறார்கள என்ற நலமமைந்த மெய்யுணாவைப் பரவச் செய்யும் முயற்சி என்பதுமாம். இந்த இடத்தில் பலவர்ணம் பலஜாதி பேதங்களுள்ள ஆண்பாலர்களும் பெண்பாலர்களும் எவ்விதத் துவேஷ புத்தியுமின்றி ஒரே மதத்தினராய், ஒரே கைங்கர்யத்தில் எண்ணமுள்ளவர்களாய், ஒரே லக்ஷியத்தால் தூண்டப்பட்டவர்களாய்க், கூடி இருக்கின்றமையை இவ்விடதைதில் தவிர வேறிடத்தில் நான் கண்டிலேன். ஒருவரோடொருவர் சிநேகபாவமும், சகோதரபாவமும் கொள்ளுகின்றவராய், வர்ணம், ஜாதி தேசம், பால் பேதமில்லாமல் மிகப் பிரியத்துடன் ஒருவரோடொருவர் ஸல்லாபம் செய்துகொண்டிருப்பதை நான் கண்ணுற்று மநங்களித்தேன். இனி வரப்போகும் காலத்தின் முற்குறியாக இது இருக்கிறதென்று நான் மதிக்கின்றேன். வேற்றுமைப்படுத்தும் சரீரங்களைக் கவனியாமல் எங்கும் பரவினதாயுள்ள ஆத்மா ஒன்றேயென்ற ஏகிபாவ உணர்வு இனிவருங்காலத்தில் நிகழும். இச்சபையில் பல பாஷையில் பல நண்பர்கள், அவரவர்கள் மநத்தின் கண் எழுந்த எண்ணங்களைப் பிரஸ்தாபித்தார்கள். ஆனால் அவர்கள் பிரஸ்தாபித்த எல்லா எண்ணங்களிலும் கருத்து ஒன்றே. பொதுஜந கைங்கர்ய முறையில் "நான் முந்துவேன், நான் முந்துவேன்" என்ற அவாவானது ஒவ்வொருவரையும் தூண்டியதாக நான் நினைக்கிறேன். இக்காலத்தில் பலதேசத்தார்கள் வியாபாரப் போட்டியால் ஒருவரை யொருவர் மேற்போக வேண்டுமென்று பேராசை கொண்டு, போராட்டம் செய்கின்றனர். இத்தன்மையான சுபாவம் நீங்கி மநச்சாந்தராய் அறிவு நிறைந்தவராய் ஜநகைங்கர்யத்தில் ஈடுபட்டவராய் ஆதல் எக்காலம்? அக்காலம் சீக்கிரமாய் வரவேண்டுமென்பது என் பிரார்த்தனை. ஆத்ம ஐக்யபத்யமுள்ள உணர்ச்சி



யுடையவராய் இனிவரப்போகின்ற மனிதவர்க்கம் அமையுமென்றும், அது உலகத்தில் சமாதானத்துடனே நடைபெற்று வாழுமென்றும், நாம் எல்லோரும் எதிர்பார்க்கின்றோமல்லவா? இப்போது உலகத்தில், ஜநக்கணக்கில், ஜநங்கள் விர்த்தியாகிறார்கள் என்றும், உலக நாகரீக முறைகளிலும், கல்வி அறிவிலும், ஞானத்திலும், எங்கேபார்த்தாலும் ஜநங்கள் அபிவிர்த்தி யடைகின்றார்கள் என்றும் கண்கூடாய்ப் பார்க்கின்றோம். பழமையான தப்பெண்ணங்கள் வரவரக் குறைகின்றன, மறைகின்றன. வீணான பழைய சமுசயங்கள் வரவரத் தொலைகின்றன. இனிவரும் நற்காலத்திற்குத் இது நலமான சூசனையாம். ஆயினும் முற்றும் நற்காலம் விடிந்துவிட்டதென்று நாம் நினைப்புக்கொள்ளா வண்ணம், ஹெலினம்பாள் அம்மையாரும், அன்னிபெஸண்டு அம்மையும் முழு மோசக்காரர்களெனச் சிற்சில சமயங்களில் பத்திரிகைவாயிலாகநமதுகண்ணுக்குத் தோன்றும். இவ்வபிப்பிராயம் அநேகமாய் ஜநங்கள் மறந்திருப்பார்களென்று நான் மதித்தேன். மறுபடியும் ஒருமுறை அதைப் படிக்க வியப்புக்கொண்டேன். ஆயினும் அத்தன்மையான பிரஸ்தாபம் துவேஷத்தினால் உண்டானதென நாம் நினைக்கவேண்டாம். அறிவின்மையே அதற்குக் காரணமாம். ஜநங்கள் பொதுவாய்த் தம்மைப்போல் பிறரை நினைக்கின்றார்களல்லவா? எக்காரியத்தைச் செய்திடினும் "தமக்கு" "தமக்கு" என்று ஒரு காரியத்தைச் செய்கின்றார்கள! தன்னுடைய அநுபவத்திலில்லாத ஒரு காரியத்தை ஒருவன் செய்திடில், அவனையும் அனைது காரியத்தையும் உலகத்தினர் பிசகாக நினைத்தல் ஸகஜந்தானே! சாதாரணமான உலகத்தாரின் அநுபவத்திற்குப் புறம்பான விஷயங்களைநாம் செய்தோமாகில், நம்மைப் பித்தரென்றே அவர் மதிப்பாரன்றோ! நமது கருத்தையும், நோக்கத்தையும் சற்று ஆராய்வோம். பிறர் நலம்பெற நாம் தொழிற்படமுயலுகின்றோம். இஃது இக்காலத்தியர், தர்மமென்று கொள்ளும் சித்தாந்தத்திற்கும், விரோதமாயிருக்கின்றது. அதுவோ, வலியான் எளியானைத் தாக்கி அவன்பேரில் ஏறுதலாம்; நாமோ உலகத்தார் மதிக்கின்ற உலகநலங்களை விரும்புகின்றோம் அல்லோம். நம்மொழுக்கம் உலகவொழுக்கத்திற்கு முரணுகின்றதன்றோ? அதனால் பொதுஜன அபிப்பிராயத்தில் நாம் பித்தராகவாவது இருக்கவேண்

டும். அல்லது மோசக்காரராகவாவது இருக்கவேண்டும். இவ்விரண்டில் ஒன்றுதான் நம்முடைய தகைமையாகவேற்படும். உலகில் ஒவ்வொருவனும் யாதேனும் ஒரு சுயநலத்தால் தூண்டப்பட்டு ஒரு கர்மம் புரிகிறான்; தனக்கு நஷ்டத்தை உண்டுபண்ணிக்கொண்டாவது மாற்றானைச் சகோதரனென்று கருதி அவன் நலம்பெற வேண்டுமென ஒருவன் ஒரு கருமம் செய்தால், அவன் நடப்பை ஜனங்கள் அறியமாட்டார்கள்தானே. அஃது அவரது அநுபவத்தில் இல்லாமையால் என்றறிக. அவனை அறிவிலி என்றுதானே மதிப்பார்கள். பொதுஜந அநுபவத்திலில்லாத விஷயத்தை உலகம் வெறுத்தல் இயல்புதானே! இனிமேல் வரவர ஜநசமூகத்தில் உலகசம்பத்திலும் உலகச்செல்வாக்கிலும்ஒருவன்உயரவிரும்புதலைப் பார்க்கிலும், உலக கைங்கர்யம செய்தல் நலம் என்ற எண்ணம் பரவும். மேலும் பூர்வீக சரித்திரத்தை ஆராய்வதில், வெற்றிபெற்ற அரசர்களுடைய பெயர் உலகில் நெடுநாள் நிற்காமல் மறைந்துபோகவும்,ஜந ஸமூகத்திற்குக் கைங்கர்யம் செய்த பெரியார்களின் பெயர் பிரகாசமாய் இன்றும் ஜ்வலித்துக்கொண்டிருக்கவும், பார்க்கிறோம். அதனால், அறிவின்மைபற்றி ஒழுகுகிறதாக நம்மை ஜநங்கள் மதித்தாலும், முற்காலத்திய பெரியாரை நினைக்க மனச் சோர்வு நீங்கி நாம் உத்ஸாகம் பெறுவோம். ஜயபேரிகை முழங்கின ஜர்க்ஸீஸ் என்ற பார்ஸீக தேச சக்கிரவர்த்தியின் பெயரை எவரேனும் இப்போது நினைப்புக்கொள்ளுகிறார்களா? இல்லை. தத்துவசாஸ்திரியாகவும், குருவாகவும் ஞாநியாகவும் விளங்கின பைதகோராஸ் என்பவரின் ஞாபகத்தை இன்னும் நினைப்புக் கொள்ளுகிறார்களன்றோ? உலகத்தில் நிரதிசய கம்பீரம்பெற்று உலகத்தியர் சிரத்தாபக்தியுடனே வணங்கப்பெறுகிறவர் யாவரென்று மதிக்கிறீர்கள்? ராஜ்யத்தை ஜெயித்தமன்னர்களல்லர். புத்தர் கிறிஸ்து இவர்கள் போன்றவர்களாவர். நித்ய வஸ்துவை யனுகும் வழியைக்காட்டிய ஞாந குருக்களே உலகத்தாரால் மதிக்கப்படுகின்றார்கள், அன்பு பாராட்டப்படுகின்றார்கள், தனக்கு நல்வழி காட்டிய மஹா புருஷனையன்றோ ஒவ்வொரு மனிதனும் வணங்குவான், ஆராதிப்பான். ஜர்கஸீஸ் என்பார் ஜயித்த நூறு ராஜ்ஜியங்களை விரும்பி, ஒருவன் ஸ்ரீ கிருஷ்ணபகவான் திவ்விய வாக்கினால்



சொன்ன பகவத்கீதையை இழக்கச்சம்மதிப்பானோ? பிரகிருதியின் உயர்நலம் நசுரமெனமதித்து புருஷனின் நித்தியமான உயர்வுறவுயர்நலத்தைக் கான ரூபமாக வசனிக்கின்ற ஞானிகள் தாம் ஞானபூமிக்கு அரசர்கள்! மனிதர்களின் ஹிருதயங்களை ஆளும் இறைவர்களாவர்! அத்தகையர்களான மஹா புருஷர்களைப்பண்புடனேயும், பணிவுடனேயும், நிதர்சனமான திருஷ்டாந்திகளாக நம்முன்னர் வைத்து அவர்களை வழிபட்டு அவர்கள் செய்துகாட்டிய ஒப்பில்லா உயர்நலமுள்ள உலக கைங்கர்யத்தை அற்பமேனும் நாமும் நம்முடைய சிற்றறிவுக்கும் திறனுக்கும் தக்கபடி செய்யத் துணிவோம். அப்படி செய்வதில் பிறர் அறிவிலிகள் என நம்மை ஏளனம் செய்தால், அப்போது, அம்மஹா புருஷர்கள் வகுத்துக்காட்டிய வழிபற்றி அன்றோ நாம்நடைபெறுகிறோம் எனத்தைர்யம்கொளல்வேண்டும்.

2. சென்றகாலத்திய விஷயத்தைவிட்டு, இனிவரப்போகும் காலத்தின் விஷயத்தைப்பற்றி யோஜிப்போம். நாம் இனிச் செய்யவேண்டிய தொழில் நம்முடையதே. இந்நகரைவிட்டுப் பிரிந்து இச்சங்கத்தில் நீங்கள் பெற்ற உயர்நலமுள்ள எண்ணங்களுடனேயும் உத்ஸாகத்துடனேயும் நீங்கள் அவர் அவர் இடம்போய்ச் சேர்வீர்கள். இவ்விடத்தில் நீங்கள் பெற்ற நலமுள்ள எண்ணத்தையும் உத்ஸாகத்தையும், நீங்கள் சந்திக்கு மவர்களுக்குக் கொடுமின். உலக கைங்கர்யமே நலமுள்ள முறைஎன நீங்கள்கொண்ட தீர்மானத்தைப் பிறருக்கு அறிவுறுத்துமின். இத்தன்மையான சபையில், நலமமைந்த உத்ஸாகமும், நற்கார்யம் செய்தலில் மன எழுச்சியும் ஒவ்வொருவருக்கும் உண்டாகி இருக்கும். அந்த உத்ஸாகத்தையும் மனவெழுச்சியையும், நழுவவிடாமல், நீங்கள் தொழிற்படும் களத்துக்குக் கொண்டுபோமுன் உங்கள் மனத்தில் எழுகின்ற நற்பாவங்கள் நற்கர்மங்களாகப் பரிணமிக்கும்படி செய்மின். வருகிற வருஷத்தில் ஆதியாற்றில் திரும்பக்கூடுவோம். அப்போது ஒவ்வொருவரும் தாம் செய்திருக்கும் நற்கார்யங்களை விஸ்தாரமாகப் பிரஸ்தாபிக்கும்படி அநேக நன்மைகளை நீங்கள் புரிந்துவருவீர்களென நம்புகிறேன். நம்முடைய பிரியமான பிரஹ்மஞான சபைக்கு இன்னும் அதிகமாக நன்றாய் உழைக்க, தீவிரமான உத்ஸாகத்தையும், மாசற்ற

மனத்தையும் உடையராகிச் சந்திப்பீர்களென நான் எதிர்பார்க்கிறேன்.

3. நம்முன்னர், நாம் செய்யவேண்டியதாகிய வேலை அதிகமாக இருக்கிறது. நம்முடைய சபையால் வெளிவந்த புத்தகங்களில், ஒரு மஹாபுருஷன் அவதாரம் சமீபத்தில் ஏற்படும் எனப்பிரஸ்தாபம் நிகழ்கின்றதை நீங்கள் அறிவீர்கள். அவரை, ஹிந்துக்கள், லோககுரு அதாவது ஞானபண்டிதரென்றும், பவுத்தர்கள், போதிஸத்வா அதாவது ஞானக்கருவூலமென்றும், கிறீஸ்துவர்கள், அவரை கிறீஸ்து அதாவது இறைவனின் ஞானதூதரென்றும் சொல்லுவார்கள். இந்த பிரஹ்மஞான சபையைச் சேரும் ஒவ்வொருவரும் பெறும் நலம் என்னவென்றால், அவர் அவருடைய சமயத்தின் உயர்வை இழக்காமல் புதிய ஞான தேஜஸைப் பெறுதலும், அப்படிப் பெறுதலினால், எல்லா மதங்களிலும் பல நாமங்களால் ஆராதிக்கப்பெறும் ஞானகுரு நாதன் ஒருவனே யென்றும் நிதர்சனமாகும். அதனால் ஒரு மதத்தினின்று வேறு மதத்திற்கு ஒருவன் மாற்றம்பெறவேண்டுவதில்லை. ஏனெனில் எல்லா மதங்களிலும் ஆராதிக்கப்பெறும் பரமபுருஷன் ஒருவனே! "ஒருவனே" தேவன். அவரை நோக்கியே எல்லா மதஸ்தர்களின் பிரார்த்தனைகளும் ஸ்துதிகளும் செல்லுகின்றன. அவரிடமிருந்தே, எல்லா அருட் பிரசாதங்களும் வருகின்றன "எந்த உருவத்தை யார் ஆராதித்தாலும், அதன் மூலமாய் என்னையே அவர் ஆராதிக்கின்றனர்" என ஸ்ரீ கிருஷ்ணபகவான் உபதேசித்துள்ள நலமுள்ள வாக்கியம் உங்கள் ஞாபகத்திற்கு வரும் "உலககுரு" என்பார் ஒருவரே! அவருக்கு எந்தப் பெயர் வைத்து வசனித்தால் என்ன? பரம புருஷனை ஈசுவரன் ஒருவனே. அவனுக்குப் பல குணங்களிருப்பினும், அவர் ஒருவரே யாவர். பலபெயர்களால் அழைக்கப்படுகிறார் அன்றோ? உண்மையில், "ஒருவனே தேவன். ஒருவனே பரமகுருவாம்". எல்லாச் சமயங்களும் அவரையே நோக்குகின்றன.

4. சமீபத்தில், இங்கிலாண்டில் யார்க்கு என்னும் பட்டணத்தின் கண்ணுள்ள கிறீஸ்து கோயிலில் கானன் ஆஸ்டின் என்னும் கிறீஸ்துபாதிரியார் செய்தஉபந்நியாசத்தில், திரும்பவும் அவதாரம்



சீக்கிரத்தில் ஏற்படும் என பிரஸ்தாபித்தார். கிறீஸ்துவர்கள், அம்மஹா புருஷனை "லோககுருவை" கிறீஸ்து என்றுதானே சொல்லுவார்கள். ஸ்ரீகிருஷ்ணன், போதிஸத்வா, கிறீஸ்து முதலிய பெயர்கள். ஒரே மஹா புருஷனைக் குறிக்கும் பல பெயர்கள். நம்மன் பிற்குரியர் ஒரே பிரபு ஆவார். கடவுள் ஒருவராயினும், அவருடைய எந்த மூர்த்தியைப் பிரியத்துடன் பக்தன் வழிபடுகிறானோ, அந்த மூர்த்தியே, சொர்க்கத்தில், இவன் முன்னர்த்தோன்றுவர். இவனை ஆதரிப்பர். இவனுக்கு வேண்டியவைகளை எல்லாம் அளிப்பர். "எவ்வெவர் எப்படி நினைந்தாலும், அவ்வவருக்கு அப்படி த்தோன்றுவர்", அவ்விதமே, மஹா குருவும் ஒருவரே ஆயினும், அவரை எம்மூர்த்தி ரூபமாக வணங்கி வழிபடுகிறோமோ அம்மூர்த்தி ரூபமாகவே வந்து நமக்கு ஞான உபதேசம் செய்வர். நம்மை நல்வழிப் படுத்துவர். வார்த்தை பேதமே அன்றி, வஸ்து பேதமில்லை. உலகத்தார்க்கு நமது பிரஹ்மஞானசபையானது வெள்ளியம்பலம் என்ற ஞானக்குருக்களின் சபையின் தூதாக ஏற்பட்டுள்ளது. அந்த வெள்ளியம்பலமே, இந்த சபைக்கு அதிஷ்டானம். அதைத்தான் நாம் வற்புறுத்திச் சொல்லுகின்றோம். லோககுரு அவதாரம் ஏற்படும் என்பது உண்மைஎன்று உறுதியாகச் சொல்லுகின்றோம். அவர் வரவை ஹிமாசலத்தை நோக்கிக் கண்களை நிமிர்ந்து பாருங்கள். அவர் வரவை எதிர்பாருங்கள். இந்நாட்டில் சமீபகாலத்தில் அவர் பாதங்களின்ஸ்பரிசம் ஏற்படும். அவர் ரிஷியாகத் தோன்றினும் தோன்றுவர். அவர் ராஜனாகத் தோன்றினும் தோன்றுவர். உயர் உத்தியோகத்தை வகிக்கினும் வகிப்பர். தாழ்ந்த உத்தியோகத்தை வகிக்கினும் வகிப்பர். வெளித் தோற்றத்தால் அவரைக் காண்பதரிது. ஆடையாலும், ஆபரணத்தாலும், அவரைக் காண்கிலம். அன்பார்ந்த ஹிருதயத்தால் அவரைக் காணலாம். அவ்விதம் அறிய ஆயத்தம் செய்துகொண்மின்.

---

ப. நா.

## ஸந்மார்க்க முறையும், ஸம்ஸாரியும்.

(304-ம் பக்கத் தொடர்ச்சி.)

---

7. அவன் ஞாநியாக ஆவது எவ்விதம்? அவன் ஆன்ம முறையாகிய சன்மார்க்கத்தில் ஒழுகுவது எவ்வண்ணம்? கருதும் லக்ஷியத்தை மாற்றவேண்டும். இந்த ஜன்மத்திலாவது, இனிவரும் ஜன்மத்திலாவது, தான் ஆர்ஜிக்கின்ற பொற்குவியலின் பிரயோஜன மின்மையை உணரவேண்டும்! பிறர் நலம்பெறச்செய்யும் கைங்கரியத்தின் உயர்வை அறியவேண்டும். ஈசுவர சங்கல்பம் நடைபெறும் முறையின் மகிமையின் ஒரு அம்சத்தையாவது கண் உள்நோக்கிப் பார்க்கவேண்டும். உலக ஜீவனமென்றால் தியாக மென்றுணர வேண்டும். தியாகத்தினாலன்றோ உலகங்களெல்லாம் இரக்ஷிக்கப்படு கின்றன. மனம் மொழிமெய்களை வசப்படுத்தி புத்தியின் உயர்நலத்தை பெற்றவனன்றோ அவன் ஞாநபூமியில் தீரனாவானன்றோ? தான் பெற்றிருக்கிற குணங்களை விடவேண்டுவதில்லை; ஆனால் இதுவரை சுயநலம் பாராட்டினான். அத்தன்மையை இப்போது விலக்கவேண்டும். பிறர் துயரத்தைக்கண்டு உபேக்ஷையாக விருந்தான். அம்மனோநிலையை இப்போது தவிர்க்கவேண்டும். ஆயிரக்கணக்கான ஜனங்கள் பசிப்பிணியால் வருந்தவும் அவர்கள் செல்வத்தைக்கைப் பற்ற இரக்கமின்றி இதுவரை ஒழுகலாயினன். தன் சகோதரனைக் கூட வருந்தச்செய்து இம்சித்து நடைபெறலாயினன். இத்தன்மையான மனோதர்மத்தை இனி தொலைக்கவேண்டும். இதுகாறும் சுயநலத்தையே லக்ஷியமாக முன் வைத்திருந்தான். இனிமேல் பிறருக்குக்கைங்கர்யம் செய்வதைத்தன் லக்ஷியமாகநினைக்கக்கடவன். பிறரை ஹிம்சித்து நசுக்குவதற்காக உபயோகித்துவந்த பலத்தைஇனித்தள்ளுண்டோரை விடுவிப்பதற்காக உபயோகிக்கக்கடவன். வணிகர் பூமியில் அவன் குபேரனாக இதுகாறுமிருந்தான். இனி ஞாநபூமியில் ஞாநதீரனாக ஆகுவான். இனி அவன் வாழ்நாள் முழுமையையும் ஜநசமூகத்துக்கு நலம்பயக்கும்படியாக அர்ப்பணம் செய்வான். அவன் சம்பத்தெல்லாம் பிறருக்கு உதவிபுரிய வகித்திருக்கிறான். வெளி ஒழுக்கமாத்திரம் வேறுபாடின்றும் முன்போலவே ஆர்ஜிப்பன். ஆனால் பிறர்சேவைக்காக மனத்தின்கண்ணுள்ள லக்ஷியத்தை மாற்றவேண்டும். மனத்தின்கண் கருத்தை மாற்றவேண்டும். அவன்



ஒழுக்கம் வெளிப்படையாக எவ்விதமிருந்தாலும் மனம் இத்தன்மையாக விருத்தல்வேண்டும். ஒருவன் உலக வாழ்வில் அழுந்தினவனாக விருப்பதும், அல்லது ஆன்மா நோக்கமாய் ஸந்மார்க்கத்தில் நடைபெறுவதும் ஒருவன் மநோபாவத்தைப் பொறுத்தவென்றறிக.

8. கடமையென்ற வார்த்தையைப் பிரஸ்தாபித்தேன். ஞாநமுறையில் எக்காரியத்தைச் செய்தாலும், கடமையால் தூண்டப்பட்டுச் செய்தலே முதற்படி. நீவிர் ஒவ்வொருவரும் உலகில் செய்யும் கர்மத்தை முதன்மையில் உலகஜீவநத்துக்கு அநுகூலமா யிருக்கிறதென்று நினைத்துச் செய்வீர்கள். அப்படிச் செய்தல் குற்றமன்று. மானபங்கத்திற்கு ஹேதுவானதுமன்று. ஆனால் அவ்விதம் செய்துவருவதில் சிறுகச்சிறுக நாம் அதைச் செய்கிறோம். அப்படிச் செய்தல் நம் கடமையென எண்ணங்கொண்டு செய்ய முயலுவீர்களாயின், அதுதான் சந்மார்க்கத்தில் முதற்படி. இதில் நீங்கள் லக்ஷியத்தை மாற்றுகின்றீர்களே யல்லாமல் கர்மத்தையும் தொழிலையும் விடுகிறீர்களில்லை. செய்யவேண்டிய கடமையை முடிக்கவேண்டும். உலகமென்ற சக்கரம் அதனால் நடைபெறுகிறது. ஜநங்கள் ஆண், பெண் யாவரும் வெவ்வேறான வியாபாரமுறை,தொழில்முறை,பற்றி நடைபெற்று ஜீவநம் செய்யவேண்டியவர்களாயிருக்கின்றார்கள். வியாதிஸ்தனுக்கு மருந்து முதலியன கொடுத்து உதவுதல் வேண்டும். அறிவில்லான் கல்வி பெறவேண்டும். வலியான், மெலியான், பணக்காரன், ஏழை இவர்களுக்குள் விவகாரங்கள் நேரிடின் நடுவுநிலைமை வழுவாது நியாயமுறை நடத்தப்பெறவேண்டும். இவ்விதம் உலகிலுள்ள ஆண் பெண் யாவரும் பெரிய வியாபாரியென்ன,சிறு வர்த்தகன் என்ன, வைத்தியன் என்ன, நியாயவாதி என்ன, உபாத்தியாயரென்ன,இவர்கள்போன்று தொழில் செய்யும் ஒவ்வொருவரும் தத்தம் தொழிலைக்கடமையாக மதித்து, உலகநிகழ்ச்சியை, ஈசுவரசங்கற்பம் நிறைவேறுதல் எனவெண்ணி அதில் தாமும் ஓர் கைங்கர்யத்தைச் செய்ய அமர்ந்திருக்கிறோமென்று நினைக்கற்பாலர். "நான் இந்த வேலையில் புகுந்திருக்கிறேன். அதைப் பூர்ணமாக நிறைவேற்ற வேண்டுவது என் கடமை. நான் கல்வி கற்பிக்கின்றேன். வியாதியை சுவஸ்தப்படுத்துகிறேன். வியவகாரம் செய்கிறேன். வியாபாரம்

செய்கிறேன். பலவாறான வர்த்தக சம்பந்தங்களை யேற்படுத்துகின்றேன். இப்படிச் செய்தல் அந்தந்தத் தொழிலால் ஏற்படும் பணத்துக்காவது, செல்வாக்கு கௌரவம் இவைகளுக்காகவாவது அல்ல, என் சொந்த லாபத்திற்கன்று. ஆனால் என்னைவிட உயர் நலமமைந்த இறைவனின் சங்கற்பமான உலக கைங்கர்யம் நேர்மையாகவும் சிறப்பாகவும் நடைபெறவேண்டும் என்பதை உத்தேசித்தும்,அந்த ஈசுவர சங்கற்பநிகழ்ச்சியில் நானும் ஒரு சேவகனாகவிருந்து கைங்கர்யம் புரிவதற்கென்றும்,'' ஒருவன் எண்ணற்பாலன்.

9. இதுதான் முதற்படி. உங்களுக்குள் இதைச்செய்ய இயலாதார் ஒருவருமிலர். முன்போலவே உங்கள் கர்மத்தைச் செய்யலாம். அப்படிச் செய்வதில் நான் சொன்ன புதிதான பாவத்துடன் மாத்திரம் செய்தல்வேண்டும். கர்மம் ஒன்றே; அதைப்பற்றிய மனோபாவம் மட்டும் இப்போது வேறுபடுகிறது. வேலைக்காரன் யஜமானனை நோக்கி அவரது கட்டளையை நிறைவேற்றுமாறுபோல உலக சம்பந்தப்பட்ட கைங்கர்யத்தை நீவிர் நிறைவேற்றினவராவீர். அவனது யஜமானன் மேலுள்ள பக்தி சிரத்தைக்குத் தக்கவாறு யஜமானன் இட்ட கட்டளையை நிறைவேற்றுகிறான். இனி உங்கள் கார்யத்தை நீங்கள் செய்கிறபோது இவ்விதமாக உயர்நலமமைந்த லக்ஷியத்தை வைத்துச் செய்வீர்கள். "உலக சம்ரக்ஷணைக்குரிய கைங்கர்யத்தின் ஒரு பகுதி என் கடமையாக ஏற்பட்டுள்ளது. அதை நான் செய்கின்றேன்.'' நீங்கள் செய்கின்ற ஒவ்வொரு காரியமும் கடவுளிட மிருந்தே நேராக வந்த ஆக்ஞைப்படி செய்வதாகவேற்படும். அவரது சங்கற்பம் உலகத்தை நடத்துகின்றது. உயர்ந்த தேவர்கள் ஈசுவர சங்கற்பத்தை நடத்துவதில் தாம் ஓரோர் பாகத்தைத் தலைமேற்கொண்டு செய்யக்கூடியது. அவ்விதமே நீங்களும் செய்தவர்களாவீர்கள். ஜியார்ஜ் ஹெர்பர்ட்டு (George Herbert) என்ற ஞானியார் சொல்லியிருக்கிறபடி, வீட்டின் அறையைப் பெருக்குகிறவனும்,அத்தொழிலை ஈசுவர கைங்கர்யமென, நினைப்பானாகில், அத்தொழிலின் தன்மையை உயர்த்தினவனாவன். கைங்கர்யமாகவும், கடமையாகவும் செய்யப்படுகிற எல்லாம் ஸந்மார்க்கமுறை. தனக்கென் றில்லாமல் பொதுஜனங்களுக் கென்று செய்யும் கர்மமெல்லாம் ஸந்மார்க்கமுறை. ஆனால், இது இலகு



வான காரியமன்று. இதில் ஈசனை ஏமாற்ற முடியாது. நாம் இக்காரியத்தைச் செய்கிறோம். கடவுள் கண்டுகொண்டிருக்கிறாரா? அரைகுறையாய்ச் செய்தாலென்ன? என இவ்விதம் நினைத்தல் ஒண்ணாது. அவர் எல்லாவற்றையும் பார்க்கின்றார். அவர் பார்வை எங்குமுள்ளது, என்று முள்ளது; அதற்குத் தூக்கம் இன்று. வேலையை அவசரத்தில் அலங்கோலமாய்ச் செய்தல் ஒண்ணாது. தேவகைங்கர்யம் புரிகின்ற தொழிலாளிகள் அத்தன்மையாகச் செய்யார். அது அவ்வாறாயின், அறிவில்லாத மூடன் கார்யமாகும். தொழில் என்பது ஒரு கலை. கலை என்றால் நேர்மையாய்ச் செய்யும் வேலை. ஈசனுக்கு விசுவகர்மா என்ற பெயர் உண்டு. ஒவ்வொருவரும் அதனால் ஸகலகலாவல்லவராவர். அவ்விதமே அவர் கர்மம் செய்கின்றவருமாவர். யாதொரு குறைவுமின்றி நேர்மையாய்ச் செய்யக் கடவர். உலகில் சிறிதாயினும், பெரிதாயினும், ஈசுவர சிருஷ்டியில் அதனுடைய அமைப்பின் வனப்பு பூர்ணமாய் விளங்குவதைக்காணலாம். ஒரு பூதக்கண்ணாடியை வைத்துக்கொண்டு ஆராய்ச்சி,எவ்வளவுக்கெவ்வளவு நுண்ணியதாய் நடைபெறுகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அற்புதமானவிதமாய்ப் பொருள்களின் நேர்மையான அமைப்பு நமக்குத் தோன்றுவதாகும். ஸ்தூலக் கண்ணுக்குப்புலப்படாதது பூதக்கண்ணாடியால் புலப்படும். நுண்ணியதான இரண்டு அணு அமைப்பென்ன, நுண்ணியதான, கிளிஞ்சிலில் செய்யப்பட்டிருக்கிற அற்புதமான சித்திரவேலையென்ன, ஜியாமதி என்ற கணித சாஸ்திரத்திற்கு ஒற்றுமையாய் அவ்வளவு பூர்ணமாய் இவைகள் அமைக்கப் பெற்றிருப்பதற்குக் காரணம் யாதோ? எவரை உத்தேசித்தோ? என்றால், மனிதனிடமும் கடவுளிடமுமுள்ள குணாதிசயங்களில், பூர்ணமா யிருத்தலின் உணர்வு என்பதொன்றுண்டு. அதன் திருப்திக்காகவென்று நீ மதி. ஒவ்வொருவனுடைய சீலமும் தகைமையும் அவன் செய்து முடிக்கும் கர்மபலனால் அல்லாமல், அக்கர்மத்தை வஞ்சனையின்றிச் செய்யும் விதத்தினால் மதிக்கத்தக்கது. செய்யும் கர்மத்தாலன்றி அக்கர்மம் செய்யப்படும் முறையால், செய்பவன் குணாதிசயம் விளங்கும். இத்தர்மத்தை உங்கள் கிருகத்திலும், தொழிற்சாலையிலும், உத்தியோக விடுதியிலும், கொண்டு செலுத்தும்போது அற்பமான

ரகத் தோன்றும். ஒவ்வொருவன் கர்மத்தையும் அக்கர்மத்தின் ஒவ்வொரு பாகத்தையும் தனிப்பட ஆராயும்போது அற்பமாகவே காணும். உலக முழுவதும் இத்தர்மம் நிகழ்கிறதென்று மதித்தால் இத்தர்மம் அற்பமாகத் தோனுது. இப்போது தோன்றும் உலகம் வேறுகத் தோன்றுவதாம். அம் முகப்பார்வை எவ்வளவு வித்தியாசமா யிருக்குமென்று நினைக்கின்றேன். அப்போது உலகின் கண் நேர்மையும், அழகும் விளங்குமன்றே? இத்தர்மம் உலகில் நடைபெறுமாகில், அலங்கோலமான பரபரப்பான தொழிலில்லை. பதட்டமான கார்யமில்லை. கடைகளில் சந்தேகப் படும்படியான சரக்குகளில்லை. ஒவ்வொரு வஸ்துவும், யாதொரு விதமான மோசமான வஸ்துவுடன் கலப்பில்லாமல் தன் தன் சுபாவத்திலிருக்கும். ஒவ்வொருபொருளும் உள்ளும் புறமும், ஒன்றோடொன்று முரணுமல் யதார்த்தமாயிருக்கும். ஒவ்வொரு பொருளின் வெளிமதிப்பும் உள்மதிப்பும், ஒன்ருயிருக்கும். ஒவ்வொரு கிருகமும் குறைவின்றி நிறைவாக அமைக்கப்பெற்றிருக்கும். ரஸ்தாவின் பக்கப் பள்ளங்களான கழிவு வாய்க்கால்கள் நேர்மையாகக் கட்டப்பட்டிருக்கும். ஒவ்வொன்றும் மனிதன் சக்திக்கும் யுக்திக்கும் ஏற்ப நன்ருய் அமைக்கப்பட்டிருக்கும். பார்த்தவிடமெல்லாம் குறைவில்லா நிறைவைக் காண்போம். இத்தன்மையானஉலகத்தை நான் விவரிப்பது ஒரு கட்டுக்கதைபோல் இப்போதுதோன்றும். அதை முடியாத கார்யமாக நினைப்போம். உலகத்திலுள்ள ஒவ்வொரு மனிதனும் அவனவன் சக்திக்கும் சாமர்த்தியத்திற்கும் தக்கபடி யதார்த்தமாகத் தொழிலைக் கடமையாகச் செய்வானுயின், மேல் வர்ணித்தபடி உலகம் அமைவது இலகுவான காரியந்தான். மறுபடியும் நான் வற்புறுத்திச் சொல்லுகின்றேன். ஆன்ம லாபத்திற்குரிய சன்மார்க்கமுறையில் கடமை என்பது முதற்படியாக அமைகிறது. இது உங்களுடைய ஆற்றலுக்குப் புறம்பானதன்று. உங்கள் ஒவ்வொருவருக்கும் சமீபத்திலுள்ளது. இலகுவான காரியம் இது.

10. இதைவிட உயர்வானபடி சன்மார்க்கமுறையில் வேறென்றுண்டு. உலகில் இறைவனுடன் கூட்டுறவாய்த் தொழில்புரியுமவர்களில் ஒருவராக உங்களை மதித்தலும், கம்பீரமான இவ்வண்டபிண்டசராசரங்களில் நடைபெற்றுவரும் ஈசுவரசங்கற்ப கைங்கர்யமுறையில்



உங்களுடைய கர்மமும் ஒரு பகுதியாயமையும்படியாய்ச்செய்தலும் அவ்விதம் நினைத்தலும் ஒருபெரிய காரியந்தான். அமெரிக்காதேசத்திலிருந்த எமர்ஸன் (Emerson) என்ற ஞானியார் உபதேசித்தபடி "ரஸ்தாவின் அருகாமையில் நீ காணும் அற்பமான ஒரு தூணை இலக்ஷியமாக வைத்து நீ தொழில் புரிவதைவிடப் பரந்த ஆகாசத்திலுள்ள ஒருநக்ஷத்திரத்தை இலக்ஷியமாக வைத்து அதை நோக்கி உன் ரதத்தைச் செலுத்து. அதை முன்வைத்து உன் தொழிலைச் செய். இதுவும் உன் திறமைக்கு இலகுவானதாகும்." இதுவும் நீ செய்யக்கூடிய காரியத்தில் உயர்ந்ததாக முடியாது. உன் கடமையென்று சொன்னேன். அதைவிட மேலான தர்மம் ஒன்றுண்டு. அது உயர்நலமுள்ளது. நீ செய்யும் எல்லாவற்றையும் தியாகமாகச் செய்தலே அதுவாம். அதுவே இரண்டாம்படி. அப்படி என்றுலென்ன? அதனுலென்ன ஏற்படும்? தியாகமின்றேல் உலகமேது? நீ, நான் என்ற வேற்றுமை ஏது? உலக சிருஷ்டி தியாகத்தினுலன்றே வமைந்தது. * ஈசுவரன் ஒருசங்கற்பத்தால் பிரகிருதியை அங்கியாகச் செய்துகொண்டு அவ்வங்கியான பிரகிருதிக்குள் தன்னை யடங்கப்பெற்று அதனுள் நுழைந்து நீ, நான் என்று யாவரும் பிரக்ஞையையுடையவர்களாக அமையும்படி ஏற்படுத்துகிறுர். கிறிஸ்து மதத்தின் ஒரு உயர்ந்த உபதேசவசநமிதுவாம். ஒரு அஜம் கொல்லப்பட்டது எப்போது? கால்வேரி யென்னுமிடத்திலா? உத்தரம்: அன்று. அஃது உலகம் தோன்றிய நாள் முதல். தியாகத்தின் உயர்ந்த அர்த்தம் இதுவாம். ஈசுவரன் தன்னையே யக்ஞரூபமான தியாகம்செய்யாவிடில், பிரபஞ்சமில்லை. ஈசுவரன் தன்னை வரம்பிற்குட்படுத்திக்கொள்ளாமற்போனுல் புவநங்களில்லை. எல்லாம் யக்ஞ ரூபமான தியாகமே. பிறர் பிரக்ஞாநம்பெற்று நான்

* [illegible]
என்ற
தைத்திரீய உபநிஷத் வசநமும்புருஷசூக்தமும்இதைத்தெளிவிக்கும்.

என்ற உணர்வடைந்து கடைமுறையில், "பிரஹ்மைவாஹமஸ்மி" என்ற உயர்ந்த பூர்ண அறிவைப் பெற்று ஆநந்தம் பெறுதலுக்காகக் கருணையால் ஈசுவரன் தம்மை யக்ஞமானதியாகம் செய்து கொண்டார். உலகம் தியாகத்தை அதிஷ்டானமாக உடையது. உலகில் உண்மையானஜீவிதம் தியாகம்பற்றி நிகழ்கிறது. ஒவ்வொரு கர்மத்தையும் தியாகமாக ஈசுவரார்ப்பணமாக ஒருவன் செய்வானாகில், அவன் பூர்ணம் பெற்ற ஞானியாவான். இது கஷ்டமானபடி. முதற்படி அவ்வளவு கஷ்டமில்லை. பிறர்க்கு ஏராளமாய்க் கொடுக்கலாம். நம்முடைய வாழ்நாளைப் பிறர்க்கு அநுகூலமாயிருக்கும்படி செய்துகொள்ளலாம். ஆனால் நம்மையே நம்முடைய கைங்கர்யத்தின் தியாகமாக அர்ப்பணம்பண்ணுதலும், நாம் செய்தகைங்கர்யத்தையேசின்னாபின்னப்படுத்தலும், அவ்வழிவுபெற்ற சின்னங்களை மனம் நோகாமலும் மனம் சலிக்காமலும்பார்த்தலும், இலகுவான காரியமன்று. அதுதான் தியாகம் என்பதின்பொருள். மறுபடியும் சொல்லுகிறேன் கேளுங்கள். ஒரு நற்காரியத்தின் மேல் உங்கள் ஆயுள்நாளைச் செலுத்துவீர். உங்கள் காரியம் சித்தியாகும்படி உங்கள் சக்தியெல்லாம் புகட்டுவீர். அக்கர்மம் நிறைவேறுவதில் பிரயாசைப்படுவீர். அதற்காகப் பலதொழில் புரிவீர். தாயார் தன் கருப்பையிலிருந்து வெளிவந்த குழந்தையை எவ்விதம் அன்பு ஆதரவுடன் போஷிப்பாளோ, அவ்விதமே நீவிர் ஆரம்பித்த கர்மத்தைப் போஷிப்பீர். அக்கர்மம் அந்தோ! உம் முன்னில் சின்னாபின்னப்பட்டுச் சிதறுண்டுவிழும். அக்கருமம் தவறும். நினைத்த பலன் சித்தியாகாமல் போம். அது முடியும், அது அழியும். அது ஜீவிக்காமல் தொலையும். இத்தன்மையான கதி உம்முடைய கர்மத்திற்கு ஏற்படுமாகில் பொறுமையுடன் நீவிர்சகிப்பீரா? எத்தனை வருஷகாலங்களின் கர்மம் இது! எத்தனை வருஷகாலங்களின் நினைப்பு இது! எத்தனை வருஷகாலங்களின் தியாகத்தின் பயனிது. உம்முன் தூளியாய்ப் போவதுமிது. சூந்யதசையை யடைந்ததுமிது. இவ்வித சம்பவத்தை நீவிர் சகிப்பீரா? பொறுமையுடன் நீவிர் பார்ப்பீரா? இதைக்கண்டு நீவிர் சாந்தமாயிருப்பீரா? இன்றேல் சுயநய விருப்பத்துடன் நீவிர் கர்மங்களைச் செய்ததாக மதியுங்கள். ஈசுவர சங்கற்பத்தை நிறைவேற்றச்செய்த கைங்கர்யமாக நீங்கள் செய்ய



வில்லையென்று நினையுங்கள். நீங்கள் செய்யும் கர்மம் எவ்வளவு உயர்வான ஜீவகாருண்ணியத்தைப் பற்றியதாயிருப்பினும், உங்கள் கர்மம் அது கடவுளின்கர்மமன்று. அதனால் உங்கள் கர்மம் சிதறுண்டு போகுங்காலத்தில் நீங்கள் வருந்துகிறீர்கள். துக்கிக்கிறீர்கள். அதைச் சகிக்கிறீர்களில்லை. அது அவருடையதாயிருக்கும் பக்ஷத்திலும், அது உங்களுடையதாகவில்லாதிருக்கும் பக்ஷத்திலும், அது உங்கள் உடைமையாகவில்லாமல்தியாகமாக அமைந்திருக்கும்பக்ஷத்திலும், அதன் நலமெல்லாம் தவறாமல் உலகம்[illegible]ம்பெறவேண்டுமென்றேற்பட்டுள்ள நன்மையென்ற களஞ்சியத்[illegible] போயமையும். நீங்கள் குறித்தமுறை அவருக்கு வேண்டாமையாயின் அம்முறை சிதறுவதில் நீங்கள்வியஸனிக்கமாட்டீர்கள். நீங்கள்குறித்தமுறையோ ஒரு ஸ்வரூபந்தானே. அது உடைந்தால் அதை உயிர்ப்பித்த சகதி ஈசுவரனின் அகன்ற சங்கற்பமுறையில் வேறொரு உருவத்தைப்பெற இயலுமென மதித்து நீங்கள் பொறுமை கொள்ளுவீர்கள். அப்போதுதான் ஈசுவர சங்கற்பம் பெருகி மலர்ந்துவரும் உலகவிகாசமுறையென்ற விவஸ்தையில் நீங்களும் ஒரு கைங்கர்யம் செய்கிறவர்களாக ஆவீர்கள்.

11. மேற்கண்ட விஷயத்தைத் தெளிவாய் வேறொரு மாதிரியாய் உபமாந ரூபமாய்த் தெளிவு படுத்துவேன், கவனியுங்கள். ஒரு பெரிய ஸைந்யத்தை உதாரணமாக எடுத்துக்கொள்ளுவோம். அதைவிடப் பலமான ஒரு பகைவன் எதிர்க்கப் போகிறானென்று அச்சைந்நியம் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறது. அச்சைந்நியத் தலைவன் சண்டை நடத்தும் முறையை முன்னால் விவஸ்தைப்படுத்துகிறான், பிளான் (plan) போடுகிறான். சைந்நியத்தின் ஒருஅணிவகுப்பை ஓரிடத்திலும், மற்றொன்றை வேறிடத்திலும், அமைக்கிறான். எல்லாவற்றையும் ஒரேஉத்தேசத்தைநிறைவேற்றும் பொருட்டுநேர்மைப்படுத்தியிருக்கிறான். போர்புரியும்நாள் உதயமாகிறது. அத்தலைவன் ஒரு தூதையனுப்பி யுத்தகளத்திலுள்ள ஒரு போர்வீரனுக்கு இவ்விதம் உத்தரவு செய்கிறான். "உன் முன்னிருக்கின்ற கோட்டையை எதிர்த்து முற்றுகை போடு. அதைக் கைவசப்படுத்து. அதை விடு என்று சொல்லுகிறவரையில் சுவாதீநத்தில் வைத்துக் கொள்வாய்." இதைக் கேட்ட யுத்தவீரன் தன்னிடமுள்ள ஆட்களைக்

